# பனிச்சுவர்

(நாவல்)

மகரிஷி




**ராஜேஸ்வரி புத்தக நிலையம்**
22, 6வது தெரு,
பக்தவத்சலம் நகர்,
பழவந்தாங்கல் சென்னை-600 114.
தொலைபேசி எண் : 2320360

# ஆசிரியரின் முன்னுரை

கிராமப் பஞ்சாயத்து என்பது உயிரோட்டமுள்ள ஒரு சமூக அமைப்பின் அங்கம். இதை நன்றாக உணர்ந்தவர் மகாத்மா காந்தியும் மூதறிஞர் ராஜாஜியும். எனவேதான் மகாத்மா கிராமங்களைப் பார்த்தார்.

அவர் அரசியல் சிந்தனை மட்டுமல்ல பொருளாதார மாற்றங்கள் கூட கிராமப்புரங்களிலிருந்து உருவாக வேண்டும் என்று சொன்னார். அவரது அரசியல் மற்றும் சமுதாய சீர்த்திருத்த சிந்தனைகளும் கிராமப்புரத்தை அடிப்படையாகக் கொண்டதாகவே இருந்தது. இந்திய தேசியத்தை நேசிக்கிறேன் என்று சொல்லுகிறவர்களுக்கு இந்த கிராமராஜ்ய நேசிப்பு கட்டாயம் இருந்தாக வேண்டும்.

எனது பள்ளிப் பருவத்திலேயே நான் இந்த தேசிய இயக்கத்துடன் தொடர்பு கொண்டவன். சுதந்திரப் போராட்டங்களில் கலந்துகொண்டு தீண்டாமை ஒழிப்பு, மதுக்கடை மறியல் என்று ஈடுபட்டு மது ஒழிப்புப் பிரசாரத்தில் எனது சொந்த ஊரான ஒரத்த நாட்டில் (தஞ்சாவூர் ஜில்லா) அதைச் சுற்றியுள்ள கிராமங்களான தென்னமநாடு,

கன்னந்தங்குடி, குடிக்காடு, பருத்தியப்பர் கோயில் தலையா மங்களம் வடுவூர், என்று கிராமம் கிராமமாக காங்கிரஸ் பேரியக்கக் கொடியை வாடகை சைக்கிளில் கட்டிக்கொண்டு பிரசாரத்தில் ஈடுபட்டு எனது வாழ்வின் பால்யகாலங்களை கிராமப் பயணத்தில் கழித்தவன். அப்பொழுதே அந்தக் கிராம மக்களின் வாழ்வியல் அபூர்வங் களையும் கபடற்ற மன இயல்புகளையும் கவனித்தவன்.

இந்தியநாட்டில் உள்ள எல்லா கிராமத்து மக்களின் வாழ்விலும் ஓர் அபூர்வமான மன ஒற்றுமையைப் புரிந்து கொண்டவன் நான். எல்லாருமே கபடமற்றவர்கள். நான் இலக்கியவாதியாக மாறவே எனது இளமைக் காலங்களில் நான் கிராமங்களில் எனது பெருவாரியன நாட்களை கழித்ததே காரணம்.

ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஏற்ற மாதிரி சில வட் டார வழக்குகள் உண்டு, இது படைப்பிலக்கியத்தில் நன் றாகவே வேறூன்றி இருக்கிறது.

எனது சொந்த ஊரான ஒரத்த நாட்டை (தஞ்சாவூர்) விட்டு சேலத்தில் குடியேறி சுமார் நாற்பதாண்டு கால மாகிறது. எனது எழுதும் ஆர்வம் இங்கே அதிகமான காலங்களில், சேலமும் அதைச்சுற்றியுள்ள கிராமப்புரங் களுமே எனது எழுத்தின் களமாக அமையத் தொடங்கியன. மனிதநேயமிக்க இந்தக் கிராமமக்களின் வாழ்க்கை அமைப்பு என்னைக் கவர்ந்ததுபோலவே அவர்கள் பேச்சு வழக்கும் என்னைக் கவர்ந்தது. எல்லா மாவட்டங்களிலும் வட்டார வழக்கு இருப்பதைப் போலவே இங்கேயும் ஒரு வட்டார

வழக்கு இருப்பதைக் கவனித்தேன். இப்படி இந்த வட்டார வழக்கில் அமைந்ததுதான் எனது புழுதிப் புயல் என்ற நாவல். சேலத்து வட்டார வழக்கில் எழுதப்பட்ட முதல் நாவலாகக்கூட அது இருக்கலாம் என்பது எனது கருத்து. அதைத் தொடர்ந்து யாகம், மிகப் பெரியவன் போன்ற பல கதைகளில் இதை கொஞ்சம் அழுத்தமாகக் கையாண்டு பல வாசகர்களின் பாராட்டுதலைப் பெற்றேன்.

'நெருப்பின் மற்றொரு முகம்' சேலத்து கிராமியசூழலில் எழுதப்பட்டது. இப்பகுதிவாழ் கிராமத்து பெண்ணின் அப்பழுக்கற்ற மனவோட்டத்தையும், பெண்மைக்கு அவள் தருகின்ற மதிப்பும்தான் இக்கதை.

சேலத்து கிராமங்களில் ஒரு சாராரிடையே நிலவிவரும் வரும் "துரும்பு" கொடுக்கும் முறையை இதிலே மிக நுட்பமாக கையாண்டிருக்கிறேன். கிராமத்து பஞ்சாயத்து என்பது எத்தனை வலிமை வாய்ந்தது என்பதைக் காட்ட முயன்றிருக்கிறேன். துரும்பு கொடுப்பதில் உள்ள ஒரு பெண்ணின் நியாயமான அடிப்படை உரிமை எந்த அளவுக்கு தார்மீக பலம் பெற்றிருக்கிறது.

கணவன் மனைவி உறவு முறைகளைப் பற்றி நமது ஸ்மிரிதிகள் என்ன பேசுகின்றன. நமது சட்ட நூல்கள் இந்த விஷயத்தில் எதை எப்படி நியாயப்படுத்துகின்றன என்பதை ஒரு சிறிய எல்லைக்குள் நின்று விளக்க முற்பட்டிருக்கிறேன்.

இதில் இடம்பெறும் மற்றொரு நாவல் பனிச்சுவர்.

நடத்தை தவறிய சகோதரனை நேர்மைபடுத்த நடத்தப்படும் போராட்டத்தில் இரண்டு இளம் வயதினர் கத்திமுனை

யில் கடந்து குடும்ப கவுரவத்தையும், ஒரு குழந்தையையும் காப்பாற்றுகிறார்கள். வேகமான சம்பவங்கள். நிறைய திருப்பங்கள். 'பனிச்சுவர்' என்ற பெயரே கூட இரு இளம் உள்ளங்கள் தங்களுக்கு நடுவே அமைத்துக் கொள்ளும் தார்மீக ஒழுக்கக் கட்டுப்பாட்டின் குறியீடே.

உணர்ச்சிச் சூட்டில் கொஞ்சம் பிசகினாலும் பனிச்சுவர் கரைந்து தவறுகள் நேர இடமேற்பட்டுவிடலாம். ஆனால் அவர்கள் மனத்தளவில் மேற்கொண்ட கட்டுப்பாடு பனிச் சுவராக இருந்தாலும் அதுவே இரும்புச் சுவராக இருந்து அவர்களுடைய போராட்டத்திற்கு வலிமை சேர்க்கிறது.

இந்த நாவல்களை அழகாக அச்சிட்டு வெளியிட்ட ராஜேஸ்ரீ புத்தக நிலைய உமையாளர் திரு. நா. பால கிருஷ்ணனுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

15, ராஜா எக்ஸ்டன்ஷன்
சேலம்-636097

என்றும் அன்புடன்
மகரிஷி

# பொருளடக்கம்

# பனிச்சுவர்

## 1

அவள் தன் அலுவலகத்தில் இருந்ததைவிட இப்பொழுது அணிந்து கொண்டிருக்கும் சல்வாரில் அழகாக இருந்தாள்.

ஒரு வேளை அவள் முன்பு அணிந்திருந்த வெளிர் நீலப் புடவையால் தன் அழகில் இடைவெளி கொஞ்சம்கூடத் தெரியாமல் மறைத்துக் கொண்டதால் அப்படியிருந்திருக்கலாம்.

இப்பொழுது

அழகின் உள் அமைப்பின் வெளிப்பாடு நிதர்சனமாகவே மனதைக் கவர்ந்தது.

அவள் அந்த கம்பெனிக்கு புதியவள் என்பது ராஜ சேகருக்குத் தெரியும்.

ஒரு வாரத்திற்கு முன்பு அவள் அக்கம்பெனியில் அவனுடைய அலுவலக அறைக்கு வெளியே பத்து பதினைந்து விசிட்டர்களுடன் உட்கார்ந்திருந்தாள்.

அவர்களில்

இரண்டுபேர் நன்கொடைக்காக காத்திருந்த பெண்கள்.

மற்றொருத்தி ஒருமாதம் முன்பு இறந்து விட்ட தன் கணவன் இடத்தில் தன்னை வேலைக்கு சேர்த்துக் கொள்ள வேண்டுமென்கிற விண்ணப்பத்துடன் உட்கார்ந்திருந்தாள்.

மற்றவர்களில் பெரும்பாலோர், அளவுக்கு அதிகமாக விடுப்பு எடுத்து, சம்பளம் பிடிக்கப்பட்டு, அதிக விடுப்பு எடுத்ததற்காக காரணம் கேட்டு மெமோ அனுப்பப்பட்டவர்கள். தங்கள் விளக்கங்களுடன் உட்கார்ந்திருந்தார்கள் இவர்கள் ஆண் ஊழியர்கள்.

அதில்

முற்றும் புதியவளாக...அவன் இதுவரை பார்க்காதவளாக,

அழகாக, கவர்ச்சியாக...இப்படி இன்னும் எத்தனையோ ப்ளஸ் பாயிண்ட் களுடன்...அவள்...

அவரவர்களுக்கு உண்டான பதில், விளக்கம் என்று எல்லாம் கூறிவிட்டு அவள் ''டர்ன்'' வரும்போது

அவள் மட்டுமே இருந்தாள்.

ராஜசேகர் அக்கம்பெனியின் பிரதான நிர்வாக அதிகாரி.

எல்லாவற்றிற்கும் அடிப்படைப் பொறுப்பு அவனுக்கு உண்டு.

அவள் அழகாக இருந்தாள். உடையில் அதிகமான விலை உயர்வு தெரியவில்லை. எளிமையாக அதை உடுத்தியிருந்த விதத்தில் நேர்த்தியாக உடுத்தியிருந்தாள். அழகு தெரிந்து உடுத்தினால் சாதாரண துணிக்குக் கூட ஒரு அலாதி மவுசு வந்துவிடும்.

''உட்காருங்கள்''—அவன் அவளிடம் ஆங்கிலத்தில் சொன்னான்.

''நன்றி''—என்று கூறிவிட்டு அவள் அவன் அமர்ந்திருக்கும் மேஜையோரமாக நின்றாள்.

"கிருஷ்ண குமாரி!"

பெயரைப் படித்து விட்டு அவளைப் பார்த்தான்.

அவள் பி. எஸ். ஸி படித்தமைக்கான காலேஜ் சர்ட்டி பிகேட், கூடைப்பந்து ஷட்டிஸ்காக், கால்பந்து விளை யாட்டு ஆகியவைகளில் பெற்ற சான்றிதழ்கள் எல்லாம் ஒரே கோப்பில் இருந்தன.

"நீங்கள் கல்லூரியில் படிக்கும்போது திறமையான விளையாட்டு வீராங்கனையாக இருந்திருக்கிறீர்கள்."

மீண்டும் அவன் உட்காரச் சொன்னபோது உட்கார்ந்து கொண்டு விட்டாள்.

"ஆனால் காலேஜை விட்டு வெளியே வந்து ரொம்ப வருஷங்கள் ஆகிவிட்டன இல்லையா?"

"ஆமாம்."

"இதற்கு முன் எங்காவது வேலையாக இருந்தீர்களா?"

"ஆமாம்" என்றவள் எழுந்து நின்று அவன் பார்த்துக் கொண்டிருந்த அவளுடைய கோப்பில் சில காகிதங்களை புரட்டி ஒரு காகிதத்தை அவனிடம் காட்டினாள்.

விஜயா பிளாஸ்டிக் கம்பெனியின் "லெட்டர் ஹெட் டில்" அவளுடைய அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டர் இருந்தது.

"இதில் ஏன் நீடிக்கவில்லை?"

"ஒரு வேலை நிறுத்தம் வந்தது. அதில் கலந்து கொள்ள எனக்கு விருப்பமில்லை. அந்த தர்ம சங்கடங்கள் எல்லாம் வேண்டாம் என்று நானே வேலையினின்று விலகி விட்டேன்."

"அந்த கம்பெனியைப் பிறகு மூடிவிட்டார்கள் என்று நினைக்கிறேன்."

''ஆமாம்!'',

''சென்னை தான் சொந்த ஊரா?''

''இல்லை. சேலம்.''

''சேலம்?''

''ஆமாம்.''

''சேலத்தில் கூட இப்பொழுது நிறைய தொழிற் கூடங்கள் வந்து கொண்டிருக்கின்றன. சேலம் இரும் பாலைத் திட்டம் இன்னும் விரிவடையும் போது வேலை வாய்ப்புகளும் அதிகமாகலாம்.''

''எல்லோரும் அப்படித்தான் எதிர்பார்த்துக் கொண் டிருக்கிறார்கள். ஆனால் அதற்குள் ஊர்வலங்கள், ஆர்ப் பாட்டங்கள், வால் போஸ்டர்கள் சண்டை எல்லாம் ஆரம்ப மாகிவிட்டன. எல்லா இடத்திலும் ஒரு ஆதிக்கம் இருக் கிறது. அது மிரட்டல் ஆதிக்கம் தான். தானும் உருப் படாமல், பிறரையும் உருப்படவிடாமல் இந்த நாட்டைப் பாழ் அடிக்கிற புதிய பிற்போக்கு கும்பல்கள் இவை! நாடு மட்டுமல்ல, சமுதாய அமைப்பே இவர்களால் தான் மிக விரைவாகக் குட்டிச் சுவராக போகிறது...''

இவ்வளவையும் பேசிவிட்டு அவள் மிகச் சாதாரண மாக உட்கார்ந்திருந்தாள். இத்தனையையும் பேசியது இவள்தானா?

''நீங்கள் ஏதேனும் அரசியல் கட்சியின் அனுதாபியா?''

''அரசியலா? அனுதாபியா,... இனிமேல் வெறும் அனு தாபங்கள் எந்த அரசியலையும் காப்பாற்றப் போவதில்லை. அரசியலை மட்டுமல்ல, இந்த சமுதாயத்தையும் கூடத் தான். ஏதேனும் ஒரு தேசிய கொள்கையைப் பற்றி நிற்க வேண்டும். தீவிரமாக அதை ஆதரிக்க வேண்டும். அப் பொழுதுதான் இந்த நாடு உருப்படும்.''

ராஜசேகர் சுவாரஸ்யத்துடன் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

''நான் முன்புவேலை செய்த பிளாஸ்டிக் கம்பெனியில் பெண்கள் தான் அதிகம். ஆண்கள் மிகக் குறைவு. ஆனால் பெருவாரியான பெண் பணியாட்களை கையடக்கமே உள்ள சில ஆண்கள் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டு தங்கள் பிழைப்பை நடத்திக்கொண்டிருந்தார்கள். பெரும்பாலான பெண்கள் அவர்களுக்கு பயந்தே அவர்கள் சொல்படி நடந்து கொண்டிருந்தார்கள். இதனையடுத்து வேலை நிறுத்தம் வந்தவுடன் நான் விலகி விட்டேன்.''

தன் ஆசனத்தில் பின்னால் சாய்ந்து உட்கார்ந்திருந்த ராஜசேகர் நிமிர்ந்தான்.

''அந்த விஜயா பிளாஸ்டிக் கம்பெனியை இழுத்து மூடி விட்டார்கள். கிட்டத்தட்ட ஒரு இருநூறு குடும்பம் இப்பொழுது தெருவில் நிற்கிறது.

நாம், நம் மனம் ஒன்றும் இடத்தில், அது வேலை செய்யும் தொழிற் கூடமாக இருந்தாலும் சரி, ஒரு தனி நபராக இருந்தாலும் சரி— விசுவாசமாக இருக்க வேண்டும். விசுவாசமாக இருப்பது என்பது அடிமைத்தனமல்ல. இந்த விசுவாச குணத்தை மாசு படுத்த எண்ணும் போதுதான் மனம் வேதனைப்படுகிறது. அம்மாதிரி நேரங்களில்தான் ஸார் அவனுக்குள் அல்லது அவளுக்குள் இருக்கிற வக்கிர மனம் வேறு விதமான முடிவை எடுத்து விடுகிறது.

மனிதர்களை மனிதர்கள் புரிந்து கொள்வது என்பதே ஒரு தத்துவம். அதில்லாமல்...''

அவள் அப்படியே பேச்சை பாதியில் நிறுத்திக் கொண்டு விட்டாள்.

''ஏன் நிறுத்தி விட்டீர்கள்?''

"நான், நமது பேட்டி அம்சங்களிலிருந்து விலகி வேறு எதுவோ பேசுகிறேன். மன்னித்து விடுங்கள்."

"பரவாயில்லை. இதில் மன்னிக்க என்ன இருக்கிறது. மனித மனோதத்துவம் எனக்கும் கொஞ்சம் தெரியும். மௌனமாகவே சில உணர்ச்சிகளை உள்ளுக்குள் போட்டு அடைத்துக் கொண்டிருப்பார்கள். அது ஏதேனும் ஓரிடத்தில் லேசாக கசிய இடம் கிடைத்தவுடன் பிரவாகமா வெளிப்பட ஆரம்பித்துவிடும். இது மன இயல்பு."

அவளுடைய கல்லூரி சர்டிபிகேட் மற்ற தகுதி சான்றிதழ்கள் எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்தி அடுக்கி கிளிப் ஃபைலில் வைத்து மூடி அவளிடம் நீட்டினான்.

"நான் உங்களுக்கு இங்கே வேலை தருவதாக முடிவெடுத்திருக்கிறேன். பொதுவாக பொருளாதாரம் சம்பந்தப்படும் விஷயங்களின் பேரில் நான் ஏதும் முடிவெடுக்க முடியாது. அவையெல்லாம் என் சகோதரன் முடிவெடுக்க வேண்டியவை. என்றாலும் உங்கள் விஷயத்தில் அவனை சமாதானம் செய்ய முடியுமென்று நம்புகின்றேன். இதனால் உங்களுக்கு நான் இப்போழுது கொடுக்கிற வேலைக்கான உத்தரவு தற்காலிகமான உத்தரவுதான். பிறகு அதையே நிரந்தரப்படுத்த நான் உத்திரவாதம் தரமுடியும்"

"நன்றி சார்"

அக்கம்பெனியின் முக்கிய உற்பத்திப் பொருள், வேலை முறை, பிரிவுகள், அதற்கான உதவித் தொழில் அதன் நிர்வாகம், என்று கூறிவிட்டு அவள் பணி புரிய வேண்டிய பிரிவைப் பற்றியும் கூறினான்.

சம்பளவிகிதங்கள் பற்றி அவன் முன் கூட்டியே ஏதும் கூறவில்லை. அதற்கு அவன் கொஞ்சம் அவகாசம் எடுத்துக் கொள்ள விரும்பினான்.

அவள் விடைபெற்றுக் கொண்டு வெளியேறி விட்டாள்

அவள் போன பின் அவள் திறந்து மூடிய ஸ்பிரிங்டோர் முன்னும் பின்னும் ஆடிக் கொண்டிருந்தது.

அவளுடைய அழகு முதலில் அவனை பாதித்தது, பிறகு அவளுடைய அனுபவங்கள் பாதித்தது. அவளிடம் வெளிப் பட்ட சில கருத்துக்கள் அவனை அதிகம் சிந்திக்க வைத்தது.

அவன் இவ்வளவு நேரம் இத்தனை சிரத்தையுடன் யாரையும் பேட்டிக்கு அனுமதித்ததில்லை. வேலைக்கு வருகிறவர்களிடம் ஏதேனும் முக்கியமான இரண்டு மூன்று கேள்விகள்— அவர்களுடைய வாழ்க்கையின் பின்னணி— அதோடு நிறுத்திக் கொண்டு விடுவான். அதிக "நேயத்தை" வெளிக்காட்டி நட்பைக் கொட்டுவதில்லை. தான் ஒரு பெரிய கம்பெனியின் உரிமையாளன். தான் எடுக்கிற முடிவுதான் இறுதியானது என்கிற எண்ணத்தில் சில சமயம் கடினமான மன நிலையுடன் இருந்து விடுவான். அவன் முன்வந்து நின்று தன் குடும்பத்தைக் காப்பாற்ற தனக்கு ஒரு வேலை அவசியம் தேவை என்று கெஞ்சாத குறையாக கண்களில் கண்ணீரைக் கொட்டிவிட தயாராக இருக்கும் நேரத்திலும் கூட அவன், அதிக நயத்துடன் நடந்து கொண்டதில்லை. தேவையின் அடிப்படையிலும் தகுதியின் அடிப்படையிலும் தான் அம்மாதிரி நேர்முக போட்டிகளில் ஈடுபடுவான்.

ஆனால்

இன்று..

கிருஷ்ணகுமாரியிடம் எடுத்த எடுப்பில் ஓர் அக்கறை எப்படி உண்டானது. இவளுடன் பேசிக் கொண்டே யிருக்க வேண்டும்போல உணர்வு எப்படி ஏற்பட்டது ?

மனம் என்பது ரொம்பவும் விசித்திரமான பேழை போன்றது. யார் மேலாவது தனிப்பட்ட அபிமானம் உண்டாகப் போகிறது என்று அதற்கு முன் கூட்டியே தெரிந்து விடும் போதுதான் அது தன் மூடியைத் திறந்து

கொண்டு விடுகிறது. மழை வரும்போது நீரில் உள்ள நத்தை வாய்ப்பிளந்து ஒரு நல் முத்தை உள் வாங்கிப் கொள்ளுமாமே! அதைப் போல மானசீகமான மன ஈர்ப்பில் அன்பெனும் சிறு பொறியொன்று சிறு இடைவெளி ஏற்படுத்திக் கொண்டிருக்கிற மனப் பேழைக்குள் புகுந்து உட்கார்ந்து விடுகிறது.

அதுபோலதான்

கிருஷ்ணகுமாரியின் வருகையும் அவள் ஏற்படுத்திய பதிவுகளும்.

# 2

முதல் ஷிப்ட் முடிந்து எல்லோரும் வெளியேறி விட்டார்கள்.

கிருஷ்ணகுமாரி மட்டும் ராஜசேகரின் அலுவலக அறையின் முன் போடப் பட்டிருந்த பார்வையாளர் பெஞ்சியில் அமர்ந்திருந்தாள்.

அவளை ராஜசேகர் பார்க்க வேண்டுமென்று ஷிப்ட் சூப்பர் வைசரிடம் சொல்லி அனுப்பியிருந்தான்.

அவள் அங்கு வேலைக்கு சேர்ந்து பின் இரண்டு முறை லீவு போட்டு விட்டது ஒரு சிறு பிரச்சினையை உண்டாக்கி யிருக்கிறது என்பது அவளுக்குத் தெரியும்.

அவள் முதல் தடவை மூன்று நாட்கள் லீவு போடும் போது யாரும் ஏதும் கூறவில்லை. வழக்கமாக இப்படி லீவு எடுக்கும்போது சம்பளத்தைப் பிடித்துவிடுவதுதான் அங்குள்ள வழக்கம். அப்படி அவள் முதல் தடவை விடுப்பில் போனபோது அவள் சம்பளம் பிடிக்கப்பட வில்லை.

இரண்டாம் முறை விடுப்பில் சென்றபோது சம்பளத்தைப் பிடித்து விட்டார்கள். அதோடு அவள் வந்தவுடன் தன்னை வந்து பார்க்கும்படி கூறி ஒரு குறிப்பை ராஜசேகர் அனுப்பி விட்டான்.

ராஜசேகரின் அறைக்குள் நுழைந்தபோது அவன் வேறு வேலையில் மூழ்கியிருந்தான்.

அவள் வந்து நின்றதைப் பார்க்கவில்லை.

''பார்க்க வேண்டுமென்று சொன்னீர்களாம், சூப்பர்வைசர் கூறினார்.''

அவன் தன் முன் விரிந்து கிடந்த கோப்பை மூடிவிட்டு.

''பொதுவாக நாங்கள் தற்காலிக ஊழியர்கள் விஷயத்தில் அதிக நாட்கள் லீவு எடுக்கும் பழக்கத்தை உற்சாகப் படுத்துவதில்லை. ரொம்பவும் அவசரமாகவும், அநாவசியமாகவும் இருந்தாலன்றி, அதற்கெல்லாம் இங்கே அதிக அனுமதியில்லை. நீ இதற்குள் இரண்டு முறை மூன்றும், மூன்றும் ஆறு நாட்கள் லீவு எடுத்து விட்டாய். உன்னை, ஏன் லீவு எடுத்தாய்? எதற்கு லீவு எடுத்தாய் என்று கேட்க நான் கூப்பிடவில்லை. உன்னுடைய சிரமங்கள் என்ன என்று தெரிந்து கொள்ளத்தான் அழைத்தேன்'' என்றான் ராஜசேகர்.

கிருஷ்ணகுமாரி சில நிமிஷங்கள் மௌனமாக நின்றாள்.

இவர் கண்டிப்பாகவும் இருக்கிறார். அதே நேரத்தில் கனிவாகவும் இருக்கிறார் என்று எண்ணியவள்—

''எனக்கு சொந்தக் குடும்பப் பிரச்சினைகள் சில இருக்கின்றன. அவைகளை நான் தாண்ட வேண்டும். அது வரையில் இப்படித்தான் இருக்கும். அது தீர்ந்து விட்டதென்றால் நீங்கள் லீவு கொடுத்து எங்காவது போ என்று சொன்னால்கூட நான் போக மாட்டேன்.''

"என்ன பிரச்சனை?"

"பிறர் உதவியின்றி அதைத் தீர்த்துக் கொள்ள முடியு மென்று நம்புகிறேன். அப்படி ஒருவரின் உதவியுடன்தான் அதைத் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்கிற நிலைமை வந்தால் முதலில் உங்களிடம்தான் வருவேன்."

அவன் சிரித்துக் கொண்டான்.

"சென்னை போயிருந்தாயா?"

"ஆமாம்"

"பெற்றோர்கள் அங்கே இருக்கிறார்களா?"

"பெற்றோர் சேலத்தில் இருக்கிறார்கள். முக்கிய விஷயமாக நான் சென்னை போயிருந்தேன்."

"அப்படியா"

இதற்கு மேல் கேள்விகள் கேட்பது நாகரீகமல்ல என்ற முடிவுடன்,

"நீ போகலாம். ரொம்ப அவசியமிருந்தாலன்றி அதிக லீவு எடுக்க வேண்டாம். ஏனென்றால் இங்கே உற்பத்தி, விநியோகம் மற்றும் அது தொடர்பான வேலைகள் ஒரு சங்கிலித் தொடராக நடந்தாக வேண்டும். அதில் எந்த இடத்தில் தாமதமேற்பட்டாலும் எல்லா வேலைகளும் பாதிக்கும். இதை நீயே புரிந்துக்கொண்டிருப்பாய்."

அவள் அவன் அறையைவிட்டு வெளியே வந்தாள்.

தொழிற்கூடத்தில் உள்ளே வேலை நடந்து கொண் டிருந்தது.

அந்தத் தக்கைக்கல் தொழிற்சாலையில் ஷிப்ட்டுக்குச் சுமார் எழுபது பேர்வரை வேலை செய்கிறார்கள். அதிகமாக டிமாண்ட் வந்து குவியும்போது மூன்று ஷிப்ட்டுகள் நடக்கும்-

ஷிப்ட் என்பது தேவையை அனுசரித்து உயரும்.

ஊரக மற்றும் நகர்ப்புற வீட்டு அபிவிருத்தி வாரியம் தனது கட்டுமானப் பணிக்குத் தேவையான தக்கைக் கற்களில் முப்பது சதவிகிதத் தேவையை இவர்களிடமிருந்து வாங்கிக் கொள்கிறது. உற்பத்தியில் மீதி அனைத்தும் உற்பத்தியான வுடனேயே வியாபாரச் சந்தையில் நல்ல விலையில் விற்பனை யாகி விடுகிறது.

அரசாங்கத்தினிடமிருந்து ஒரு கணிசமான தொகை கடன் பெற்று இரண்டு மூன்று கூட்டாளிகளுடன் சேர்ந்து இதை ஆரம்பித்த ராஜசேகரின் குடும்பம் நகரில் பெரிய தனவந்தர்கள் குடும்பங்களில் ஒன்று.

இந்தத் தொழிற்சாலையை ஆரம்பிக்க அவர்கள் திட்டம் போட்டு ஒண்டிக்கப்பல் அருகில் பல ஏக்கர் நிலங்களை விலை கொடுத்து வாங்கியதிலிருந்தே அவர்களுக்குப் பிரச்னைகளும் ஆரம்பமாகி விட்டன.

அதை ஆரம்பிக்க விடாமல் உள்ளூர் அரசியல்வாதிகள் குறுக்கிட்டு குந்தகம் விளைவித்தனர். காரணம் அவர்கள் எந்த அரசியல் கட்சியையும் சார்ந்தவர்களாக இல்லாமல் இருந்ததுதான்.

தொழில் ஆரம்பிக்க இடத்தை வாங்கித் தொழிற் கூடத் திற்கான வரை படம் வரைந்து அதற்கான மாநில மத்திய அரசுகளின் அங்கீகாரத்திற்கு அனுப்பியபோது ஏற்பட்ட குந்தகம் அவர்களை இந்தத் தொழில் நடத்துவதைவிட நடத்தாமல் இருந்துவிட்டால் என்ன என்கிற அளவுக்கு எண்ண வைத்ததும் உண்டு.

ராஜசேகரின் நீண்ட நாளைய கனவு இது.

அரசியல் சூழ்நிலை காரணமாக பல தொல்லைகள் என்றாலும் அவனது முயற்சிகளை அவன் கைவிடவில்லை.

ஒண்டிக்கப்பல் நெடுஞ்சாலையில் விலைக்கு வந்த நிலத்தை அப்பொழுதே விலைக்கு வாங்கி, நான்கு புறமும் சுற்றுசுவர் எழுப்பி வைத்து விட்டான்.

ஒவ்வொருமுறை அவன் டெல்லியென்றும் பெங்களூ ரென்றும் இதற்காகப் போய்விட்டு ஒவ்வொரு மேஜை யிலிருந்து, ஒவ்வொரு அலுவலகத்திலிருந்து, ஒவ்வொரு அதிகாரியிடமிருந்து கோப்பை முன்னே தள்ளி விட்டுவிட்டு திரும்பும்போது இந்தப் பரந்த பாழ்வெளியாக நிற்கும் இடத்தில் வந்து நிற்பான்.

அவனுடைய கனவுகள் அங்கே விரிவடையும்.

அரசாங்க அனுமதி கிடைத்துவிடும் என்கிற நம்பிக்கை யில் தொழிற்கூடம் கட்டுவதற்கான கட்டுமானப் பொருட் கள் வந்து இறங்க ஆரம்பித்து விட்டன.

சிமெண்ட், சுண்ணாம்பு, அலுமினியப் பவுடர், ஜிப்ஸம் போன்ற பொருட்களைச் சேர்த்து அந்தக் கலவையை ஒரு குறிப்பிட்ட அளவு சூடேற்றி, அதைக் கில்லன்களில் பக்குவப் படுத்திப் பாய்லர்களின் உதவி கொண்டு, நீராவியால் சுட்டு ஆட்டோ கிளேவ் என்கிற சுடு உருளையில் அவைகளை நிரப்பி மோல்டுகளைத் தயாரிக்க வேண்டும்.

பிரபலமான எண்ணைக் கம்பெனியொன்றிலிருந்து அவர்களுக்கு எரி எண்ணை சப்ளை நடக்கிறது!

திருச்சி, சேலம் போன்ற இடங்களில் உள்ள குவாரி களிலிருந்து சுண்ணாம்புக் கற்கள் தருவிக்க ஒப்பந்தங்கள் கையெழுத்தாகியது.

சாதாரணமாக உபயோகப்படுத்தப்படும் சுட்ட செங்கற் களைவிட இது மலிவாகவும், உறுதியாகவும் இருந்ததால் வீடு கட்டுமானச் செலவில் ஒரு கணிசமான தொகை குறை யும் என்பதுதான் இதைக் கண்டுபிடித்தவர்களின் கருத்து. போலந்து, மேற்கு ஜெர்மனி, ஜப்பான் போன்ற இடங்களில் இம்மாதிரி கற்கள் இப்பொழுது பிரபலமாகி வருகிறது.

அவனுடைய நீண்ட நாளைய கனவு நனவாகிவிட்டதில் அவனுக்குப் பூரணமாகத் திருப்தி.

கம்பெனியின் எல்லா நிர்வாகத்தையும் அவன் தன்னிடம் வைத்துக் கொள்ளவில்லை. பொருளாதாரம், மற்றும் ஊழியர்கள்— ஸ்டாஃப் அண்டு ஃபைனான்ஸ் ஆகிய இரண்டு முக்கியப் பிரிவுகளை அவன் தன் பொறுப்பில் வைத்துக் கொண்டு மற்ற எல்லா துறைகளுக்கும் திறமை யானவர்களை நியமித்து அவர்களுக்கு பூரண சுதந்திர மளித்து விட்டான். நிர்வாக இயந்திரத்தின் சக்கரம் ஒரே சீராக சுழன்று கொண்டிருந்தது மட்டுமல்ல, உற்பத்தி, விநியோகம் இரண்டுமே ஒரே சீராகவே நடந்து கொண் டிருந்தது.

பாய்லர் ரிப்பேர், சுத்திகரிப்பு எண்ணெயை எடுந்து வருவது, இயந்திரங்களுக்குத் தேவையான உதிரி உறுப்புகள் மற்றும் ஆட்டோ கிளேவ் இயந்திரம் பழுது பார்ப்பது, சுத்தம் செய்வது, சுண்ணாம்புக்கல், சிமெண்ட், மணல் போன்றவற்றின் தேவைகளை தனி ஏஜண்டுகள் வைத்து அவர்கள் மூலமாக தருவித்துக் கொண்டார்கள்.

சாமுண்டி இண்டஸ்ட்டிரீஸ் என்கிற அந்தப் பெரிய தொழிற்சாலையில் எண்பதுபேர்கள் வேலை செய்கிறார்கள்.

# 3

பார்க்க வேண்டிய முக்கிய பேப்பர்களைப் பார்த்து விட்டு அவைகளின் பேரில் தேவையான குறிப்புகளையும் எழுதியபின், உடம்பை நெளித்துக் கொண்டு எழுந்தான்.

மணி நான்குக்கு மேல் பத்து நிமிஷங்கள் ஆகியிருந்தன.

போட்டுக் கொண்டிருந்த அலுவலக உடையைக் கலைந்து வெள்ளை பனியனும் அரைநிக்கரும் அணிந்து காருக்கு வரும்போது டென்னிஸ் ராக்கெட்டுடன் வந்தான்

சரஸ்வதிபுரம் தாண்டி டெலிபோன் எக்ஸ்சேஞ்ச் சாலைக்கு அப்பால் கொஞ்ச தூரம் ஓட்டத்தில் அந்த விஸ்தாரமான மைதானமும் அதில் தனியே டென்னிஸ் கோர்ட்டும் இருந்தது.

அவன் கார் சரஸ்வதிபுரத்தின் பத்தாவது கிராஸை தாண்டும்போது ஒரு வீட்டின் காம்பௌண்டுக்குள் கிருஷ்ண குமாரி நுழைந்து கொண்டிருந்தாள்.

அவன் காரின் வேகம் குறைந்தது. அவள் காம்பௌண் டின் உள்ளே வெகுதூரத்தில் தெரிந்த ஓட்டுச் சார்புள்ள வீட்டை நோக்கிப் போய்க் கொண்டிருந்தாள்.

வீட்டின் முன் முல்லைக்கொடியோ அல்லது எதுவோ வொன்று பசேலென்று காடாக மண்டிக்கிடந்து முகப்பை மறைத்துக் கொண்டிருந்தது.

தன் காரை அவ்வீட்டின் முன் நிறுத்திவிட்டு அவள் சென்று மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்தான்.

அந்த நடை, நடுவாந்திரமான உயரம், முழு உருவில் தெரியும் அழகின் திரட்சி...

அவன் தனக்குள் ரசனையுடன் சிரித்துக்கொண்டே காரைக் கிளப்பினான்.

அவன் தன் தொழிற்கூடத்தில் பணியாற்றும் எந்த ஊழியரிடத்திலும் நேரிடையான தொடர்பு வைத்துக் கொள்வதில்லை. அதோடு விடுமுறை, ஊதிய பட்டுவாடா, நடத்தை நெறி போன்ற எந்த விஷயத்திலும் அவன் நேரிடை தொடர்பு மிகக் குறைவு. எல்லா பிரிவுகளுக்கும் தலைமை அதிகாரி, கண்காணிப்பு அதிகாரி, மேற்பார்வை அதிகாரி என்று உண்டு. எல்லாவற்றின் முடிவு செய்யும் பொறுப்பு மட்டும் அவனிடம் உண்டு.

நிர்வாகப் பிரிவை நிர்வாக அதிகாரியும் ஊதியம் மற்றும் விடுப்புகளை கவனிக்க தனி அதிகாரியும் இருக்

கிறார்கள். யாரும் எதற்காகவும் அவனை நேரிடையாக அணுக வேண்டிய அவசியம் இருக்காது.

பிடித்த ஊழியர், பிடிக்காத ஊழியர் தனி ஊழியர் மேல் வன்மம் போன்றவற்றுக்கு அங்கே இடமில்லை. இப்படி யேதும் நேர்ந்து விடாமல் இருக்க அவனுடைய கூர்மையான கண்காணிப்பு எப்பொழுதும் உண்டு.

இவ்வளவையும் மீறி ராஜசேகர் கிருஷ்ண குமாரியை மறுபடியும் சந்திக்க வேண்டும் என்கிற துடிப்பினால் அவளை தன் அலுவலகத்திற்கு வரவழைத்தான்.

அவன் அந்த பிரம்மாண்டமான தொழிற் கூடத்தின் கூட்டு அதிபதி. ஹாலந்து போயிருக்கும் அவன் சகோதரன் வரும் வரையில் இந்த தொழிற்கூடத்தை அவன் ஒருவனாகவே நிர்வகிக்க வேண்டும். அவன் வந்த பின் பாதிப் பொறுப்பை அவனிடம் தள்ளிவிட்டு ஒரு பாதியை ராஜசேகர் வைத்துக் கொள்வான்,

அன்றைய டென்னிஸ் ஆட்டத்தில் ஏராளமான தப்பு ஆட்டங்கள் ஆடினான். ஒரு சர்வீஸ் கூட ஒழுங்காக கோட்டுக்குள் இல்லை.

அடிக்கும் பந்துகள் எல்லாம் ஒன்று கோட்டுக்கு வெளியே போனது. அல்லது வலையை உரசிக் கொண்டு கீழே விழுந்தது.

"என் பெயர் கிருஷ்ணகுமாரி.

நாம், நம்மனம் ஒன்றும் இடத்தில், அது வேலைசெய்யும் தொழிற்கூடமாக இருந்தாலும் சரி, ஒரு தனி நபராக இருந் தாலும் சரி விசுவாசமாக இருக்க வேண்டும்..."

இவள், எதையோ சொல்ல வந்தாளே—, எதை?

பந்து மீண்டும் குறியின்றி எங்கோ போனது. அவன் அன்றைய ஆட்டத்தை அத்துடன் நிறுத்திக் கொண்டு

விட்டான், டென்னிஸ் கோட்டை விட்டு காரில் திரும்பிக் கொண்டிருந்தான். கங்கோத்ரி சாலையில் காரை ஓரமாக நிறுத்தி விட்டு, சரிவான அதன் புல் வெளி மேட்டில் ஏறி குக்கநல்லி ஏரிக் கரைக்கு வந்து நின்றான், ஒரு மாதமாக பெய்த அடைமழையில் ஏரியில் நீர் அலைமோதிக் கொண்டிருந்தது, தூரத்தில் பொட்டானிக்கல் கார்டன் பக்கத்தில் இரண்டு சின்ன படகுகள் மிதந்து கொண்டிருந்தன.

இதற்கு ஏதேனும் காரண காரியமிருக்குமோ? அடித்தளமில்லாமல் இப்படிப்பட்ட ஊசலாட்டங்கள் உள்ளத்தில் உண்டாக வாய்ப்பேயில்லை. தன் செய்கைகள் எல்லாம் எதற்கோ முன்னுரை போல் தோன்றியது.

தூரத்தில் படகு ஒன்று மிதந்து கொண்டிருந்தது.

அதில் கிருஷ்ணகுமாரி!

அவன் மாலையில் டென்னிஸ் கோர்ட்டுக்குச் சென்று தினம் ஒரு முறை நிச்சயமாக அந்த ஏரிக்கு வருகிறான் என்பதும், அந்த ஏரியின் கரையில் போடப்பட்டிருக்கும் சிமெண்ட் ஆசனமொன்றில் அரைமணி நேரத்திற்குக் குறைவில்லாமல் உட்கார்ந்து விட்டுப் போகிறான் என்பதும், அவளுக்குத் தெரியும்.

வந்த நாளாக அவனுடைய எல்லா நேரத்து செய்கைகளையும் அவள் மிகக் கூர்மையாகக் கவனிக்கிறாள்,

அலுவலகத்தில் அவளுக்கும், அவனுக்கும் நடுவே ஒரு மரத் தடுப்புதான். அவள் அவனுடைய நேரிடையான உதவியாளராக மாற்றப்பட்டிருந்தாள். அது அவளுக்கு அண்மையில் கிடைத்த சிறு இடமாற்றம்.

அவனுடைய நேரிடைப் பார்வைக்கு போக வேண்டிய அன்றாட அலுவல் பற்றின சில குறிப்புகளை அவள் அவன் மேஜைமேல் வைக்க வேண்டியது அவளது முக்கிய பொறுப்பு-

புதிய ஆர்டர்கள், வினியோகிக்கப்பட்ட இடத்திலிருந்து வரும் குறைபாடுகள் பற்றின குறிப்பு இவைகளை ஒன்று சேர்த்து அவள் அவனிடம் தரவேண்டும்.

அந்நேரங்களில் அவன் அவளிடம் ஏதும் கேட்பதில்லை. அவளுடைய தலைமை அதிகாரியைத் தன்னைப் பார்க்கும் படி கூறிவிடுவான்.

அவனிடம் நேரிடையாகப் பேசவேண்டியவைகளை அவளுடைய தலைமை அதிகாரிதான் பேசிக் கொள்வார். எனவே அவனுடன் அவள் பேசுகிற சந்தர்ப்பம் என்பது மிக மிகக் குறைவு.

# 4

இரண்டு பக்கமும் துடுப்பை லேசாக வலித்து படகைக் கரையோரமாக மிதக்கவிட்டாள். அவனை அவள் தூரத்திலேயே பார்த்து விட்டாலும் அதை வெளிக் காட்டிக்கொள்ளவில்லை.

படகு ஓரிடத்தில் நிலையாக நிற்காமல் நீரில் ஊர்ந்து கொண்டிருந்தது.

வெள்ளை வெளேரென்று ஸாட்டின் அரை நிக்கர், இரண்டு புறமும் ஊதாநிறப் பட்டைகள், காலர் உள்ள அரைக்கை பனியன், நடு மார்பில் குட்டியானை அப்பு...

இவன் சற்று பாதுகாப்பானவன் என்பதை இரண்டொரு சந்தர்ப்பங்களில் அவள் புரிந்து கொண்டிருந்தாள்.

தூரத்தில் செமிலைட் ஸ்போர்ட்ஸ் சைக்கிள் ஒன்று கரையில் மரத்தில் சாய்த்து நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது.

படகை கரை ஓரமாக நிறுத்தி அங்கிருந்து மரமுனையொன்றில் கட்டிவிட்டு மேலே வந்தாள்.

கரையின் மரத்தடியில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த செமிலைட் ஸ்போர்ட்ஸ் சைக்கிளை எடுத்தாள். அதில் ஏறி அமர்ந்தவள் அகலமான குக்கநல்லி ஏரிக்கரையில் பெடல் பண்ணிக் கொண்டே ராஜசேகர் நிற்குமிடம் வந்தபோது, அப்பொழுதுதான் அவனைப் பார்க்கிற மாதிரி பார்த்து விட்டு மேலே போய்விட்டாள்.

அவள் சைக்கிளில் வடகோடியின் கரைச் சரிவில் இறங்கி மீண்டும் உடனடியாக கங்கோத்ரி சாலையில் திரும்பிப் போனாள்.

ஃ ஃ ஃ

அவன் மேஜைமேல் அந்த முக்கிய ஃபைலை வைத்து விட்டு திரும்பியவளை

"கிருஷ்ணகுமாரி" என்றான்.

அவள் திரும்பி நின்றாள்.

அவன் அவள் கொண்டு வந்து வைத்த ஃபைலை புரட்டிக் கொண்டே பேசினான்.

"இங்கே உனக்கு உறவினர்கள் யார் இருக்கிறார்கள்?"— என்று ஆங்கிலத்தில் கேட்டான்.

"இங்கே எனக்கு உறவினர்கள் யாரும் இல்லை"— என்றாள் ஆங்கிலத்தில்.

"அப்படியானால் இங்கே யாருடைய உதவியுடன் எங்கே தங்கியிருக்கிறாய்?"

"எனக்கு சென்னையில் அறிமுகமான தோழி ஒருத்தி உண்டு. அவள் மூலமாக இங்கே தெரிந்தவர் வீடொன்றில் தற்காலிகமாக தங்கியிருக்கிறேன். யூனிவர்சிடி மெஸ்ஸில் சாப்பிடுகிறேன்."

"படகு ஓட்டுவது ஹாபியா?"

"நான் கல்லூரி நாட்களிலேயே நன்றாக படகு ஓட்டு வேன். அதில்கூட எனக்கொரு சர்டிபிகேட் உண்டு."

"சைக்கிள் ரேஸ்!"

அவள் சிரித்தாள்.

சைக்கிள் ஓட்டத் தெரியும். அது அந்த வீட்டுக்காரப் பெண்ணுடையது.

அகலமான கரையுடைய பச்சை நிற கைத்தறி சேலை உடுத்தியிருந்தாள். புடவையின் உடம்பு பூராவும் பாரிஜாத மலர்கள் கொட்டிக் கிடந்தன. ஜாக்கெட் கையிலும் இரண்டு விரக்கட்டை அளவு பச்சைக் கரையில் பட்டை.

நெற்றியில் சற்றே வெளிர்ப் பச்சை புடவை நிறத்தில் திலகக் கோடு, பச்சை வளையல், பச்சை டாலர், தொங்கும் மாலை கழுத்தில், காதின் இருபுறமும் தெரியும் பச்சை நிற ரிப்பன்.

அவன் அவள் உடம்பு பூராவையும் பார்த்தான்.

அந்த எழிலான உடம்பு ஒரு எழிற்கோலமாக நின்று கொண்டிருந்தது. இயற்கையான அந்தஸ்து என்கிற எண்ணம் அவன் மனத்தின் குறுக்கே மிக மெல்லிய காகிதச் சுவர் ஒன்றை எழுப்பிக் கொண்டிருந்தது.

மனதின் அங்கீகரிப்புக்கும், மனதின் அடிதளத்தில் ஊறிக் கிடக்கும் இயல்பான உணர்வுக்கும் அதிக இடைவெளி இருப்பதாக பட்டது அவனுக்கு. தன் மனதை இவ்வளவு சீக்கிரம் தன் தொழிற்சாலையில் வேலை செய்யும் பெண் ஊழியரிடம் இழக்கக்கூடாது என்கிற இயல்பான மன உறுத்தலையும், கட்டுப்பாடுகளையும் மீறி அவன் ஆசை தன் கடிவாளங்களை அறுத்துக் கொண்டு ஓடத் தொடங்கி விட்டது.

அதை தன் வீழ்ச்சி என்றோ, அல்லது அவளுடைய வெற்றி என்றோ எவ்வித அவசர முடிவுக்கும் அவன் வரவில்லை.

அவள் அவன் பார்வையிலிருந்து மறைந்து தன் இடத்திற்குப் போய்விட்டாள்.

அதற்குள் அவள் போய் விட்டாளே என்று இருந்தது. அவளை நிற்க வைத்து அவளுடைய அழகை இன்னும் சில நிமிஷங்கள் தனிமையில் பார்க்க வேண்டுமென்ற ஆவல்.

அவள் போய்விட்டது சற்று ஏமாற்றத்தையே கொடுத்தது.

ஃ ஃ ஃ

அன்று அவன் டென்னிஸ் விளையாட்டில் வழக்கத்தை விட அதிக உற்சாகத்துடன் காணப்பட்டான். மிக நேர்த்தியான சர்வீஸ்கள். மிகத் தாழ்வாக வந்த எதிரியின் பந்துகளையெல்லாம்கூட அபூர்வமான திறமையுடன் திருப்பி அடித்தான்.

இப்படி வாரத்தில் ஒன்றிரண்டு நாள்தான் அமைகிறது. வேகமாக வந்த அந்த பந்து உள்ளே விழுமா? வெளியே போகுமா என்கிற சந்தேகத்துடன் வந்ததைக்கூட அவன் திருப்பித் தாக்கி கொடுத்த ஒரு வேக வீச்சு எதிராளியை அப்படியே திக்குமுக்காட வைத்து விட்டது. கம்பி வேலிக்கு அப்பால் ஒற்றைக் கரவொலி.

கிருஷ்ணகுமாரி நின்றுகொண்டிருந்தாள்.

அது சாதாரணமாக அவன் தினம் விளையாடும் விளையாட்டு தான். அவன் விளையாடுகிற இடத்தில் அவனுக்கு அதிக ரசிகர்கள் கிடையாது. திறமையாக ஆடுவதாக அவனுக்குப் பட்டால் தனக்குத் தானே ரசித்துக் கொள்ளவேண்டியது தான். நல்ல வீச்சுகளை அவன் ஆடும் போது எதிரே ஆடுகிற இளைஞன் "குட்ஷாட்" என்று ஒரு சப்தம் போடுவான்! அல்லது கோர்ட் ஓரமாக கூடை நாற்காலிகளிலோ அல்லது பச்சை நிறப் பிரம்பு நாற்காலி

களிலோ அமர்ந்திருக்கும் பெரிய வீட்டுப் பிள்ளைகள் இஷ்டமிருந்தால் வெல்டன், ஒன்டர்ஃபுல் சர்வீஸ்...ஷாட்...ஷாட் என்று குரல் கொடுப்பார்கள். அவ்வளவே, பெருவாரியான நாட்களில், பெருவாரியான விளையாட்டுகள் மௌனமாகவே நடந்து முடிந்து விடும்.

ஆனால் இன்றைய எதிர்பாராத நல்ல ஆட்டத்திற்கு ஒரு பிரத்தியேக ரசிகையின் உற்சாகமான கை தட்டல் கிடைத்து விட்டது.

வெள்ளை நிற கேன்வாஸ் ஷூ தரையில் வழுக்க அவன் மேலும் உற்சாகமடைந்து விளையாடிக் கொண்டிருந்தான்

ஆட்டம் முடியும் போது அவள் வேலிக்கு அப்பால் இல்லை.

அவன் கண்கள் அந்த சுற்று வட்டாரம் பூராவும் அலைந்து தேடின. அவள் எந்தப் பக்கம் போனாள் என்று தெரியவில்லை.

அவன் தன் ஆட்டத்தை முடித்துக் கொண்டு மைதானத்தை விட்டு வெளியே வந்தான். மட்டையை காரில் போட்டுவிட்டு காரின் முன் ஸீட்டில் போடப் பட்டிருந்த மஞ்சள் நிற தேங்காய்ப் பூ டவலை எடுத்து முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டான். அப்பொழுதும் அவன் கண்கள் அவளைத் தேடின. அவள் எங்கிலுமே தென்படவில்லை.

ஏரிக்கரை நோக்கி அவன் கார் போய்க் கொண்டிருந்தது

அவன் காரின் கண்ணாடிக்கு நடுவே வந்து நின்று கொண்டு கை தட்டினாள்.

அவன் சிரித்துக் கொண்டான். கார் கங்கோத்ரி முடிவில் பல்கலைக்கழக சாலையின் திருப்பத்தில் நின்றது.

அவன் காரை விட்டு கீழே இறங்கி ஏரிக் கரைக்கு ஓடி வந்தான்.

அவள் படகில் ஏரியின் நடுவில் போய்க் கொண்டிருந்தாள்.

போட்டுக் கொண்டிருந்த பனியனைக் கழற்றி கரையில் போட்டுவிட்டு நீரில் குதித்து விட்டான்.

வேக வீச்சில் கைகளை மாற்றி போட்டு அவன் நீந்தி படகைத் தொடர்ந்து போனான்.

பின்னால் நீந்திக் கொண்டு வரும் அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

ஏரியில் சமுத்திரம் போல நீர் அலை மோதிக் கொண்டிருந்தது. கங்கோத்ரியின் நீளமான சாலை, அதை அடுத்து உயரமான கரை! மறுகோடியில் பொட்டானிகல் கார்டனின் பசுமை படர்ந்த வனம். மறுபுறம் பல்கலைக்கழகச் சாலை நீரின் நடுவில் போகும்போது சில மர இடுக்குகளின் வழியே தெரியும் மைசூர் பல்கலைக்கழகக் கட்டிடத்தின் வெண்மையான கோபுரம் மற்றும் வாதநாராயண, கொன்னை மரங்களுக்கு நடுவில் தெரியும் மகாராஜா, யுவராஜா கல்லூரி கட்டிடங்கள்.

அவன் அவளுடைய படகின் வேகத்தை அனுசரித்து அதன் பக்கவாட்டில் நீந்திக் கொண்டே வந்தான்.

"கொஞ்சம் இருந்தால் ரெண்டு பேரும் கார்லேயே வந்திருக்கலாமே!"

"அப்படியேதும் நேர்ந்து விடக்கூடாது என்பதால்தான் தவிர்த்துக் கொண்டேன்."

"தவிர்த்துக் கொள்ளக்கூடிய அளவுக்கு இதில் ஆபத்துக்கள் ஏதும் இருப்பதாக எனக்குப்படவில்லை."

"நான் ஆபத்துக்களைப் பற்றி கூறவில்லை. அவைகள் தானாக நிகழ்பவை. நான் தவிர்த்துக் கொள்ள நினைத்தது வேறு. ஆபத்து என்று நான் நினைத்திருந்தால் உங்களுடைய அருமையான டென்னிஸ் ஆட்டத்தைப் பார்க்க அங்கே வந்திருக்கவே மாட்டேன்!"

படகு போய்க் கொண்டிருந்தது. அவன் மெதுவாக நீந்திக் கொண்டிருந்தான். இரண்டுமுறை நீருக்குள் மூழ்கி தலையை வெளியே நீட்டி சிலிப்பிக்கொண்டான்.

எல்லாவற்றின் ஆரம்பமும் மிக மனோகரமானதாகத் தான் தோன்றுகின்றன. நடுபாகம் சிலசமயம் சுவையானதே! ஆனால் முடிவுதான்...

ஒருகையால் அவளுடைய படகை ஒரு ஆட்டு ஆட்டி விட்டான். அதுவேகமாக ஆடியது. அவள் சிரித்துக் கொண்டே கத்தினாள்.

அவர்கள் ஏரிக்கரைச் சரிவில் உட்கார்ந்திருந்தார்கள் அவள் உபயோகித்த படகை இப்பொழுது வேறு ஒரு காதல் ஜோடி எடுத்துக் கொண்டிருந்தது. ஏரிக்கரைச் சரிவில் ஆங்காங்கு இளம் ஜோடிகள் காதல் கதைகள் பலபேசி, இன்பக் கதையின் இடையிடையே நாணிச் சிரித்துக் கொண்டிருந்தனர்.

அவன் ஈர அரை நிக்கருடன் புல் வெளியில் அமர்ந்து டர்கிட் டவலினால் வெறும் உடம்பைப் போர்த்திக் கொண் டிருந்தான்.

அவனிடமிருந்து சற்று அதிகமான இடைவெளி விட்டு அவள் குத்துக்காலிட்டு அமர்ந்திருந்தாள்.

அவளிடம் அவன் ஏதேதோ பேச வேண்டுமென்று எண்ணினான். எந்தப் பேச்சும், முழுமையற்றதாக ஆரம் பித்தவுடன் இரண்டு மூன்று நிமிஷங்களுக்கு மேல் போகாமல் அப்படியப்படியே நின்று வேறு ஒன்றுக்குத் தாவியது.

அவனிடம் அதிகமான அந்தஸ்து உணர்வு இருப்பதாகத் தோன்றியது. அதே நேரத்தில் அதையும் மீறி காதல் வயப்பட்டும் காணப்பட்டான். அவன் கைகளும், கால் களும், ஏனோ அதிகம் பரபரப்புடன் காணப்பட்டன. ஒரு

முறை கால்கள் இரண்டையும் புல்வெளியில் நீட்டி கைகளை பின்புறம் வைத்துக் கொண்டான். உடனே கால்களைப் புல் தரையில் படியும்படி மண்டியிட்டு ஒரு கைகளை யோகியைப் போல சேர்த்து வைத்துக் கொண்டான்.

திடீரென்று அவனுக்கு அவனுடைய உள் உணர்வு களையும் மீறி ஒரு கேள்வி கேட்கத் தோன்றிவிட்டது.

"எப்படியிருக்கிறது வேலை? வேலை மனதிற்குப் பிடித் திருக்கிறதா?"

"இந்த காலத்தில் மனதிற்கு பிடித்த வேலை, பிடிக் காத வேலை என்று பார்த்தால் எப்படி? அவசியம் நேரும்போது வேலையின் தன்மைகள் பற்றி ஆராய முடியுமா? ஆனால் என்னைப் பொறுத்த வரையில் எனக்கு இந்த வேலைப் பிடித்திருக்கிறது. அது மட்டுமல்ல, இந்த வேலைக்கு நான் வரவேண்டுமென்று விரும்பி வந்திருக் கிறேன்.

உங்கள் நிறுவனத்தின் விளம்பரத்தைப் பார்த்த அடுத்த அரைமணி நேரத்தில் என்னுடைய விண்ணப் பத்தைத் தபாலில் சேர்ப்பித்து விட்டேன். எனக்கு அவ்வளவு. அவசரம் இங்கே வர..."

"உண்மையாகவா?"

"அந்த விண்ணப்பம் போடும்போது ஐநூறு ரூபாய் சம்பளத்துடன் ஆவடி தொழிற்சாலையொன்றில் சேல்ஸ் கேளாக இருந்தேன்."

"இது இப்படிப்பட்ட தொழிற்சாலை என்பது உனக்கு முன்பே தெரியுமா?"

"தெரியும். சென்னையில் இப்படிப்பட்ட பிரம்மாண்ட மான தொழிற்சாலையொன்று மோசமான நிர்வாகத் தினால் பாழாகிக் கொண்டிருக்கிறது. அது மட்டும் சிறந்த

முறையில் செயல் பட்டு அதன் எல்லா பிரிவுகளும் வேலை செய்ய ஆரம்பித்தால் கட்டுமானப் பணிக்கான அறுபது சதவிகித தேவையை அது ஈடு கொடுக்க முடியும். அதைப் பற்றி பத்திரிகைகள் எல்லாம் கூட எழுதி விட்டன.''

அவன் வியப்புடன் அவளைப் பார்த்தான்.

''உனக்கொரு விஷயம் தெரியுமா? அந்த தொழிற் சாலையில் ஆரம்ப காலங்களில் என் சகோதரன் ப்ராஜெக்ட் இன்ஜினீயராக இருந்திருக்கிறான்.

தொழிற்சாலையை நடத்துபவர், பராமரிப்பவர், சிவில் இன்ஜினீயர்.''

''அந்த இரண்டு வல்லுனர்களுக்கு நடுவே என்றுமே ஒற்றுமை இருந்ததில்லை. அதனுடைய மோசமான அறுவடைதான் இப்பொழுது சுமார் ஏழாண்டு காலமாக அந்த பிரம்மாண்டமான தொழிற் கூடம் அப்படியே அரை குறையாக முடங்கிப் போய்க் கிடக்கிறது. நிர்வாகத்தை ஒழுங்கு படுத்தவே முடியவில்லை'' — என்றாள் கிருஷ்ண குமாரி!

''உனக்கெப்படி இதெல்லாம் கூடத் தெரிந்திருக்கிறது?''

இதற்கு அவள் நேரிடையாகப் பதில் கூறவில்லை.

''எனக்கு அங்கே பிரதான தொழிற்சங்க நிர்வாகி ஒருவரைத் தெரியும். அரசாங்கத்தின் பெரும் மூலதனத்தை கபளீகரம் செய்து வெறுமனே உற்பத்தி என்று எதையோ பேருக்குச் செய்து முடங்கிக் கிடக்கும், அதை மீண்டும் உயிருள்ள தொழிற்சாலையாக்க அந்த தொழிற் சங்கத் தலைவர் அரும்பாடுபட்டார். அவர் முயற்சிகள் பலனிக் காமல் போக உள்ளூர் அரசியலும், வால் போஸ்டர் அரசியலும்தான் காரணம்.

மாலை நேரக்காற்று சீதளத்துடன் வீசியது.

"இந்தக் காற்றில் உடம்பைத் துடைத்துக் கொள்ளாமல் அரை நிக்கருடன் உட்கார்ந்திருக்கிறீர்களே உங்களுக்குக் குளிரவில்லையா?"

பசியபுல் தரையில் அவள் கரத்திற்கு மிக அருகில் அவன் கரம் இருந்தது. இரண்டு விரல் நுனிகளும் மயிரிழையில் இருந்தன.

அவள் எழுந்தாள்.

அவனும் எழுந்தான்.

"எங்கே அந்த எஸ் எல் ஆர் சைக்கிளைக் காணோம்"

"இன்று நடந்தே வந்தேன். மாலை நேரத்தில் இந்த கங்கோத்ரி சாலையில் நடப்பது எவ்வளவு ரம்மியமாக இருக்கிறது. இங்கே வந்து உட்கார்ந்தால் மனத்தின் சிந்தனையென்பது ஒரு கவிதைப் பிரவாகமாகவே மாறி விடுகிறது."

அவனுடன் பேசியவாறு உயரமாக ஏரிக்கரையில் நடந்தாள்.

"என் காரில் கொண்டு போய் விடுகிறேனே"

"நன்றி என்னை காலார நடக்க விடுங்கள் நான் இங்குள்ள அமைதியான புறநகர் சாலைகளில் நடக்கவே விரும்புகிறேன்.

அவனிடம் விடை பெற்று தன் வழியில் திரும்பினாள்.

காரில் வந்து அமர்ந்த ராஜசேகர் அவள் போவதை நேரிடையாகப் பார்ப்பதை தவிர்த்து விட்டு காரின் கண்ணாடியை சரி செய்து வைத்துக் கொண்டு பார்த்தான்.

பிறகு அவனும் புறப்பட்டு விட்டான்.

தொழிற்சாலையில் தன் அலுவலக அறையில் வழக்கத்தைவிட அதிக சுறு சுறுப்புடன் காணப்பட்டான் ராஜசேகர்.

படித்துப் பார்த்து கையெழுத்திட வேண்டியவைகளை பிறகு பார்க்கிறேன். இன்றே போக வேண்டிய தபால் களை மட்டும் கொண்டு வா. அவைகளைப் பார்த்து விட்டுப் போகிறேன். வீட்டில் எனக்காக எல்லோரும் காத்திருப்பார்கள்.

என்ன விசேஷம் என்று அவள் கேட்கவில்லை.

அடுத்த சந்திப்பின் போது இதைப் பற்றி அவனே கூறுவான் என்று அவளுக்குத் தெரியும்.

அவனுக்கு அவளிடம் நிறையப் பேச வேண்டுமென்ற ஆவல் ரொம்ப உண்டு. ஆரம்பத்தில் அவனிடத்தில் இயல்பாக உள்ள அந்தஸ்து. அதற்குத் தடையாக இருந்தது. பின்பு மனத்தளவில் அந்தத் தடை கட்டவிழ்த்துக் கொண்ட பின்பு அவளுடைய அழகின் பிரசன்னம் அவன் சிந்தனைகளை ஆக்கிரமித்துக் கொண்டு விட்டது.

அவள் மிகச் சுலபமாக எட்டி விடக்கூடிய பெண் அல்ல. சுபாவத்தில் சற்று கடினப்பட்டவள் என்கிற நினைப்பு கூட அவள் பேரில் ஒரு தனி ஆர்வம் வளரக் காரணமாக இருந்தது.

பார்த்தவுடன், பேசியவுடன் பழகியவுடன் தன் காதல் வேகங்களை வெளிக்காட்டி விடும் மிகச் சாதாரண வகைப் பெண் அல்ல இவள், என்கிற நினைப்பு அவள் மேல் இன்னும் அதிக அக்கறை கொள்ளத் தூண்டியது.

அவள் இதுவரை தன் மனம் திறந்து, ஒரு வார்த்தை அதிகமாகப் பேசி விட வில்லை. சந்திக்கின்ற எல்லா நேரங்களிலும் ஏதேனும் பொதுவிஷயங்கள் பற்றியே பேசினாள். ஒரு சமயம் தொழிற் சங்கம் பற்றிப் பேசினாள். மற்றொரு சமயம் கலை பற்றி பேசினாள். ஒரு தடவை மனிதர்களிடம் குறைந்து கொண்டு வரும் நடத்தை நெறி பற்றி அதிக நேரம் பேசினாள்.

இவை எல்லாமே அவளுடைய வித்தியாசமான குண இயல்புகளையே பிரதிபலித்தன.

கையெழுத்துப் போட்டு கோப்பை அவளிடம் நீட்டிக் கொண்டே எழுந்து நின்றான்.

''இன்றைக்கு இது போதும். மீதியை பிறகு பார்த்துக் கொள்ளலாம்'' என்று கூறிவிட்டு மேஜை மேலிருந்த இண்டர்காமில் பிராஜக்ட் இன்ஜினியரையும் அடுத்து ஒர்க்ஸ் மேனேஜரையும் தனித்தனியே அழைத்தான். அவசர அலுவல் காரணமாக வெளியே போவதைக் கூறினான்.

அவன் செய்கையில் ஒரு புது வேகம் தெரிந்தது. இதை அவள் அவன் எதிரே மேஜைமுன் நின்று கவனித்தபடி இருந்தாள்.

''நிறைய செய்திகள் இருக்கிறது. பிறகு வந்து சொல்கிறேன்'' என்றான் சிரித்தபடி. அப்படி அவன் கூறும்போது அந்த வார்த்தையில் அதிக ஸ்நேகம் வெளிப்பட்டது.

வெளியே நிற்கும் தன் காருக்கு வந்தான். அவளைப் பார்த்துக் கொண்டே காரை கிளப்பினான்.

போய் விட்டான்.

ஃ ஃ ஃ

ராஜசேகரின் பங்களாவின் முன்னால் இரண்டு மூன்று கார்கள் நின்று கொண்டிருந்தன.

அவன் பெற்றோர் உட்பட மற்றும் வெளியூரிலிருந்து வந்திருந்த உறவினர்களும் அவன் வருகைக்காகக் காத்திருந்தனர்;

அவன் பங்களாவின் பிரதான நுழைவாயிலுக்குள் நுழையும்போதே உள்ளே சுறுசுறுப்பு உண்டாகிவிட்டது,

அவனை போர்டிகோவிலேயே எதிர் கொண்டழைக்க சிலர் எழுந்து வந்தனர்.

உனக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறோம். நீயில்லாமல் எதுவும் பேசுவதற்கில்லை என்று உன் தாயார் கூறி விட்டார்—

ஒரு நடுத்தர வயதுடையவர் இப்படிக் கூறிக்கொண்டே அவன் கரத்தைப்பற்றி உள்ளே அழைத்து வந்தார்.

''நான் எதற்கு. நீங்கள் எல்லோரும் பெரியவர்கள். அப்பா இருக்கிறார். அம்மா இருக்கிறாள். அதோ மாண்டியாவிலிருந்து மாமா வந்திருக்கிறார், பெங்களூர் அத்தான் வந்திருக்கிறார்.''

அவன் ஹாலுக்குள் நுழைந்தபோது நிறைய புது மனிதர்கள் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான்.

புதியவர்களுடைய அறிமுகத்தை பெங்களூர் அத்தான் ஹரிபாஸ்கர் ஆரம்பித்து வைத்தார்.

இவர் பெண்ணின் தகப்பனார். குமார கிருஷ்ணன். இவர் பெண்ணின் மாமா துபாய் ராஜி. இவர் பெண்ணின் மூத்த சகோதரன் சந்தானராமன். அவர்களுடைய நண்பர்கள் எல்லோரும் சென்னையிலிருந்து வருகிறார்கள்.

பெண் எம்.எஸ்ஸியாம். உன் அண்ணாவுக்கும், அவளுக்கும் ரொம்பப் பழக்கமாம். அவர்கள் ரெண்டுபேரும் ஒருவரை ஒருவர் விரும்பி அவர்களுக்குள் முடிவும் செய்து விட்டார்களாம்.

இதெல்லாம் அவனுக்கும் தெரியும். இதுவொன்றும் புதிய செய்தியல்ல.

தாயார் பேசிக் கொண்டிருக்கும்போது பெண்ணின் தந்தை தன்னிடமுள்ள கடிதமொன்றை ராஜசேகரிடம் நீட்டினார்.

''என்ன இது?''

"பாருங்கள். நாங்கள் இங்கே ஏன் வரவேண்டுமென்பதற்கான பதில் இருக்கு. ஹாலந்தில் இருக்கும் உங்கள் மூத்த சகோதரர் என் பெண்ணுக்கு எழுதிய கடிதம்."

"இதை எதற்கு நான் படிக்கவேண்டும். நீங்கள்தான் சொல்லிவிட்டீர்களே!"

"பரவாயில்லை படியுங்கள்."

"உன் வீட்டில் உனக்கு திருமணம் முடிக்க பெற்றோர் எடுத்திருக்கும் முயற்சிபற்றி நீ எழுதியதைப் படித்தேன். என்னுடைய படிப்பும், பயிற்சியும் முடிந்து வர எனக்கு மேலும் ஒரு வருஷ காலம் அவகாசம் அளித்திருக்கிறார்கள். எனவே எப்படியும் நான் இந்த ஆண்டு இளவேனில் முடிந்து முதுவேனிற்காலம் ஆரம்பிக்கும்போது வந்து விடுவேன். இத்தனை நாட்கள் எனக்காக காத்திருந்த உனக்கு மேலும் சில மாதங்கள் காத்திருப்பது அவ்வளவு கடினமாக இருக்காது என்றே நினைக்கிறேன், ஏனென்றால் இங்கே உனக்காக நான் காத்துக்கொண்டிருக்கிறேன். இதற்கிடையில் உனது இளைய சகோதரனையும் சந்தித்து நமது திருமணத்திற்கான பேச்சு வார்த்தையைத் தொடங்கி வைக்கச் சொல்லவும் பேச்சு வார்த்தைகள் நடந்து முடிந்து அவர்கள் மற்ற லௌகீக விஷயங்கள்பற்றி பேசி ஒரு முடிவுக்கு வரட்டும். அவர்களுடைய முடிவில் நாம் தலையிட வேண்டாம். அவர்கள் நமக்கு நல்லது செய்வார்கள் என்ற நம்பிக்கையுடன் இருப்போம்."

—அந்த எழுத்திலோ, கடைசியில் அவன் போட்டிருக்கிற கையெழுத்திலோ சந்தேகப்பட ஒன்றுமில்லை. அது அவனுடைய மூத்த சகோதரனுடைய எழுத்துதான்.

அக்கடிதத்தைப் பார்த்து அவன் அப்படியொன்றும் உணர்ச்சி வசப்பட்டு விடவில்லை.

அக்கடிதம் அவன் மனதில் எவ்வித ஆழமான உணர்வுகளையும் உண்டாக்கவில்லை. மாறாக ஏதோ பெரிய

பாரம் வந்து மனதில் உட்கார்ந்து கொண்ட மாதிரி யிருந்தது.

காரணம்.

அவன் சகோதரன் பேரில் அவனுக்கு அவ்வளவு அவ நம்பிக்கை. அவனுடைய காதல் விவகாரங்களின் பேரில் கொஞ்சம் கூட நம்பிக்கையற்றவன் ராஜசேகர்.

காதல் விவகாரங்களில் அவன் சகோதரன் கொஞ்சம் கூட நம்பிக்கைக்கு உரியவனே அல்ல.

அவனுடைய பல லீலைகள் பணத்தால் மறைக்கப் பட்டிருக்கின்றன.

அவன் தான் சந்திக்கும் பெண்களையெல்லாம் காதலி என்பான். கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று கைமேல் அடித்து சத்தியம் செய்வான். பிறகு அதை நிறைவேற்றா மல் அதிலிருந்து தப்பித்து நழுவி விடுவான். புத்திசாலிப் பெண்கள் அவன் தொடர்புகளை சற்று தூரமாகவே வைத்துக் கொண்டு பிறகு அவன் குணம் தெரிந்து ஒதுங்கிப் போய் விடுவார்கள்.

அவன் வார்த்தையில் மயங்கியவர்கள் அவன் தொடர் பால் அவஸ்தைப் பட்டு பின்பு கண்ணீரிடையே ஒதுங்கி யிருக்கிறார்கள் அல்லது ஒதுக்கப்பட்டிருக்கிறார்கள்.

அண்ணனின் காதல் விவகாரங்களில் அவர்களிடையே கருத்து வேறுபாடுகள் நிறைய உண்டு. சிலசமயம் அவை குடும்பத்தில் சல சலப்புகளைக் கூட உண்டாக்கியிருக்கிறது. எனினும் தனது குடும்ப கவுரவத்தை மனதிற்கொண்டு அவைகளை மிகப்பெரிய சர்ச்சையாக்க விரும்பாமல் உடனுக்குடன் சமநிலைக்கு வந்து விடுவான். வந்திருக் கிறான்.

அண்ணனின் காதல் விவகாரங்களினால் குடும்பத்தில் விரையமாகும் பணம் பற்றி கூட ராஜசேகர் அதிகம்

கவலைப் படவில்லை. குடும்பத்தின் கவுரவம் கீழே இறங்கு வதைத் தான் அவனால் சகித்துக் கொள்ள முடியாமல் பல நேரங்களில் எரி மலையாக வெடித்திருக்கிறான். குடும்பத்தில் குமுறியிருக்கிறான்,

எல்லார் முன்னிலும் தான் ரொம்ப உற்சாகமாக இருப்பது போல காட்டிக் கொண்டாலும் உள்ளுக்குள் அவன் அப்படியில்லை. பெற்றோர்கள் தலையிட்டிருக்கிறார்கள். பெண்வீட்டுக்காரர்கள் சென்னையிலிருந்து இதற்காக வந்திருக்கிறார்கள் என்பதால் தன் அபிப்ராயமாக எதுவும் சொல்லாமல் ஒரு பார்வையாளன் போல பட்டும் படாமலும் இருந்து விட்டான்.

அவர்கள் வந்தார்கள். சம்பிரதாயத்திற்காகப் பேச்சை ஆரம்பித்தார்கள். உங்கள் பையன் எங்கள் பெண்ணை கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். அவர்கள் பரஸ்பரம் விரும்புகிறார்கள் என்று சொன்னார்கள்.

பெற்றோரும் வார்த்தையளவில் ஒப்புக் கொண்டு கல்யாணப் பேச்சு என்கிற சம்பிரதாயமான சடங்கை சுமுகமாக முடித்து வைத்து வந்தவர்களை சந்தோஷமாக அனுப்பிவைத்து விட்டார்கள்.

# 6

இரவு சாப்பாட்டுக்குபின் மாடியில்தன் அறையில் குறுக்கு நெடுக்கமாக நடந்து கொண்டிருந்தான்ராஜசேகர்.

கபில நிறத்தில் தொங்கிக் கொண்டிருந்த ராமர் பட்டாபிஷேக திரைச் சீலையைத் தள்ளிக் கொண்டு தாயைத் தொடர்ந்து தந்தை உள்ளே நுழைந்தார்.

"இந்த வயதில் நீங்கள் இவ்வளவு படியேறி மேலே வர வேண்டுமா? கீழேயிருந்து குரல் கொடுத்தால் நானே கீழே வருவேனே!"

"பரவாயில்லை......" ஜோடியாகக் கிடந்த சோபா வில் அருகருகில் அமர்ந்தார்கள்.

அவனுக்கு பெற்றோர்மேல் அளவற்ற அன்பு உண்டு. பாசம் உண்டு. இவ்வளவுக்கும் மீறி ஒரு தேவதா விசுவாசம் உண்டு.

அவர்களுக்கு எதிரே மிக நெருக்கமாக வட்டமான மோடா ஒன்றை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந் தான்.

"மாலையில் நடந்த கல்யாணப் பேச்சு வார்த்தையில் நீ உற்சாகமாகக் கலந்து கொள்ள வில்லை என்பது எங் களுக்குத் தெரியும். இருந்தாலும் எங்களுக்கும் ஒரு பொறுப்பு இருக்கு. அவனை இப்படியே தறிகெட்டுப்போய் விட அனுமதிக்கக் கூடாதுஇல்லையா? ஏதோ அவனாக ஒரு பெண்ணை விரும்பி கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று வாக்குறுதி தந்திருக்கிறான். அதன் பேரில் அவர்கள் நம்பிக்கையுடன் நம்மைத் தேடிவந்திருக் கிறார்கள். இந்த வாய்ப்பை நாமும் பயன்படுத்திக் கொண்டு அவனுடைய தறிகெட்ட நடவடிக்கைக்கு இந்த வகையில் முற்றுப்புள்ளி வைக்கலாம் இல்லையா?"

பெற்றோரின் கரங்களைதன் இரண்டு கரங்களில் பிடித்துக் கொண்டு,

"உங்கள் முயற்சிகள் சரி தான். இப்பொழுது போலந் தில் இருக்கும் அவன் திரும்பிவரும் வரையில் அப்படியே இருப்பான் என்பதற்கு நீங்கள் உத்திரவாதம் அளிப்பதாக இருந்தால் உங்களுடைய இந்த முயற்சிகளுக்கு என்னுடைய பரிபூரணமான ஒத்துழைப்பைத்தர முடியும். அவன் அப்படி திரும்பி வருவான் என்று உங்களால் கூறமுடியுமா? குமார கிருஷ்ணனின் பெண்ணுக்கு அவன் சென்னையில் வாக்குறுதி தந்திருக்கிறான். அதையே ஊர்ஜிதம் செய்து வெளி நாட்டி லிருந்து கடிதம் எழுதியிருக்கிறான் என்பதை வைத்துக் கொண்டு இதில் எப்படி தலையிட முடியும்?" என்றான்.

"சமீபத்தில் ஒரு பெண் வந்தாளே! அவளுடைய பெற்றோரை அழைத்துக்கொண்டு வந்து என்ன கேட்டாள்? அவள் எவ்வளவு காதல் கடிதங்களைக் காட்டினாள். அந்தபெண் எப்படி அழுதாள்...அவன் எவ்வளவு வாக்குறுதிகள் தந்திருந்தான் அவளுக்கு. அவள் சொன்னதை நாம் எல்லோரும்தான் கேட்டோமே! அவள் காண்பித்த கடிதங்களை நாமும்தான் பார்த்தோமே...!

அந்த சமயம் ரொம்பவும் எதிர்பாராத விதத்தில் சென்னையிலிருந்து வந்த உங்களுடைய சீமந்தபுத்திரனின் செய்கைகள் எப்படி விசித்திரமாகச் செயல்பட்டது பார்த்தீர்களா? இவர்களை யார் என்றே தெரியாது. இவர்களை இதற்குமுன் பார்த்ததேயில்லை என்று எப்படி சாதித்தான்.

அவன் முன்னால் தானே அவள் கதறினாள். அவர்கள் சந்திப்பை ஒன்று விடாமல் கூறி அவனிடம் அந்த காதல் கடிதங்களை எல்லாம் காட்டினாளே! அவன் அசைந்து கொடுத்தானா? கடைசியில் அந்த பெண் எப்படி அழுது கொண்டே வெளியேறினாள்.

அவள் தன் தந்தையுடன் வெளியேறிய பின் இவன் என்ன சொன்னான்.

அவள் சொன்னதெல்லாம் உண்மைதான். ஏதோ அப்பொழுதிருந்த வேகத்தில் சொன்னேன். நான் அவளை காதலித்ததற்காக, அவளை அப்படியே நிராதரவாக விட்டு விடவில்லை. அதற்கான விலையைக் கொடுத்து விட்டேன். பத்து பவுனில் இரட்டை வடம் சங்கிலி, விலை உயர்ந்த வாட்ச் இப்படி எத்தனையோ—என்று கொஞ்சம் கூட வெட்கமில்லாமல் கூறினானே! நாம் எல்லோரும் தானே கேட்டோம்.

அப்படிப்பட்டவன் தான் குமாரகிருஷ்ணனின் பெண்ணுக்கும் கடிதம் எழுதியிருக்கிறான். இதில் ஒரு சின்ன வித்தியாசம். இவர்கள் கொஞ்சம் பெரிய இடம். ஏராள

மான சொத்துக்களுக்கு ஒரே வாரிசு நீங்கள் அடிக்கடி கூறும் நம் அந்தஸ்துக்கு ஏற்ற இடம் அவ்வளவுதான்.

அவன் இடத்தை விட்டு எழுந்தான், உள்ளமும் உணர்வும் அதிதீதமாகத் துடித்தது, தான் தனது மூத்த சகோதரனைப் பற்றி பெற்றோரிடம் மனம் திறந்து பேசி விட்ட திருப்தி.

அவனுடைய அண்ணன் பேரில் அவனுக்கு அன்பும் உண்டு. அதே நேரத்தில் ஆதங்கமும் உண்டு.

தொழில் விஷயத்தில் அவன் மிகவும் அக்கறையுள்ளவன். ஆர்வமுள்ளவன். புதுப்புது கண்டுபிடிப்புகளை உடனுக்குடன் கிரகித்து செயல்படுத்த விழைகிறவன்.

முன் கோபம், பிடிவாதம், அளவுக்கு அதிகமான பணக்காரத்தனம்—இவை அவனிடம் இருக்கிற துர்குணங்கள். ராஜசேகருக்கு இவை கட்டோடு பிடிக்காது.

தொழில்முறையில் தொழிலாளர் பிரச்சனை என்று வரும்போது தொழிற்சங்க வாதிகளிடம் சமரசம் செய்து கொள்ளவே விரும்ப மாட்டான். ஆர்பிட்ரேஷன்—அதாவது மத்தியஸ்த தீர்ப்புக்கு கட்டுப்படாத முரடன்.

இவையும் ராஜசேகருக்குப் பிடிக்காது.

அண்ணனுடைய வெளி நடவடிக்கைகளில் அதிகம் தலையிடாதவனுக்கு தொழிற்துறையில் அவனுடைய முடிவுகளில் அதிகம் தலையிட வேண்டியிருந்தது.

அவனுடைய இயல்பான தொழிலாளர் விரோத மனப்போக்கைப் புரிந்து கொண்ட தொழிற்சங்க வாதிகள் அதற்குப் பின் உண்டான சிறுசிறு போராட்டங்களில் சமரச பேச்சு வார்த்தைகளில் அவனுடன் பேச உட்காரவே மறுத்து விட்டார்கள்' ராஜசேகர் தான் உட்கார வேண்டியிருந்தது.

அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் எல்லாம் ராஜசேகரரின் அணுகுமுறை உஷ்ணங்களைத் தனித்திருக்கிறது.

அறையில் நீண்டநேரம் மௌனம் நிலவியது.

‘‘அவனும் கடிதம் எழுதியிருக்கிறான். அவர்களும் வந்து கேட்கிறார்களே என்று பார்த்தோம்...’’ என்று தகப்பனார் இழுத்தார்.

‘‘நான் உங்களுடைய நம்பிக்கைகளைச் சிதைக்க விரும்ப வில்லை. இப்பொழுதும்கூட அதையேதான் சொல்கிறேன். அவன் பேச்சைக் கேட்டு நாமாக எதையும் அங்கீகரித்துக் கொள்ள வேண்டாம். அவன் வந்து சேரட்டும். சேர்ந்தபின் அவர்கள் இஷ்டப்படியே இந்த கல்யாணத்தை நடத்துவோம் என்கிறேன். அவ்வளவுதான். அவன் பேச்சை நம்பி நாம் இதில் ஏதும் வாக்குறுதி தந்துவிட்டால் பிறகு நாமும் அவமானப் படநேரும்...’’

ராஜசேகரின் வார்த்தையில் உள்ள நியாய பூர்வமான உணர்வுகளைப் புரிந்துகொண்ட அவன் தந்தை உட்கார்ந் திருந்த இடத்தை விட்டு எழுந்து, அவனிடம் வந்து நின்றார். அவன் தோள் மேல் கையைப் போட்டு அணைத்துக் கொண்டார்.

நாங்கள் உன்னை மகனாக அடைந்ததற்குப் பெருமைப் படுகிறோம் என்கிறார், ஆங்கிலத்தில்.

இந்த வார்த்தையைக் கேட்டவுடன் ராஜசேகரின் கண் கள் கலங்கி விட்டன.

‘‘இல்லேப்பா, நான் உங்களுடைய கடைசிப் பையன் எனக்கு முன்பு இரண்டு சகோதகரிகள், ஒரு அண்ணன் எல்லோரும் இருக்க என்மேல் நீங்கள் வைத்துள்ள அபரிமித மான அன்பையும், நம்பிக்கையையும் பார்த்து ஒரு உயர்ந்த பெற்றோரின் மகனாகப் பிறந்திருக்கிறேனே என்று நான் தான் பெருமைப்படுகிறேன்’’ என்றான்.

அவர்கள் படியிறங்கி கீழே போய்விட்டார்கள்.

அன்று அவன் தன் அலுவலக அறைக்குள் நுழைந்த போது பார்க்க வேண்டிய இரண்டு மூன்று நாள் பேப்பர்கள் மேஜைமீது இருந்தன.

அவன் தொடர்ந்து பல்வேறு வெளி அலுவல் காரண மாக தொழிற்சாலைக்கு வரவில்லை. தொழிற்சாலையி லிருந்து வீட்டிற்குக் கொண்டுவரப்பட்ட தபால்களில் கிருஷ்ணகுமாரியின் லீவு லெட்டரும் இருந்ததால் அன்று அலுவலகத்திற்குள் நுழையும்போது அவள் இருக்கமாட்டாள் என்பது அவனுக்குத் தெரியும்.

அவள் கோரியிருந்த மூன்று நாள் விடுப்பு அன்றுடன் முடிந்து விடுகிறது. அடுத்த நாள்தான் அவளை எதிர்பார்க்க முடியும்.

அவன் மனம் மூன்று நாட்களாக ஏதோ சுமையொன்றை இறக்கி வைக்க சுமைதாங்கியொன்றை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது.

அண்ணனுக்கு பெண் வந்த செய்தி. அண்ணனைப் பற்றிய செய்தி. இந்த கல்யாணத்தின் பேரில் தன் பெற்றோ ரிடம் கூறிய தன் அபிப்ராயம் என்று எல்லாவற்றையும் அவ ளிடம் ஒவ்வொன்றாகக் கூறவேண்டுமென்று அவன் நினைத் தான்.

இந்த அளவுக்கு அவள் தன்னுடன் நெருங்கி விட்டதாக அவன் நினைத்தான்.

அவள் அமைதியானவள். ஆடம்பரமற்றவள். எளிமை யானவள். நம்பிக்கைக்கு பாத்திரமானவள். அவளிடம் எதையும் கூறலாம். எல்லாவற்றையும் அறிவு பூர்வமாக சிந்திக்கக்கூடிய அசாதாரணமான இயல்பு கொண்டவள்.

விடுப்பு முடிந்து அவள் வந்தவுடன் அவளிடத்தில் தன் உள்ளத்து ரகசிய விருப்பங்களை யெல்லாம் கொட்டிக் கவிழ்த்துவிட வேண்டும். விருப்பங்களைக் கூறிவிட

வேண்டும். எதிர்காலம் பற்றி விவாதிக்க வேண்டும். சரியான சூழ்நிலையை உருவாக்கிக்கொண்டு அவள் உள்ளத்தில் நிரந்தரமான நம்பிக்கையை ஸ்தாபிக்க வேண்டும்.

அவள் ஏழை, யாருமற்றவள் என்பதெல்லாம் ஆழமான அன்புக்கு முன் இரண்டாம் பட்சமே!

—என்று ஏராளமான காகிதக் கப்பல்களை மன ஓடையில் ஒவ்வொன்றாக செய்து மிதக்க விட்டுக் கொண்டிருந்தான்.

அவள் அருகில் இருக்கும்போது ஏற்படாத தைரியம் அவள் இல்லாதபோது வேகப்பட்டு எழுந்தது.

இந்த தடவை அவளைச் சந்திக்கிறபோது அவள் தொடர்புகளை நெருக்கமாக்கிக்கொண்டு...

அவளுடைய அழகிய உடம்பும், மருதாணி இட்ட விரல் நகங்களும், அள்ளி முடிந்த கேசக் குழலில் சிகப்பு ரிப்பனும், நாணப்பட்டு நிற்கும் முகமும்...

அவன் தன் அலுவலகத்தில் தன் வேலைகளை மறந்து உட்கார்ந்திருந்தான்.

மேஜை மேலிருந்த தபால்களில் பிரிக்கப்படாத தந்தியொன்று இருந்தது. எல்லாவற்றையும் விட்டு விட்டு அதை மட்டும் எடுத்துப் பிரித்தான். மேலும் மூன்று நாட்கள் விடுமுறைக்கான கிருஷ்ணகுமாரியின் தந்தி.

அவனுக்கு ஏமாற்றம்தான். அவளுடைய பிரசன்னத்திற்காக மேலும் மூன்று நாட்கள் காத்திருக்க வேண்டும்.

எழுந்து அவள் உட்கார்ந்து தன் அலுவலைப் பார்க்கும் அறைக்கு வந்தான். அவனுக்கு டெலிபோன் டைரக்டரி தேவைப்பட்டது.

அந்த அறையில் உள் அறையாக மற்றொரு அறை உண்டு. அதில் மேலும் மூன்றுபேர் அமர்ந்து பணிபுரிகிறார்

கள். வெளிப்புறமுள்ள நடுவாந்திரமான முன் அறைதான் அவளுடையது.

அவள் தன் தோற்றத்தைப் போலவே பணி புரியும் இடத்தையும் மிகத் துல்லியமாக வைத்திருந்தாள்.

கண்ணாடி அலமாரியில் கோப்புகள் ஏற்ற இறக்கமின்றி ஒழுங்காக அடுக்கி வைக்கப் பட்டிருந்தன. மேஜையோரத்தில் சிகப்புநிற பிளாஸ்டிக் கவர் போடப்பட்ட டெலிபோன் டைரக்டரி இருந்தது. அதிலிருந்து முக்கால் பகுதி வெளியே நீட்டிக் கொண்டிருந்தது......

டைரக்டரியுடன் மேஜைக்கு வந்தான். அதில் வெளியே நீட்டிக்கொண்டிருந்த சிகப்பு வர்ண காகிதத்தை வெளியே உருவினான்.

அதுவும் ஒரு தந்தி. மூன்று தினங்களுக்கு முன்பு கிருஷ்ணகுமாரிக்கு வந்திருக்க வேண்டும்...... தந்தி பிரித்திருந்தது.

அதில் அதை அவள் பெற்றுக்கொண்ட தேதி, நேரம் உட்பட கையெழுத்தும் இருந்தது.

ஒருவேளை அது அவள் அவசரமாக சென்னை புறப்படக் காரணமான செய்தியைத் தாங்கியிருக்குமோ!

அதைப் பிரித்துப் படித்தான்.

## 7

இத்தனை நாட்கள் அவள் இருந்ததைவிட அவள் இல்லாத அந்த மூன்று நாட்கள் அவன் மனதை அதிகம் பாதித்தது.

குட்மார்னிங் ஸார் என்று இனிய குரலுடன் அவள் தன் அறைக்குள் எப்பொழுது நுழையப் போகிறாள்?

இந்த மனம் ரொம்ப விசித்திரமானது.

அப்படியென்ன அவளுடன் மனமொன்றிப் பழகிவிட்டோம். அவளைப் பற்றி முழுவதுமாக ஒன்றும் தெரியாமல் மேலெழுந்த வாரியாகச் சில தகவல்களை மட்டும் தெரிந்து கொண்டு இனிய சுபாவத்தினாலும், அமைதியான பழக்கத்தினாலும் ஈர்க்கப்பட்டு......

மனத்தை இழந்த நிலையில்,

முதல் பார்வையில் உண்டாகும் காதலைப் பற்றி அவன் அதிகம் படித்திருக்கிறான். அனுபவ ரீதியில் அவனிடத்தில் அதற்கு விளக்கம் கூற ஒன்றுமில்லை.

ஆனால்

இப்பொழுதோ

தானே தனக்கோர் உதாரணமாக இருப்பது போலொரு பிரமை.

கூடவே வெளியே கூறமுடியாதபடி ஒரு குழப்பமும் புதிதாகத் தளிர்விட்டுக் கொண்டிருந்தது.

ஃ ஃ ஃ

சரியாக நான்காம் நாள் காலையில் வழக்கம் போல அவன் அலுவலகத்திற்குள் நுழைந்தபோது கிருஷ்ண குமாரியை எதிர்பார்த்துக் கொண்டேதான் நுழைந்தான்.

ஆனால்

அவள் அறை வெறுமை[illegible] இருந்தது.

அவள் வரவில்லை.

இனி வரவே மாட்டாளோ!

அவன் மனம் கனத்துப் போன மாதிரி இருந்தது.

மேஜை மேலிருந்த அன்றைய தபால்களை வேகமாக ஆராய்ந்தான். விடுப்பை நீட்டிப்பதற்கான வேண்டுகோள் ஏதும் வந்திருக்கிறதா எனப் பார்த்தான்,

அப்படியேதும் இல்லை.

நேரில் வந்து சொல்லிக் கொள்ளலாம் என்றிருக்கிறாளா? அவசர தகவல் ஏதும் இல்லாததால் அவள் நேரிலே கூட வரலாம்.

அன்று பூராவும் அவள் வரவில்லை.

அவனுடைய எல்லா உற்சாகத்தையும் அவள் எடுத்துக் கொண்ட மாதிரி இருந்தது அவனுக்கு.

மாலையில் அவன் உற்சாகமின்றி வீடு திரும்பிக் கொண்டிருந்தபோது சரஸ்வதிபுரம் இரண்டாவது குறுக்குத் தெருவின் திருப்பத்தில்...

கிருஷ்ணகுமாரி...

அவன் காரை நிறுத்தினான்.

அவளைப் பார்த்து அவன் புன்னகை செய்தான்.

"சென்னையிலிருந்து எப்போ வந்தே?"

"நேற்று"

"நேற்று?"

"நான் உன்னை இன்று அலுவலகத்தில் எதிர்பார்த்தேன் -அதென்ன கையில்?"

அவள் கையில் உள்ள மருந்து சீசாவைப் பார்த்துவிட்டுக் கேட்டான்.

"டாக்டரிடம் போய் மருந்து வாங்கி வருகிறேன்."

"யாருக்கு உடம்பு?"

யாருக்கு உடம்பு...அவள் ஒரு கணம் தடுமாறிப் போய்ப் பிறகு பதில் சொன்னாள். "எனக்குத்தான்."

"என்ன உடம்பு?"

என்னமோ.. அவள் தொடர்ந்து பொய்க் கூற முடியாமல் தவித்து பிறகு எப்படியோ சமாளித்தாள். "தொடர்ந்து அடுத்தடுத்து பயணம் செய்ததில் லேசான உடல்நலக் குறைவு. அதோடு எனக்குப் பஸ் பயணமே ஒத்துக் கொள்வதில்லை. சென்னையிலிருந்து பெங்களூர் வரையில் பஸ்ஸில் வந்து அங்கிருந்து இங்கே வந்ததில்!..."

தொடர்ந்து இரண்டு மூன்று பொய்களை வெற்றிகரமாகச் சொல்லிவிட்ட நிம்மதி.

"உன்னுடன் நான் நிறையப் பேச வேண்டும். நாளைக்கு உன்னை கன் ஹவுஸ் அருகில் எதிர்பார்ப்பேன். மஹாராஜா அரண்மனையில் உட்கார்ந்து பேசுவோம்."

அவள் ஏதோ கூற வந்தாள். அதை அவன் கவனிக்கவில்லை. சிரித்துக்கொண்டே போய்விட்டான்.

ஃ ஃ ஃ

மஹாராஜா அரண்மனைக்கு எதிரே உள்ள சிமெண்ட் மேடையொன்றில் அவர்கள் அதிக நெருக்கமில்லாமல் போதிய இடைவெளிவிட்டு உட்கார்ந்திருந்தனர்.

அவன் அவளிடம் தன் மனதைத் திறந்து காட்டிவிட்டான். உள்ளத்தில் இத்தனை நாட்கள் அந்தஸ்த்துக்கும் ஆசைக்கும் நடுவே நடந்த போராட்டத்திற்கோர் முற்றுப் புள்ளி வைக்க எண்ணியவன் போல பேசினான்.

என்றாலும் 1429/400951/3

அந்த இடைவெளியை அவன் நெருக்கமாக்கிக் கொள்ளவில்லை.

தான் எல்லா நேரத்திலும் கண்ணியமானவன் என்பதைக் காட்டிக் கொள்ள விரும்பியவன் போலக் காணப்பட்டான்.

அவள் அவனுடைய உள்ளத்து ஆசைகளைக் கேட்டாளே அன்றி பதிலேதும் கூறவில்லை. எனினும் அவள் கண்கள் எப்பொழுதும் கலங்கியே இருந்தது.

இந்த ஒரு வாரத்தில் அவளிடத்தில் ஏராளமான மாறுதல் இருப்பதாக அவன் நினைத்தான்.

ஒருவார காலமாக நான் உன்னை எதிர்பார்த்ததுபோல் என்றுமே எதிர்பார்த்ததேயில்லை என்றான்.

அவள் மௌனமாகவே இருப்பதைப் பார்த்துவிட்டு அவன் கலவரமடைந்தான்.

"ஏன் உன் மனதில் என்ன தயக்கம்? நான் பெரிய பணக்காரன் என்று பயப்படுகிறாயா? அல்லது இது வெறும் ஏமாற்று வார்த்தையாக இருக்குமென்று நினைக்கிறாயா? உன்னைப் போன்ற ஒரு பெண் எனக்கு மனைவியாக வந்தால் என் வருங்கால வாழ்க்கை மிகுந்த உற்சாகமாக இருக்கும். எனக்கு நல்ல பெண் மனைவியாக வரவேண்டுமென்று எதிர் பார்த்தேனே தவிர அவள் என்னைப்போல பணக்காரியாக இருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கவில்லை."

அவன் பேசிக் கொண்டேயிருந்தான், அவன் பேச்சில் ரொம்பவும் நற்செயலாக அவனுடைய அண்ணனின் விவாக செய்தி இடம்பெற்றபோது, ஒரு வாரம் முன்பு ஒரு நாள் மாலை அவன் அவசரம் அவசரமாக வீடு போனது பற்றியும், "நிறைய செய்திகள் இருக்கு. பிறகு சொல்லுகிறேன்" என்று கூறிவிட்டுப் போனதையும் நினைவுபடுத்தி பேசினான்.

அவன் சகோதரனுடைய இயல்பான குணம் பற்றிய ஒளிவுமறைவின்றி பேசினான். அண்ணனுடைய ஆயிரத் தோரு இரவுகள் விவகாரங்களை சுவராஸ்யமாகக் கூறிவிட்டு அப்படியெல்லாம் தான் இருக்க விரும்பவில்லை, இருக்க மாட்டேன் என்றும் கூறிவிட்டு வாழ்க்கையில் ஒருத்தியை மனப்பூர்வமாக நேசிக்க வேண்டும். அவளையே அடைய வேண்டும். அவளுடன் நிறைவான வாழ்க்கை வாழவேண்டும்.

என்று அவன் கூறியபோது இத்தனை நேரம் கூடுகட்டிக் கொண்டு கண்களின் கடையோரம் நின்ற கண்ணீர் இரண்டு கண்கள் வழியே வழியத் தொடங்கிவிட்டது.

''நாம் கிளம்பலாமா?'' என்று அவள் கேட்டாள்.

''என் கேள்விக்குப் பதிலே கூறவில்லையே.''

''உங்கள் கேள்வியே என்னவென்று தெரியவில்லையே.''

''நான் உன்னை......''

''இதற்கு நான் இப்பொழுது பதில் கூறும் நிலைமையில் இல்லை.''

''அப்படியென்றால்!''

என் வாழ்க்கையில் ஏராளமானச் சிக்கல்கள் இருக்கின்றன. நான் ஒரு மாயவலையில் சிக்கிக் கொண்டிருக்கிறேன். அதிலிருந்து அவ்வளவு சுலபமாக வெளியே வர முடியுமென்ற நம்பிக்கையும் எனக்கு இல்லை.''

''இல்லை.. என்னைப் பிடிக்கவில்லை என்பதைச் சுற்றி வளைத்துச் சொல்ல வருகிறாய்.''

''சத்தியமாக அப்படிப்பட்ட எண்ணத்துடன் நான் பேசவில்லை. அவிழ்க்க முடியாத சிக்கல்கள் என்மேல் கவிந்திருக்கிறது. அவைகளைத் தவிர்த்துக்கொண்டு வெளியே வர முடியுமென்ற நம்பிக்கையோ, தைரியமோ எனக்கு இல்லை'' —என்றவள் எதிரே தெரியும் சாமுண்டி மலையை நிமிர்ந்து பார்த்தாள். அவளுடைய கண்களிலிருந்து மேலும் புதிய கண்ணீர் ஊற்று அதன் மேல் ஓடிக்கொண்டேயிருந்தது.

அமர்ந்திருந்த சிமெண்ட் மேடையை விட்டு எழுந்தாள்.

அவள் நின்று கொண்டிருந்த சிமெண்ட் நடைபாதையோரமாக உள்ள செடிகளில் ஏராளமான மலர்கள் மலர்ந்தும், நேற்று பூத்த மலர்கள் வாடி கீழே உதிர்ந்துமிருந்தன.

"ஒரு மலர் ஒரு முறைதான் மலரும்" என்றவள், "உங்கள் அன்புக்கு நன்றி" என்றாள்—அவள் புறப்பட்டாள்.

"கிருஷ்ணகுமாரி இனி நீ வேலைக்கு வரமாட்டாயா."

"வருவேன், நிச்சயம் வருவேன். எனக்கு வேலை ரொம்ப அவசியம். அதில்லை என்றால் என்னால் வாழவே முடியாது. உண்மையைச் சொல்லப் போனால் நான் பிறக்கும்போதும் ஏழை, வளரும் போதும் ஏழை, இப்பொழுதும் அதேதான்... என் நிலை... என்நிலை."

இல்லை கிருஷ்ணா, உனக்குள் நீ ஏதோ ஒரு மறை பொருளை வைத்துக்கொண்டு தடுமாறுகிறாய் உன் ஆசைக்கும் உணர்ச்சிக்கும் நடுவே ஒரு சுவரை எழுப்பிக் கொண்டு தடுமாறுகிறாய். கற்சுவர் என்று நினைத்து உனக்குள் நிர்மாணித்துக் கொண்டிருக்கும் அதை சாகிதச் சுவராக மாற்றலாம். மாற்ற முடியுமென்று நான் நினைக்கிறேன்...

அது உங்களாலும் முடியாது. என்னாலும் முடியாது. அப்படி அதை அழித்துவிட்டு வேறு முயற்சிகளில் நாம் ஈடு படும்போது ஸ்தூலம் அழிந்து போனாலும் போய்விடும்.

கிருஷ்ணகுமாரி போய் விட்டாள். அவள் விதைத்து விட்டுப் போன புதிர் விதைகள் அரை நொடியில் அவனைச் சுற்றி வனமாக வளர்ந்து விட்டது,

# 8

இவளைப் புரிந்து கொள்ளவே முடியவில்லையே!

ஒரு சமயம் ப்ரியம் குடிகொண்ட காதல் மடந்தையாகத் தெரிகிறவள், மற்றொரு சமயம் தாய்மையுடன் கூடிய நிதானமாக எதுவுமே தனக்கு வேண்டாம் என்பது போல விரக்தியுடன் காணப்படுகிறாளே.

ஒரு சமயம் பிரகாசமாக சிரிக்கிறாள். மற்றொரு சமயம் தலையைக் கவிழ்த்துக்கொண்டு எவ்வித எதிர் உணர்வுகளும் இல்லாதவளாக மாறி விடுகிறாள்.

ஒரு சமயம் மலர்களை வாரிக்கொட்டிக் கொண்டு நிற்கும் ரோஜாச் செடி போலத் தெரிகிறவள், மற்றொரு சமயம் அந்த ரோஜாக்கள் உதிர்ந்து கிளைகளில் உள்ள முட்கள் மட்டுமே தெரிவது போல இருக்கிறாள். ராஜசேகர் அவள் நினைவாக இரண்டுவித சிந்தனையோட்டங்களை தன் மனதில் நிறுத்தி வித்தியாசம் பார்த்து அலுத்துப்போன நிலையில்,

அன்று அவள் அந்த காமாட்சிபுரம் நர்சிங் ஹோமுக்குள் நுழைவதைப் பார்த்துவிட்டு மேலும் குழம்பினான்.

தன் காரை சற்று தூரமாக நிறுத்தினான்,

அவள் வேகமாக அந்த நர்சிங்ஹோமுக்குள் நுழைந்து விட்டதைப் பார்த்துவிட்டு காரை விட்டுக் கீழே இறங்கினான்,

அவளை முன்னே போகவிட்டு அவன் நிதானமாக சாலையில் கடந்து அந்த நர்சிங் ஹோமுக்குள் நுழைந்தான்.

நர்சிங் ஹோமின் நீண்ட நடைபாதை வராந்தாவில் நடந்தான், ஒவ்வொரு வார்டாகப் பார்த்தான். சாத்தப் பட்டிருந்த கண்ணாடிக் கதவு வழியே நின்று உள்ளே பார்த்துவிட்டு அடுத்த வார்டுக்குச் சென்றான்.

இரண்டாவது தளத்தில் நான்காவது வார்டில்.

அவன் கண்ணாடிக் கதவுக்கு வெளியே நின்றுவிட்டான்.

இரண்டு வயது மதிக்கத் தக்க குழந்தையொன்று படுக்கையில் இருக்க அதை டாக்டர் பரிசோதனை செய்து கொண்டிருந்தார். நர்ஸ், டாக்டர் அருகில் நின்று உதவ கிருஷ்ணகுமாரி கவலையுடன் அங்கே நின்று கொண்டிருந்தாள்.

படுக்கையின் அருகில் உள்ள வெள்ளைநிற ஸ்டீல் அலமாரியில் மருந்து பாட்டில்களும், பிளாஸ்டிக் மற்றும் டைம்பீஸ் எல்லாம் இருந்தன.

அவன் எடுத்த எடுப்பில் உள்ளே போகவில்லை. வெளியே நின்றுவிட்டான்,

அக்குழந்தையைக் கவனிக்கும் டாக்டரைப் பார்த்தான், அவர் அவனுக்கு தெரிந்தவர்தான், அவனுடைய குடும்ப டாக்டரும் அவர்தான்.

குழந்தையைப் பரிசோதனை செய்துவிட்டு டாக்டர் நர்சிடம் சில குறிப்புகளைக் கூறிவிட்டு கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தபோது, அங்கே ராஜசேகர் நிற்பதைப் பார்த்துவிட்டு குட்மார்னிங் ராஜசேகர் என்றார்.

டாக்டருக்குப் பின்னால் கிருஷ்ணகுமாரி வந்து நின்றாள்,

"அந்தக் குழந்தைக்கு என்ன டாக்டர்?"—ராஜசேகர் கேட்டான்.

பயப்படும் படியா ஒன்றுமில்லை. காமாலையை ஆரம் பத்தில் கவனிக்காமல் விட்டு விட்டார்கள், அது கொஞ்சம் அதிகமாயிருக்கிறது. நான்கைந்துநாள் கவனிப்பில் இப்ப கொஞ்சம் பரவாயில்லை,

"கிருஷ்ணகுமாரியைத் தெரியுமா டாக்டர்"

"பர்சனலா தெரியாது. இந்தக் குழந்தையுடன் வந்தப்ப அறிமுகமானதுதான்,"

"நம்ப தொழிற்சாலையில் வேலை செய்யறாங்க."

"அப்படியா இவங்க சொல்லவேயில்லையே"

"குழந்தைக்கு தேவையான ட்ரீட்மெண்டை நல்ல முறையில் செய்யுங்கள் என்ன செலவானாலும் பரவா யில்லை."

ராஜசேகர் கையைப் பிடித்து டாக்டர் குலுக்கினார்.

"உங்களுக்கு வேண்டியவங்க என்பதை ஆரம்பத்திலேயே சொல்லியிருந்தால் தனி வார்டே ஏற்பாடு செய்திருக்கலாம். இது உங்க நர்சிங் ஹோம். கவலைப்படாதீர்கள். இனி இவங்க குழந்தையை என்னுடைய தனி கவனிப்பில் பார்த்துக் கொள்கிறேன்."

டாக்டர் ராஜ்சேகரிடம் வினயத்துடன் விடைபெற்றுப் போய்விட்டார்.

படுக்கையில் சிறுவன் கண்ணயர்ந்து படுத்திருந்தான் அவன் அருகில் கிருஷ்ணகுமாரி கண்கலங்க நின்றுகொண் டிருந்தாள். கலைந்து முன் நெற்றியில் விழுந்துகிடந்த குழந்தையின் தலைக் கே ந ஒதுக்கிவிட்டு விட்டு முதுகுப் புறம் பின்னிக்கிடந்த கையை நேராக எடுத்துவிட்டான்.

ரவி, ரொம்ப நல்ல பெயர் என்று அவனாகச் சொன்ன போது அவள் அவனை வியப்புடன் பார்த்தாள். இவருக்கு இவன் பெயர் எப்படித் தெரியும்?

அவன் அவளை புன்னகையுடன் பார்த்தான்.

அவள் பேசாமல் சொல்லாமல் தன் அறையை ஒழுங்கு படுத்துவதில் முனைந்தாள்.

"அதிக கவனம் எடுத்து இவனைப் பார்த்துக் கொள் டாக்டரிடம் நான் சொல்லிவிட்டுப் போகிறேன். அவர் எங்க ளுடைய குடும்ப டாக்டர். இவனுடைய உடம்பு முற்றிலும் குணமான பின்பு நீ வந்தால் போதும்."

அவன் அவளை பொருள் பொதிந்த பார்வையொன்று பார்த்துவிட்டு வெளியேறி விட்டான்,

அவன் வெளியேறிய சிறிது நேரத்திற்கெல்லாம் நர்ஸ் பின் தொடர டாக்டர் உள்ளே நுழைந்தார்.

"உங்களிடம் எழுதிக் கொடுத்த 'பிரிஸ்கிரிப்ஷன்' களை இப்படிக் கொடுங்கள்."

"ஏன் டாக்டர்?"

"அவைகளை நாங்களே வாங்கிக் கொள்கிறோம். இந்த நர்ஸிங்ஹோமின் முக்கிய ஸ்தாபகரே அவர்தான். அவருக்கு வேண்டியவர் என்பதையோ, அவர் தொழிற்சாலையில் வேலை செய்வதையோ முன்பே கூறியிருந்தால் இன்று அவர் எங்களுக்குச் சொல்லும்படியாக நேர்ந்திருக்காது."

"மருந்துக்காக அவர் எழுதிக் கொடுத்த சீட்டுகளை யெல்லாம் அவரே வாங்கிக் கொண்டார்,"

"நர்ஸ், இவர்களைக் கீழே உள்ள பிரத்தியேக வார்டுக்கு அழைத்துக் கொண்டுபோய் தேவையான சௌகரியங்களைச் செய்."

மேல் தளத்தில் இருந்த அறையைவிட இப்போது கொடுக்கப்பட்டிருந்த அறை அதை விட பெரியதாக இருந்தது. இரண்டு ஸ்கிரீன்கள் இருந்தன. நைலான் பட்டையுடன் கூடிய அலுமினிய நாற்காலி இருந்தது. அகல மான மெத்தை இருந்தது.

"இவ்வளவு பெரிய அறை எதற்கு?" என்று அவள் நர்ஸிடம்—கேட்டாள்.

"இது ராஜசேகரின் வேண்டுகோள். அவருடைய முன்னோர்களும், இன்று இவரும், இவருடைய பெற்றோரும் தான் இதன் போஷகர்கள். அவருடைய தொழிற்சாலை ஊழியர்களுக்கும் மருத்துவ ஆலோசர்கள் இங்குள்ள டாக்டர்கள்தான்" என்றவள், "இவர்களைப் பற்றி உங் களுக்கு ஒன்றுமே தெரியாதா?" என்று கேட்டாள். மெத்தை மீதிருந்த வெள்ளைத் துணியைத் தட்டிப் போட்டுக் கொண்டே அவரது குடும்பம் இந்தப் பகுதியில் மிகவும் பிரபலமானது. ராஜசேகர் ரொம்ப தன்மையான வாலிபர். இயற்கையிலேயே இரக்க சுபாவம் கொண்டவர். இவர்கள் குடும்பத்திலேயே இவரை

எல்லோருக்கும் பிடிக்கும். நியாயத்திற்காக முன் நிற்பார். பொது வாழ்க்கையில் நியாய அநியாயங்களை சீர்தூக்கிப் பார்த்து செயல்படுவார்.

கிருஷ்ணகுமாரி மௌனமாகி விட்டாள். அவள் கேட்காமலேயே ராஜசேகர் பற்றியும் பண்புகள் பற்றியும் ஒரு சாதாரண நர்ஸின் வாயிலாக அவர் வெளியாகும் அபிப்ராயங்களைக் கேட்கும்போது அவர்களுக்குப் பெருமை மயாக இருந்தது.

# 9

"யார் அந்த பெண்? அவளுக்கு ஒரு குழந்தை வேறு இருக்கிறதாமே?"

ராஜசேகரின் தந்தை சுதர்ஸன் இப்படி கேட்டுக் கொண்டு முன்னே வந்து நின்ற போது அவன் கண்ணாடி முன் நின்று டை கட்டிக் கொண்டிருந்தான்.

"நம் தொழிற்சாலையில் வேலை செய்கிறாளாமே! டாக்டர் சொன்னார்."

"ஆமாம்."

"அவள் மேலும், அவள் குழந்தை மேலும் நீ காட்டிய அக்கறை மிகவும் ஆதீதமாகப்படுகிறது. அவர்களை விட்டு நீ பிரியவே இல்லையாமே. எப்பொழுதும் நர்ஸிங் ஹோமிலேயே இருந்திருக்கிறாய். காலையில் போவதும், மாலையில் போவதும்...பொதுவாக வசதிக் குறைவானவர்களின் நீ எடுத்துக் கொள்கிற தனி அக்கறை பற்றி நான் ஏதும் குறை கூறவில்லை. அது தவறென்றும் கூறவில்லை. ஆனால் எல்லாவிதமான நட்புக்கும் ஒரு எல்லையுண்டு."

"அப்பா."

அவன் பேச வேண்டாம் என்பது போல கையமர்த்தி விட்டு,

''நேற்று மாலை உன்னை அந்தப் பெண்ணுடன் சரஸ்வதிபுரம் பார்க்கில் பார்த்தேன்.''

''நர்ஸிங் ஹோமிலிருந்து அவள் வீட்டிற்குப் போக உதவினேன்.''

''உதவி செய், எந்தவித உதவி வேண்டுமானாலும் செய். அப்படி நீ செய்கிற உதவிக்கு வேறு எந்தவிதமான அடிப்படை எதிர்பார்ப்புகளும் இருக்கக்கூடாது.

பொது வாழ்க்கையில் அப்படிப்பட்ட காரியங்களை நமக்குள்ள கடமைகளுடன் செய்வதில் தவறில்லை. ஆனால் சொற்ப வாழ்க்கையில் நாம் எவ்வித சரிவுகளையும், உண்டாக்கிக் கொண்டு விடக்கூடாது...''

அவன் ஏதோ இடைமறித்துப் பேச முற்பட்டான்.

''உன் அண்ணனைப் பற்றி ஏதோ சொல்ல வருகிறாய் என்று நினைக்கிறேன். அவன் செய்வது, செய்து கொண் டிருப்பது எல்லாம் நியாயமானது என்று நான் கூறவில்லை. என்றாலும் ஒரு விஷயத்தில் அவன் மிக திடமானவன். தன் அந்தஸ்துக்குக் கீழே எந்த பெண்ணையும் அவன் மனைவி யாக ஏற்க விரும்பவேயில்லை. அவனாக காதலித்த அல்லது அவனைக் காதலித்த எந்த ஏழைப் பெண்ணையும் அவன் ஓர் அளவுக்கு மேல் சொந்த வாழ்க்கையில் குறுக்கிடும்படி வைத்துக் கொண்டதேயில்லை.''

''ஏமாற்றி இருக்கிறான் என்று சொல்லுங்கள்'' என்றான் சற்று சினத்துடன்.

''இருக்கட்டுமே! உலகத்தில் யார்தான் யாரை ஏமாற்ற வில்லை. சில அவசியங்கள் வரும்போது ஏமாற்றுவது அதர்மமில்லை. நாம் எல்லா நேரங்களிலும் தர்மவான் களாக இருக்கமுடியாது. வாழ்க்கை, வியாபாரம் இவை இரண்டிற்கும் இது பொருந்தும்.''

"ஏமாற்றுவதற்கு நீங்கள் கூறும் தத்துவத்தை என்னால் ஏற்க முடியாது. ஒருவரைக் கஷ்டப்படுத்தி நாம் லாபம் பெறுவது வியாபாரம், இதில் பின்பு சரி செய்து கொண்டு விடக் கூடிய வாய்ப்பு இருக்கிறது. ஆனால் ஒருவருடைய வாழ்வைச் சிதைத்து நாம் பெறும் லாபம் அப்பட்டமான துரோகம்."

வழக்கம்போல் மகனின் தோள் மேல் கையைப்போட்டு அவனை சாந்தப்படுத்தினார்.

"இதன் பேரில் அதிகமாக விவாதிக்க இப்பொழுது என்ன நேர்ந்து விட்டது? உன்மேல் எனக்கு அதிக நம்பிக்கையுண்டு. எதையுமே ஒரு தர்மத்தின் கோட்டில் நின்று சிந்திப்பவன் நீ. வாழ்க்கை, வியாபாரம் இரண்டிலுமே உன் அணுகுமுறை யாரையும் பாதிக்காது. யாரையும் சேதப்படுத்தாது என்பதும் எனக்குத் தெரியும். ஏதோ நடந்து விட்டது போல தர்க்கத்தை நாம் ஏன் இப்பொழுது தொடங்கினோம்.

டாக்டர் கூட உன் பேரில் குற்றம் சாட்டுவதுபோல ஒன்றும் கூறவில்லை. உன்னுடைய தாராள மனப்பான்மையைப் பாராட்டி கூறும்போது அந்தப் பெண்ணைப்பற்றியும், அந்தப் பெண்ணின் குழந்தையைப் பற்றியும். அவர்கள் மேல் நீ காட்டிய அளவற்ற பரிவையும் கூறினார். அப்படி அவர் கூறியபோது அதில் இம்மாதிரி உள்ளர்த்தம் ஏதும் இருந்துவிடக் கூடாதே என்கிற பயத்தில் முன் எச்சரிக்கையுடன் ஒரு அணைபோட எண்ணினேன் அவ்வளவுதான்..."



டாக்டரின் தீவிரமான கவனிப்பிற்குப்பின் ரவியின் உடம்பு பூரணமாகத் தேறிவிட்டது. அவள் அவனை எடுத்துத் தோளில் சாய்த்துக் கொண்டு மருத்துவமனையை விட்டு வெளியே வந்தபோது மருத்துவமனை வாசலில் ராஜசேகர் தன் காருடன் நின்றான்.

"ஏறிக்கொள்."

"பரவாயில்லை. நான் நடந்தே போகிறேன்."

"உன் வீட்டிற்குத்தான் கார் போகும். வேறெங்கும் போய் விடாது."

அவள் தோளில் சுமந்து கொண்டு நிற்கும் ரவியை அவனே பலவந்தமாக வாங்கி பின் சீட்டில் உட்கார வைத்துவிட்டு அவள் ஏறுவதற்காக காரின் பின் பக்க கதவைத் திறந்து கொண்டு நின்றான்.

அவள் ஏறிக்கொண்டாள்.

ஓர் ஐந்து, பத்துநிமிட ஓட்டத்துடன் இந்தப் பயணத்தை முடித்துக் கொள்ள அவன் விரும்பவில்லை.

காரை நகர்பக்கம் திருப்பினான்,

"காரை அப்படியே சாமுண்டி மலைப்பக்கம் திருப்புங்களேன். உங்களுக்கு ஆட்சேபணையில்லையென்றால் குழந்தையின் உடல்தேற சாமுண்டீஸ்வரியைக் வேண்டிக் கொண்டேன்" என்றாள்.

அவன் ஒன்றும் பேசாமல் சிரித்தான். காரை சரஸ்வதி புரம் முதல் பிரதான சாலையில் திருப்பினான். ஐந்து நிமிட ஓட்டத்தில் பரபரப்பு மிகுந்த அரண்மனையை ஒட்டிய சாலையான மீர்சாரோடும் நியூ சாயாஜிராவ் சாலையும் பின்பு கன் ஹவுஸ் ரோடும் பின்னோக்கிப் போய்விட்டன.

கார் இப்பொழுது சாமுண்டிமலை செல்லும் மலைப் பாதையில் போய்க் கொண்டிருந்தது.

நெற்றிக்கு நேராக உள்ள கண்ணாடி வழியே குமாரியைப் பார்த்தான். அவள் கண்கள் கலங்கி முகம் சோர்ந்து போய் காணப்பட்டாள்.

"உங்கள் மனம் சலனப்படும் வகையில் நான் நடந்து கொண்டிருந்தால் என்னை மன்னித்து விடுங்கள்."—

எடுத்த எடுப்பில் அவள் இப்படிப் பேசியபோது அவன் பதில் ஒன்றும் கூறாமல் சாலையில் கவனமாக இருந்தான்.

"ரவி யார் தெரியுமா?"

"தெரியாது. நீ சொன்னால் தெரிந்து கொள்வேன்."

"உண்மையிலேயே தெரியாதா அல்லது தெரியாதவர் போல நடிக்கிறீர்களா?"

"ஒருவரைப் பற்றி மற்றவர் என்னவேண்டுமானாலும் ஊகிக்கலாம். ஆனால் உண்மை என்ன என்பதை சம்பந்தப் பட்டவர்கள்தான் சொல்ல வேண்டும்."

"இவன் பேரில் இவ்வளவு அக்கறை எடுத்துக் கொண்டு இரவு பகலாக கண்விழித்து பார்த்துக் கொண்டதைப் பார்த்த பின்பு கூடவா உங்களுக்குப் புரியவில்லை."

அவன் பதில் ஒன்றும் கூறாமல் தன் பையில் வைத்திருந்த அந்த சிகப்புநிற தந்திக் காகிதத்தைத் தோளுக்கு மேல் உயர்த்திப் பிடித்தான்.

"என்ன இது?"

"நீ சென்னை போகுமுன் உனக்கு வந்த தந்தி. டெலிபோன் புத்தகத்தில் இருந்தது, அதில் உள்ள வாசகம் என்ன தெரியுமா? மகன் ரவிக்கு உடம்பு சரியில்லை. உடனே புறப்பட்டு வரவும்..."

அதை அவள் அவனிடமிருந்து வாங்கிக் கொண்டாள்,

"இதைப் பார்த்து விட்டுத்தானே நீ அவசரம் அவசரமாக சென்னை போனாய்?"

"ஆமாம்."

"மகன் ரவி என்றால் யாருக்கு என்ன புரியும்? யார் மகன் ரவி? தந்தி கொடுத்த தயா என்கிற பெண்ணுக்குக் கூட இவன் மகனாக இருக்கலாம் இல்லையா?"

அவள் தலையை குனிந்து கொண்டு அழுதாள்.

"இல்லை. ரவி என் மகன்தான்."

"உன் மகனா...உன் மகனா..."

அவன் உடம்பு ஒருமுறை வியர்த்து அடங்கியது.

ரவி அவள் மகனாக இருப்பானோ என்று அவன் ஊகித்ததுண்டு. அப்படி நினைக்கும்போதெல்லாம் கூடவே ஓர் சமாதானமும் வந்து விடும்.

ரவி இவளுடைய மகனாக இல்லாமல் இருக்கக் கூடாதா...

டாக்டர் சொன்னார். அதைக் கேட்டுக் கொண்டு தந்தை கோபித்துக் கொண்டார் என்பதெல்லாம் ஒரு ஊகத்தின் அடிப்படையில் அடிபட்டுப் போய்விடக் கூடாதா என்று அவன் மனம் ஏங்கிய நிமிஷங்களும் உண்டு!

ஆனால்...

அந்த ஏக்கங்கள் பொய்த்து விட்டன.

இப்படிப்பட்டதோர் அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்ள வேண்டிய நேரம் வந்தாலும் வரும் என்பதை மனம் ஏற்கனவே எதிர் பார்த்துக் கொண்டிருந்ததால் இப்பொழுது அந்த உண்மையான அதிர்ச்சிக்கு மனத்தின் அங்கீகாரம் கிடைத்து விட்டது.

ரவி கிருஷ்ண்குமாரியின் மகன்.

"இதை மறைக்க வேண்டுமென்று நான் எப்பொழுதுமே நினைக்கவில்லை' எனினும் இதை அவ்வளவு சந்தோஷமாக எல்லாரிடமும் கூறக் கூடிய அளவுக்கு நான் இல்லை. நேர்மையாகப் பெற்றுக் கொண்ட பிள்ளையாக இருந்தால் பெருமையாகக் கூறிக் கொள்ளலாம்" என்றவள் தொடர்ந்தாள் :

“நேர்மையோ நேர்மையற்றதோ இவன் என் மகன். இனி இவன் தான் என் வாழ்க்கை. இவனுக்காக வேனும் நான் வாழ்ந்தாக வேண்டும். சம்பாதிக்க வேண்டும் எவ்வித களங்கமும் உண்டாகாமல் நான் பார்த்துக் கொள்ள வேண்டும்.”

“நேர்மையற்று என்றால் என்ன அர்த்தம்?”

அவன் மலைப்பாதையின் வளைவில் காரை கவனமாகத் திருப்பிக்கொண்டே கேட்டான்.

“ஒருவரை நம்பி மோசம் போய்விட்டேன். அழகாக இருந்தால் மட்டும் போதாது. அதை பாதுகாத்துக் கொள்ளும் மனோ தைரியமும் வேண்டும்.”

“என்ன சொன்னீர்கள்... மனோ தைரியமா! அது நிறையவே இருக்கிறது. ஆனால் இயல்பான மனிதாபிமானம்தான் இப்பொழுது தடையாகக் குறுக்கிடுகிறது” கார் சாமுண்டி மலையை அடைந்து விட்டது.

ஆலயத்திற்குச் சென்று திரும்பிய பின் இருவரும் வெளியே உள்ள மலைச் சரிவில் உட்கார்ந்து வெகு நேரம் வரை பேசினர்.

அவனுடன் மனம் விட்டும்பேச வேண்டும் என்பதற்காகவே இங்கே வந்ததாக அவள் கூறினாள். ஏதேனும் ஒரு வகையில் தன் செய்கைகள் தன் வெளி நடவடிக்கைகள் அவனை பேதலிக்க வைத்திருந்தால் அதற்காக மன்னிக்கும்படி கேட்டாள், அதற்கு அவன் அழுத்தமாக இருந்து விட்டது மன்னியில் அந்த வேண்டுகோளை அங்கீகரித்துக் கொண்டதாகவே காட்டிக் கொள்ளவில்லை.

“உன் எண்ணத்தை வெளிப்படுத்தி விட்டாய். என் மனதை நான் இந்த தனிமையில் சொல்லியே ஆக வேண்டும். என்மனதை நான் திறந்து காட்டவில்லை என்றால் என்னுடைய நல்ல சந்தர்ப்பத்தை நான் இழந்தவனாகி விடுவேன்.

உன்னை என்னால் இனி மறக்க முடியாது கிருஷ்ணா''

''ராஜசேகர்...'' அவள் மிகுந்த பதட்டத்துடன் அழைத்தாள்.

''உண்மைதான். நீ தனியான பெண் என்று இருந்த போது எனக்கேற்பட்ட பரிவை விட நீ மற்றொருவனால் ஏமாற்றப்பட்ட அப்பாவி என்கிறபோது உன் மேல் எனக்கு பரிவு அதிகமாகி, அதுவே இப்போது காதலாகவும் மாறி விட்டது.''

''ராஜசேகர் நான் ஒரு குழந்தைக்குத் தாய்...'' அவள் கத்தினாள்.

''எல்லா பெண்களும் ஒரு சமயத்தில் தாய்தான். அந்த உறவின் மாதுர்யம் அவர்களிடமிருந்து போய்விடாது.

பெற்றவளுக்கு மகள்,

உடன் பிறந்தோருக்குச் சகோதரி

நேசிப்பவனுக்கு காதலி

குழந்தையைப் பெற்றுக் கொள்ளும் போது தாய்,

இந்த உறவின் சங்கிலி தொடரில் என்ன பாவம் இருக்கிறது.''

''என் நிலை உங்களுடைய தத்துவங்களுக்கு அப்பாற்பட்டது.''

''தத்துவங்கள் என்பதே வாழ்க்கையை ஒட்டியதுதான். வாழ்க்கையிலிருந்து அதைப் பிரித்து விட்டால் அதற்குப் பெயர் தத்துவமில்லை. வெறும் சொல். அதே போலத்தான் மனித உறவுகளும். உறவுகளை வாழ்க்கையிலிருந்து பிரித்து விட்டால் அதன் பின் நடப்பவை எல்லாம் கூடு பாயும் அர்த்தமற்ற மிருக வாழ்க்கை. அர்த்தங்களைப் புரிந்து கொண்டு வாழ்வதே ஒரு தத்துவம் தான்.''

அவள் பிடியிலிருந்த ரவி ராஜசேகரிடம் தாவினான்.

அவன் குழந்தையைத் தன்னுடன் அணைத்துக் கொண்டு கொஞ்சினான்.

ரவி ராஜசேகரின் தலைகிராப்பைக் கலைத்தான். சட்டைப் பையில் உள்ள பேனாவையும், கழுத்துப்பட்டை யில் வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் வர்ண கர்சீப்பையும் உருவி எடுத்தான்.

"இந்த குழந்தையின் மேல் நீங்கள் காட்டிய பரிவுக்கு நான் நன்றி சொல்ல வேண்டும். உங்கள் அன்பு கட்டளையை மேற் கொண்ட டாக்டர்கள் இந்த ஏழைக் குழந்தைக்கு ராஜ வைத்தியம் செய்ததை நினைக்கும் போது உங்களு டைய நேயமான உள்ளத்தைக் கண்டு நான் பூரித்துப் போனேன்.

"என்னைப் பாராட்டும் அளவுக்கு அதில் ஒன்றும் இல்லை. நமது தொழிற்சாலையில் பணிபுரியும் எல்லா தொழிலாளர்களுக்கும் அந்த சலுகைகள் கிடைக்கின்றன. உன் குழந்தை விஷயத்தில் நான் கொஞ்சம் தனிப்பட்ட கவனம் செலுத்தினேன்.

அந்த மருத்துவ மனையை ஸ்தாபித்தது என்னுடைய தாத்தா. அவர் காலத்தில் அவர் சிறந்த ஒரு இருதய மருத் துவர். அவருடைய தம்பி அதாவது என் சிறிய பாட்ட னார் புகழ்பெற்ற நரம்பு வைத்தியர். அவர்கள் இதைச் சின்ன மருத்துவமனையாக ஆரம்பித்து வைத்துவிட்டுப் போனார்கள். அவர்களுக்குப் பின் எங்கள் தந்தை அதைக் கொஞ்சம் விரிவுபடுத்தினார். பிறகு நாங்கள் தலை யெடுத்து அதை நவீன மயமாக்கினோம். நாங்கள் யாரும் டாக்டர் படிப்பில் நாட்டம் கொள்ளாவிட்டாலும் நர்சிங் ஹோமைப் பெரிதாகக்கட்டி வெளி டாக்டர்களின் பொறுப் பில் விட்டுவிட்டோம். அவர்களுக்கு வேண்டிய ஸ்தாபனத் தேவைகளை நாங்கள் கவனித்துக் கொள்ளுகிறோம்.

இன்று அந்த நர்ஸிங்ஹோமில் முழுநேர டாக்டர்கள் இருவர் உண்டு. விசிட்டிங் டாக்டர்கள் எல்லாத் துறைக்கும் ஸ்பெஷலிஸ்டுகள் வருகிறார்கள் என்று சொன்னவன் புறப்பட ஆயத்தமானான்.

அவர்கள் சாமுண்டி மலையை விட்டுக் கீழே இறங்கிக் கொண்டிருந்தார்கள்.

# 10

தொடர்ந்து அவள் தொழிற்சாலைக்கு லீவு போட்டு விட்டு மறுபடியும் வேலைக்குப் போக வேண்டுமென்று வந்தபோது புதிய பிரச்சினையொன்று தோன்றியது.

ரவியை எங்கே யாரிடம் விட்டுவிட்டுப் போவது, உட னிருந்து கவனிக்க ஒருவர் இல்லாமல் அவனை தனியே விட முடியாதே. சென்னையில் தயா இருந்தாள். அவளுடைய தாயார் இருந்தார். தயாவின் சகோதரன் இருந்தான். ஒருவர் மாற்றி ஒருவர் இருப்பார்கள். முக வித்தியாசமின்றி அவன் எல்லாரிடமும் ஒட்டிக் கொள்வான்.

ஆனால் இங்கே!

அப்படி நெருக்கமாக இங்கே யாருடனும் அவள் பழக வில்லை. இதற்கொரு புதிய ஏற்பாட்டை செய்தால் தான் வேலைக்குப் போக முடியும்.

அவள் புதிய பிரச்சினையுடன் குழம்பிக் கொண்டிருந்த போது தான்—

"அக்கா"—வென்று அழைத்த வண்ணம் பதினேழு வயது மதிக்கத்தக்க அந்தச் சிறுமி உள்ளே நுழைந்தாள்.

"கிருஷ்ணகுமாரி அக்காங்கறது."

''நான்தான். நீ யார்?''

''என் பேர் சாந்தாமணி. சின்ன ஐயா உங்ககிட்டே அனுப்பினார்.''

''சின்ன ஐயாவா?''

''ஆமாம். ராஜசேகரு ஐயா, இதை உங்ககிட்டே கொடுக்கச் சொன்னார்'' என்று கூறிவிட்டு அந்தக் கடிதத்தை அவளிடம் கொடுத்தாள்.

''நான் உன்னிடம் அனுப்பியிருக்கும் சாந்தாமணி என்கிற இந்தப் பெண் ரொம்பவும் நாணயமானவள். நம்பிக்கைக்கு உரியவள். குழந்தை ரவியைப் பார்த்துக் கொள்ள உன் அனுமதியின்றியே இவளை நான் ஏற்பாடு செய்து விட்டேன். ரவியை இவளிடம் விட்டு விட்டு நீ நிம்மதியுடன் வேலைக்கு வரலாம்...''

அவள் அக்கடிதத்தைப் படிக்கும்போதே சாந்தாமணி வெளியே விளையாடிக் கொண்டிருக்கும் ரவியிடம் போய் நின்று விட்டாள். அவனை எடுத்துவைத்துக்கொண்டு விளையாட ஆரம்பித்து விட்டாள்.

''இவனுக்கு எப்பப்ப என்னன்ன குடுக்கணும் எதெது எங்கே இருக்குங்கறதையும் மட்டும் காட்டிட்டுப் போங்க. மத்ததை நான் பாத்துக்கறேன்'' என்றாள். பளிச்சென்று அவள் பேசியது எடுத்த எடுப்பில் அவள் மேல் ஒரு நம்பிக்கை உண்டாகும்படி இருந்தது.

''உனக்கு என்ன சம்பளம்தர வேண்டுமென்று நீ சொல்லவில்லையே.''

''அதெல்லாம் ஐயா தான் தருவாரு. இதையும் அவரே சொல்லிட்டாரு.''

அவளுக்கு எதுயெது தேவையோ அவைகளை குறிப் பறிந்து செய்தாள்.

ரவிக்கு இன்று லேசாக உடம்பு சுடுவது போலஇருந்தது. அப்படியே விட்டுவிட்டு வந்து விட்டேன் என்று அவள் பேச்சோடு பேச்சாக கூறுவாள். அவள் மாலையில் வீட்டிற்குப் போய் பார்க்கும் போது.

டாக்டர் வந்து ரவியைப் பார்த்துவிட்டு போனது, மருந்தை எழுதிக் கொடுத்து, சாந்தாமணி மருந்தை வாங்கிவைத்திருப்பது எல்லாம் தெரியும்.

ஒரு நாள் அவள் மாலை வீடு திருப்பும் போது அழகிய மூன்று சக்கர சைக்கிள் ஒன்றில் ரவியை உட்கார வைத்து சாந்தாமணி தள்ளிக் கொண்டிருந்தாள்.

"சைக்கிள் யாருடையது சாந்தாமணி? புதுசா இருக்கே."

"சின்ன ஐயாதான் வாங்கிக்கொடுத்தனுப்பினார்" என்று அவள் கூறியபோது ராஜசேகரின் ஒப்பற்ற அன்பு அவளை எல்லா நேரங்களிலும் உடம்பை சிலிர்க்க வைத்த வண்ணமிருந்தது,

முன்பு போல அவனுடைய பழக்கத்தில் ஒரு துள்ளல் இல்லை.

முன்பு போல எதையும் அதிகமாக வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. சற்று தூரமாக விலகி நின்று அவளுக்கு உதவினான்.

உங்களுடைய ப்ரியம் என்னை எப்பொழுதும் பனிப் போர்வையில் போர்த்திய மாதிரியே இருக்கிறது. உதவிகளைத் தடுத்தால் உங்கள் மனம் புண்படுமே என்று நான் எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்கிறேன் என்பாள்.

"நீ தடுத்தாலும் என் உதவிகள் நிற்காமல் தொடர்ந்து கொண்டேதானிருக்கும். பிரியம், பாசம் எல்லாம் ஒருபுறமிருக்கட்டும், இதில் எனக்கொரு கடமையும் இருக்கிறது.

ஒன்டிக்கப்பல் பகுதியில் பொட்டானிகல் கார்டன் எதிரே ஒரு தனி வீடு ஏற்பாடு செய்து விட்டேன். இந்த வீட்டில் நீ இருப்பது எனக்குப் பிடிக்கவில்லை. அடுத்த வாரம் ரவியுடன் நீ அங்கே குடி போகிறாய்.''

''ராஜசேகர்'' என்று மனம் பதற ஒருமுறை அழைத்தாள். அவள் உதடுகள் துடித்தன.

''இது ரொம்ப அதிகம், இம்மாதிரி உதவிகளையெல்லாம் நான் நிச்சயமாக ஏற்கமாட்டேன்,''

''பயப்படாதே. இதற்குமேல் நான் போய் விடமாட்டேன். உன் பயமும் எனக்குப் புரிகிறது. ஆனால் உன்னை இனி இப்படியொரு அனாதைபோலவாழவைக்க என்மனம் இடந்தராது. அந்த வீடுஎல்லா சௌகரியங்களும் கொண்டது. தனி வீடுதான். இரவில் ஒரு வாட்ச்மேனும் போட்டுவிட்டேன்.''

''வேண்டாம் ஸார்...எனக்காக நீங்கள் செய்கிற உதவிகளுக்கு உங்களுக்கு வீண்கெட்ட பெயர் வந்தாலும் வரும். நமக்குத் தெரியும். நாம் எவ்வளவு கண்ணியத்துடன், இடைவெளியுடன் வாழ்கிறோம் என்று. ஆனால் பார்க்கிறவர்கள் ஏதேனும் நினைத்துக் கொள்வார்கள். நீங்கள் ரவியின் உடம்பு தேறுவதற்காக எடுத்துக் கொண்ட தனி அக்கறையைப் பற்றி உங்கள் பெற்றோர் வேறு வித்தியாசமாகப் பேசியதைக் கூறினீர்கள். அதுவே எனக்கு எவ்வளவு சங்கடமாக இருந்தது தெரியுமா?''

அவன் சிரித்தான்.

''இப்பொழுதும்தான் பேசுகிறார்கள், நான் உன்மேல் காட்டுகிற அன்புக்கு ஆயிரம் அர்த்தங்களைக் கூறி அது அதர்மமானது என்கிறார்கள். முன்பு போல அவர்கள் என்னுடன் கலகலப்பாக, இப்பொழுதெல்லாம் பேசுவது கூட இல்லை.''

"இப்பொழுது நானும் அதையேத்தான் கேட்கிறேன். இந்த அன்பிற்கெல்லாம் என்ன அர்த்தம்?"

"அன்பு காட்டுவதற்கு ஏதேனும் அர்த்தம் வேண்டுமா? அப்படியானால் இந்த உலகத்தில் ஒவ்வொருவர்மேல் காட்டப்படும் அன்புக்கும், ஒவ்வொருபொருளின் மேல் காட்டப்படும் அன்புக்கும் ஏதேனும் அர்த்தமிருக்க வேண்டுமென்று எதிர் பார்க்கிறாயா?"

"அன்புக்குக் காரணம் தேவையில்லாமல் கூட இருக்கலாம். ஆனால் தாத்பரியம் இல்லாமல் இருக்க முடியாது"!

"என் அன்புக்கு அவை இரண்டுமே உண்டு. என் அன்புக்கு காரணம் உண்டு. தாத்பரியம் உண்டு. ஆழமுண்டு. கூடவே ஓர் அர்த்தமுமுண்டு."

கிருஷ்ணகுமாரி—என்று அழைத்துவிட்டு நிறுத்தியவன்-

"என் அன்புக்கு விபரீத கற்பனைகளுக்கு இடம் கொடுத்து தடைபோட்டு விடாதே. அப்படியேதும் நேர்ந்தால் அதை என்னால் தாங்கிக் கொள்ளவே முடியாது."

அவன் சற்று கலக்கமடைந்தவன் போல எழுந்து வெளியேறினான்.

அவன் ஒண்டிக்கப்பல் பகுதியில் ஏற்பாடு செய்திருந்த வீடு சரஸ்வதிபுரம், வீட்டைவிட அதிக சௌகரியமாக இருந்தது, நான்கு புறமும் காம்பௌன்ட் சுவர் ஓரங்களில் ஏராளமான பூச் செடிகள், வாசல் கேட்டிலிருந்து உள்ளே தள்ளியிருக்கும் வீடு வரை சிமெண்ட் பாதை புதிய சின்ன பங்களாவான அதில் இது வரையில் யாரும் குடியிருந்ததற்கான அடையாளமேயில்லை. உள்ளே நுழையும் போதே புதிய வர்ணத்தின் வாசனை மூக்கைத் துளைத்தது.

ஜன்னல்களில் பூவேலை செய்யப்பட்ட சந்திரலோக் திரைச் சீலைகள் தொங்கின. அறைகளின் நிலை வாயிற், படிகள் தோறும் தமிழ்நாடு காதி கிராப்ட் தயாரிப்பான, ரேவதி வரைந்த, ராமர் பட்டாபிஷேகம், காந்தி, ஐயப்பன் ஓவியத் திரைகள்.

''இது நமது இண்ட்ஸ்ட்ரிக்குச் சொந்தமான கெஸ்ட் ஹவுஸ்களில் ஒன்று'' என்றான் ராஜசேகர்.

அவள் பெட்டி படுக்கைகளை உள்ளே கொண்டு போய் வைத்து விட்டு ஓர் அறைக்குள் நின்றாள்.

அறைக்கு வெளியே நின்ற ராஜசேகர் ''என்னுடைய எல்லை என்பது இதுதான். இதற்கு மேல் நான் உள்ளே வரமாட்டேன். வீடு சௌகரியமாக இருக்கும். யார் எது சொன்னாலும் கவலைப்படாதே. புறநிலையின் தாக்குதல்கள் சில சமயம் தீவிரமாக இருக்கும். அவைகளை அதிகமாகப் பொருட்படுத்த வேண்டாம்'' என்றான்.

''எனக்கு உங்களைப் புரிந்து கொள்ள முடியவில்லை ஆரம்பத்தில் எனக்கு நானே புதிராக இருந்தேன். என் செய்கைகளின் பேரில் எனக்கே ஒரு தடுமாற்றமிருந்து. குழப்பமிருந்து, ஆனால் இப்பொழுது என்னைத் தெளிவாக்கிக் கொண்டு விட்டேன்'' அறைக்கு வெளியே நின்று கொண்டு அவள் பேசினாள்.

அவன் திரைச் சீலைக்கு அப்பால் நின்று கொண்டு சிரித்தான்.

அதில் எத்தனையே உட்பொருட்கள் இருந்தன.

அது அவன் மனப்பேழைக்குள் அடங்கிக் கொண்டிருக்கும் அந்தரங்கங்கள் நிறைந்த சிரிப்பு!

அவன் கெஸ்ட்ஹவுலை விட்டு வெளியே வந்தான்.

தெருக்கோடியின் திருப்பத்தில் காரை நிறுத்திவிட்டு அதிலேயே அமர்ந்திருந்த அவனுடைய பெற்றோர்' அவன் கெஸ்ட் ஹவுஸிலிருந்து வெளியே வருவதைப் பார்த்தனர்.

அவர்கள் முகத்தில் அதிகமான கவலையிருந்தது.

அவன் தன் காரில் ஏறிக்கொண்டு வேறு திசையில் போனவுடன், அவர்கள் அங்கிருந்து புறப்பட்டார்கள்.

மனைவியை தன் அருகில் உட்கார வைத்துக்கொண்டு சுதர்சன் காரை ஒட்டினார்,

அவள் ஏற்கனவே விவாகமாகி ஒரு குழந்தைக்குத் தாய். என்ன காரணத்தாலோ புருஷனுடன் வாழாமல் வந்திருக்கிறாள். இது தான் உண்மைக் காரணமா அல்லது வேறு ஏதாவது இருக்குமோ தெரியவில்லை. இவள் சென்னையிலிருந்து இவ்வளவு தூரம் வந்திருக்கிறாளென்றால் எத்தனை நெஞ்சழுத்தக்காரியாக இருக்க வேண்டும்.

காரை ஓட்டியபடி வந்த சுதர்சன் மனைவி மகேஸ்வரியுடன் பேசிக் கொண்டு வந்தார்.

"இப்படிப்பட்டவள்மேல் இவனுக்கொரு பிடிப்பு. இதை என்னவென்று சொல்வது. நினைக்கவே அருவெறுப்பாக இல்லை இதை ஜீரணிக்கவே கஷ்டமாக இருக்கிறது" என்று மனச்சலிப்புடன் பேசினார். பிறகு நிதானமாக சில விநாடிகள் மௌனமாக காரோட்டி வந்தவர்.

"நாம் இவனிடம் நேரிடையாக மோதல் வைத்து கொள்ளக்கூடாது. இதற்கு நேரிடையான அணுகுமுறை நாகரிகமாகவும் இருக்காது. ஆகவே நாம் நம் அணுகுமுறையை வேறொரு கோணத்திலிருந்து நெருக்க வேண்டும். அப்பொழுதுதான் இவனை இந்த விபரீத போக்கிலிருந்து திருப்பமுடியும். பெங்களூர் கேசவ நாராயணின் பெண்ணை உடனடியாக முடிவு செய்து விடுவோம். அவர்களுக்குள் ஏற்கனவே ஒரு அழுத்தமாக அறிமுகம் இருக்

கிறது. அது எனக்குத் தெரியும். கேசவ நாராயணனும் அடிக்கடி டெலிபோனில் கேட்டுக் கொண்டேயிருக்கிறார். அவர் பெண்ணை நீ கூட ஒரு தடவை பார்த்திருக்கிறாய் என்று நினைக்கிறேன்.

"ரொம்ப நல்லபெண். இவனுக்கு ரொம்ப பொருத்தமாகப் இருப்பாள். படித்தவள் உடனடியாக அப் பெண்ணையே முடிவு செய்துவிடுவோம். அதுக்கு முன்னால் இவனிடம் ஒரு வார்த்தை கேட்டுவிடுவோம். பெரியவனுக்குத்தான் ஏற்கனவே குமாரகிருஷ்ணனின் பெண்ணை முடிவுசெய்து வைத்திருக்கிறோம். இவனுக்கு கேசவ நாராயணனின் பெண்ணை முடிவு செய்து விட்டால் இரண்டு பேர் கல்யாணத்தையும் இரண்டு பெண்வீட்டாரின் சௌகரியத்தை அனுசரித்து ஒரே இடத்தில் திருமண ஏற்பாடுகளை செய்யும்படி கேட்டுக் கொள்ளலாம்" என்றாள் மகேஸ்வரி.

இந்த பெண்ணின் பேர் என்ன...கிருஷ்ணகுமாரி... அவளுக்கும் இவனுக்கும் உள்ள சிநேகத்தில் வேறு உள் அர்த்தம் இருக்குமென்று நீ நினைக்கிறாயா?

மனைவியைப் பார்த்துக் கேட்டார் சுதர்சன்.

ஆரம்பத்தில் நான் அப்படி நினைக்கவில்லை. இப்பத் தான் அப்படி நினைக்கத் தோன்றுகிறது. கம்பெனியின் புதிய கெஸ்ட் ஹவுஸில் குடிவைக்கக்கூடிய அளவுக்கு இது வளர்ந்திருக்கிறது என்றால் இதில் வேறு அர்த்தம் என்ன இருக்கமுடியும்—

"அவள் இன்னும் வேலைக்குப் போகிறாள். முன்பு ஏதோ சாதாரண உதவியாளர் வேலையாகக் கொடுத்திருந்தவன் இன்று அவளை தனி அந்தஸ்துள்ள ஒரு பிரிவுக்கு மாற்றி அதன் தனிப் பொறுப்புகள் அத்தனையையும் கொடுத்திருக்கிறான். அதைப்பற்றிக் கேட்டால் நிர்வாக சௌகரியம். நிர்வாக சீர் அமைப்பு என்கிறான். அப்படிக்

கூறிய பின்பு யார் அதில் தலையிட முடியும். மாலை யானால் அவளை கெஸ்ட் ஹவுசில் கொண்டுபோய் விட்டு விட்டுத்தான் வருகிறானாம்—என்றார் சுதர்சன்.

கிட்டத்தட்ட என் ஊகம் சரியாகத்தானிருக்கிறது. இவ்வளவு கரிசனம் ஒரு பெண்ணின்மேல் உண்டாக வேறு காரணமே இருக்க முடியாது—இதை எப்பாடு பட்டாவது உடனடியாக நிறுத்த வேண்டும்.

கார் அவர்கள் பங்களாவின் காம்பௌண்டுக்குள் நுழைந்து போர்டிகோவில் வந்து நின்றது.

அவர்களுக்கு முன்னால் ராஜசேகரின் கார் அங்கே நின்று கொண்டிருந்தது.

## 12

அடுத்த நாள்.

"உனக்கு பெங்களூர் கேசவநாராயணனின் பெண்ணை தெரியுமா?"

ராஜசேகர் தன் அலுவலகம் புறப்பட வாசலுக்கு வந்த போது வாசல் முன் வராந்தாவில் உட்கார்ந்திருந்த தந்தை கேட்டார்.

"தெரியுமே! பெயர் கூட கொஞ்சம் கர்னாடகமாக இருக்கும், அம்புஜவல்லி... ப்ரில்லியண்ட் கேர்ள். முன்பு ஒரு தடவை ஓர் இண்டர் ஸ்டேட் டென்னிஸ் விளையாட்டில் கலந்து கொண்டு முதல் பிளாஸ் தட்டிக் கொண்டு போனாளே! அப்பகூட நம்ப விருந்தினர் விடுதியொன்றில் தன் சினேகிதிகள் சிலருடன் இரண்டு நாள் தங்கியிருந்தாள்."

"ஓ... உனக்கு அவளை நன்றாகவே தெரியுமென்று சொல்."

“நன்றாக என்று சொல்லமுடியாது...தெரியும்...”

“அவளைப்பற்றி இவ்வளவு விவரங்கள் கூறுகிறாயே ஓரளவு பழகியிருந்தால்தான் இத்தனை சுவாரஸ்யமாகக் கூறமுடியும் போகட்டும் பெண் எப்படி?”

“அழகாக இருப்பாள். மூஞ்சி கொஞ்சம் ஓவல் ஷேப்.”

சுதர்சன் சிரித்துக் கொண்டார்.

“உனக்கு அவளை பிடித்திருக்கிறதா?”

“அப்பா.”

கேட்ட கேள்விக்கு நேரிடையான பதில் சொல் போதும், ஜாதகப் பொருத்தமெல்லாம் நன்றாக அமைந்திருப்பதாக சாஸ்த்ரிகள் கூறிவிட்டார்கள். இனிமேல் பரஸ்பரம் சம்மதம் மட்டும்தான் தேவை. உனது விருப்பத்தை நான் இப்பொழுது கேட்பதுகூட ஒரு சாதாரண சம்பிரதாயத்திற்குத் தான். எங்களைப் பொறுத்தவரையில் இந்த சம்மந்தம் முடிவானமாதிரிதான்.

“என் கல்யாணத்திற்கு இப்ப என்ன அவசரம்?”

“அவசரம்தான்.”

“அப்பா, அண்ணன் வெளி நாட்டிலிருந்து வரட்டும். அவனுடைய கல்யாணத்தை முதலில் நல்லபடியாக நடக்க ஏற்பாடு செய்யுங்கள். அதன்பின் என் கல்யாணம் பற்றி யோசிக்கலாம்.”

“அவன் கல்யாணத்திற்கும் உன் கல்யாணத்திற்கும் என்ன சம்பந்தம்.”

“சம்மந்தமிருக்கோ இல்லையோ முதலில் அவன் திருமணம் நடந்தாகவேண்டும்.”

“இல்லை இருவருக்கும் ஒரே நாளில் முடிக்க நான் ஏற்பாடுகள் செய்யலாம் என்றிருக்கிறேன்.”

சில நிமிஷங்கள் மௌனமாக இருந்தவன்,

"எனக்கு இப்போ கல்யாணம் வேண்டாம்."

"காரணம்?"

"காரணம் இப்பொழுது சொல்வதற்கில்லை" என்றான் சற்று கடுமையுடன்.

உன்மேல் எனக்கு எப்பொழுதுமே ஓர் உயர்ந்த அபிப்ராயம் உண்டு. தர்மத்தின் கோட்டில் நின்று கொண்டு எதையும் செய்வாய், சிந்திப்பாய். இந்த அபிப்ராயம் எனக்கு மட்டுமல்ல உன்னைச் சுற்றியுள்ளவர்களின் அபிப்ராயமும் அதுதான். உறவினர்கள் மத்தியிலும் தொழிலாளர்கள் மத்தியிலும் இப்பெயரை எடுத்திருக்கிறாய். அதில் எங்களுக்குப் பெருமையுண்டு. அப்பெயருக்கு களங்கம் இல்லாமல் காப்பாற்றிக்கொள். பெயர் எடுப்பது ரொம்பக் கஷ்டம். ஆனால் கெட்ட பெயர் எடுப்பது ரொம்ப சுலபம்,

ராஜசேகர் சிரித்துக்கொண்டே தந்தையைப் பார்த்தான்.

"உங்க மனதில் இப்பொழுது நீங்களாக ஏற்றிவைத்துக் கொண்டிருக்கும் சுமையை கொஞ்சநாளைக்கு நீங்களும் அம்மாவும் சுமக்கவேண்டியதுதான். வேறுவழியில்லை."

"ராஜசேகர்!"

"உண்மைதான். அது ஒரு சுமை தான். அதைச் சுலபமாக இறக்க என்னிடம் இப்பொழுது குறுக்கு வழிகள் ஒன்றுமேயில்லை. உங்களைச் சமாதானப்படுத்தவும் என்னிடம் இப்பொழுதைக்கு வழிகள் இல்லை. ஆனால் இப்பொழுது ஒன்று சொன்னீர்களே, தர்மத்தின் கோடு என்று... அதை ஒரு தற்செயலான புகழுரையாக நான் எடுத்துக் கொண்டு விடமாட்டேன். என்மேல் நீங்கள் எல்லோரும் வைத்திருக்கிற நம்பிக்கைக்குக் கிடைத்த நற்சான்றிதழாக அதை மனதில் பதிய வைத்துக் கொள்வேன். அந்த

கோட்டை நான் தாண்டமாட்டேன். அந்த அளவுக்கு நீங்கள் என்னை நம்பலாம்...''

தந்தையின் கரத்தைப் பிடித்து நெகிழ்ச்சியுடன் இப்படிக் கூறிவிட்டு தன் அலுவலகம் புறப்பட்டு விட்டான்.

## 13

கண்ணாடி முன் நின்று கொண்டிருந்தாள் கிருஷ்ண குமாரி.

முன்பு தான் இருந்ததற்கும் இப்பொழுது இருப்பதற்கும் உள்ள முழுமையான மாறுதலை கண்ணாடியில் பார்த்தாள்.

மைசூருக்கு வந்த போதும், சாமுண்டி இண்ஸ்ட்ரீசில் வேலைக்குச் சேர்ந்த போதும் அவள் மிகச் சாதாரணமான வள். அதிகக்குறைவுமில்லாமல், ரொம்ப அதிகம் என்றும் இல்லாமல் சம்பளம் பெறும் ஒரு உதவியாளர்.

ஆனால் இன்று!

சாமுண்டி இண்டஸ்ட்ரீசில் விநியோகப்பிரிவுகளில் ஒன்றுக்கு அதிகாரி அவள்.

அவள் உத்தியோகத்திற்கு ஒரு தனி அந்தஸ்தும், தனித் தன்மையுமுண்டு.

மிகுந்த உற்சாகத்துடன் அந்தப் பதவியை ராஜசேகர் அவளுக்கு கொடுத்தபோது அவள் மிகுந்த தயக்கத்துடன் அதை ஒப்புக் கொண்டாள்.

''நீங்கள் இதற்கு தகுதியானவர் என்பதால் தான் போர்டு மீட்டிங் போட்டு இதற்கு ஒப்புதல் வாங்கியபின் உங்களை நியமித்திருக்கிறேன். ஒரு தொழிலின் முன்னேற்றம் என்பதே ஒரு திறமைசாலியைப் புரிந்து

கொண்டு அவனைச் சரியான இடத்தில் பொறுத்துவதுதான். அரசாங்கத்திற்கும், தனியார் நிறுவனங்களுக்கும் இதுதான் வித்தியாசம். அவர்களுக்கு ஸ்கூல் சர்டிபிகேட் தான் முக்கியம், நபர்களைப் பற்றியோ, அவன் திறமைகளைப் பற்றியோ கவலையில்லை. அக்கறையுமில்லை. இங்கே திறமைக்குத் தான் முதல் இடம். முதல் தகுதி'' என்று கூறி விட்டான்.

தனியான அந்தஸ்துள்ள உத்தியோகம். தனியே சிறிய பங்களா! கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்று கேட்க உள்ளே யும், வெளியேயும் வேலைக்காரர்கள். ரவியைப் பார்த்துக் கொள்ள வேலைக்காரப் பெண். பெருமையாகச் சொல்லிக் கொள்ளக் கூடிய அளவுக்குச் சம்பளம்.

ஃ ஃ ஃ

ராஜசேகர் முன்னே போய்க் கொண்டிருந்தான் அவனுக்கு அருகில் இடைவெளி விட்டு கிருஷ்ணகுமாரி நடந் தாள். கிருஷ்ண ராஜசேகர் நீர்த்தேக்கம் சமுத்திரமாகத் தெரிந்தது. மலைப்பாதையில் வரிசையாக, ஒன்றன்பின் ஒன்றாக உல்லாசப் பயணிகள், பஸ்களின் அணிவகுப்பு பிருந்தாவனத்தின் எதிர்முனை, பனிப் போர்வைக்குள் முடங்கிக் கிடந்தது. உருவங்கள் கூட புகை மூட்டத்தில் கான்வாஸ் ஓவியம் போல தெரிந்தன.

''என் மேல் என் பெற்றோருக்கு அளவிடமுடியாத நம்பிக்கை உண்டு. எனக்கும் அவர்கள் மேல் ஒரு ஆழ்ந்த பாசம். இதைப் பாசம் என்பதைவிட பக்தி என்று சொல்ல லாம். ஏனெனில் என் நல்வாழ்விற்காக தள்ளாத வயதில் தனியே இருந்து கொண்டு ஏங்குகிற பெரிய ஜீவன்கள்.''

எனக்குச் சிறு வயதிலிருந்தே படிப்பின் மேல் இருந்த ஆர்வம் பள்ளியில் நிறைய மார்க்குகள் வாங்கினேன். என் படிப்பு பாதியில் நின்றுவிட என்னுடைய தலைமை ஆசிரியை இடந்தரவில்லை. நான் அனாதை ஹாஸ்டலில் சேர்ந்து

படிக்க அவர்தான் உதவி செய்தார். அவருடைய நம்பிக்கையை நான் காப்பாற்றினேன். அப்பொழுதெல்லாம் அந்த தலைமை ஆசிரியைதான் என்னுடைய கார்டியன், போஷகர் எனது பள்ளிக்கூட, மற்றும் உதவித் தொகை போன்ற படிவங்களில் அவர்தான் கையெழுத்துப் போடுவார்.

என்னுடைய பள்ளி நாட்களைப் போல கல்லூரி நாட்கள் அவ்வளவு கடினமாக இல்லை. எதையும் புரிந்து கொள்ள முடியாத ஒரு சிறு பிராயத்து ஏக்கம் அப்பொழுது இருந்தது.

ஆனால் பின்பு...

"எல்லாவற்றையும் புரிந்து கொண்ட சகிப்புத் தன்மையும், வாழ்க்கையின் மேல் ஓர் ஆர்வமும் உண்டாகி விட்டது."...

இருபுறமும் மலர்கள் அடர்ந்த சிமெண்ட் நடை பாதையில் இருவரும் சேர்ந்து நடந்தார்கள். அருகில் சிமண்ட் நீரோடையில் தண்ணீர் ஓடிக்கொண்டிருக்க செயற்கை நீர் ஊற்றிலிருந்து தண்ணீர் பூவாளியாகக் பீச்சியடித்துக் கொண்டிருந்தது.

மலர் போன்ற தன் உடம்பின் மேல் தனக்கே ஆசையுண்டாகும் பருவம். ஆசையும், அபிலாஷையும் போட்டிப் போட்டுக் கொண்டு வயதுடன் சேர்ந்து வளரும் காலம்.

வசந்தங்களைத் தன்னுள் வாரி அணைத்துக் கொள்ளும் பருவ காலத் தேரோட்டம்.

"என் கல்லூரி நாட்கள் என்தோழி ஒருத்தியால் சிக்கலின்றி இருந்தது.

எனக்கு ஆதரவு கொடுத்தவர்கள் என்னை ஒரு பட்டதாரியாக்கும் வரையில் உடன் வந்தார்கள், அதை நான் நன்றியுடன் கூறவேண்டும்.

அவர்கள் என் வாழ்க்கைக்கு வழிகாட்டிய மார்க்க பந்து

பிறகு,

எனது வாழ்க்கைப் போக்கில் அந்த மனோகரமான அணிவகுப்பிலிருந்து பிரிந்து என் வழியில் நான் திரும்ப வேண்டியதாகி விட்டது.

என் போக்கு, என் வாழ்க்கை, என் எதிர்காலம்...''

கீழ் நிலையில் ஏரி போன்ற பெரிய நீர் தேக்கத்தை இரண்டாக கிழித்துப் போட்ட மாதிரி ஒரு நடைபாதைப் பாலம். மிகக்குறுகலான அதில் இருவரும் சேர்ந்து நடந்தார்கள்.

சின்னச் சின்ன அலைகளாக நடைபாதை ஓரங்களை வந்து சாடி ஓசை எழுப்பிக் கொண்டிருந்தன. இரண்டுபுறம் சுவர் வைத்தாற்போலை மலை. எதிரே உயரமாகத் தெரியும் லாட்ஜிங் ஓட்டலாக மாற்றப்பட்ட ராஜ அரண்மனை... சுற்றிலும் பூத்துக் குலுங்கும் பிருந்தாவனத் தின் ஒட்டு மொத்தமான அழகு.

அழகிய மண்டபத்தில் இரண்டு மூன்று பக்கவாத்தியங் களுடன் யாரோ ஓர் இளைஞன் வீணை வாசித்துக் கொண் கொண்டிருந்தான்.

நவம்பர் மாதத்தின் சீதோஷ்ண நிலையில் உடம்பைக் குளிர் தழுவிக் கொண்டிருந்தது.

அவள் வேலைக்குச் சேர்ந்ததைச் சொன்னாள், மலர்கொடியைப் பற்றிக் கூறினாள். பின்பு கிண்டி தக்கைக்கல் தொழிற்சாலைக்கு வேலைக்குப் போனதைப் பற்றிக் கூறினாள். பிறகு அதிலிருந்து வெளியேற நேர்ந்த சூழ்நிலையைக் கூறினாள். அந்த நேரத்தில் தான் சாமுண்டி இண்டஸ்ட்ரீஸ் விளம்பரத்தைப் பார்த்ததாக கூறினாள்.

இப்பொழுது அவர்கள் தனியே ஒரு மலர்ச்செடியின் அருகில் புல்தரையில் எதிரெதிரே உட்கார்ந்து பேசினர்-- பூச்செண்டுபோல வளர்ந்து இருந்த அதன் நடுவில் விளக்குக் கம்பம் நின்றது.

"எல்லாவற்றையும் கூறினாய். உன் வாழ்க்கை இப்படியாகக் காரணமானதை மட்டும் கூறவேயில்லையே."

"அதையொரு கெட்ட கனவாக மறக்க மனதுக்கு பயிற்சி அளித்துக் கொண்டிருக்கிறேன். சாமுண்டி இண்டஸ்ரீஸ் விளம்பரத்தைப் பார்த்துவிட்டு இங்கே வேலைக்கு வந்தபோது இருந்த மனநிலை வேறு. இங்கு வந்து வேலைக்குச் சேர்ந்து என் வாழ்க்கை முறையை மாற்றியமைத்துக் கொண்டபின் இன்று இருக்கிற மனோ நிலைவேறு.

இங்கே வரும்போது என்மனதில் ஒரு போராட்டகுணம் இருந்தது. ஆத்திரம் இருந்தது. என்னைப் பாழாக்கியவனைப் பழிவாங்க வேண்டும் என்ற குரூரம் இருந்தது.

ஆனால் இன்று?

என் உள்ளப்பாங்கு மாறிக் கொண்டு வருகிறது. இந்தப் போராட்டத்தில் ஈடுபட்டு நாம் அதில் தோற்றுவிட்டால் என்ன செய்வது, அப்படித் தோல்வியைத் தழுவும்போது நான் ஆரம்ப நிலைக்கே த்தள்ளப்பட்டு விட்டால் என்ன செய்வது—என்று ஒரு தடவை எண்ணிப் பார்த்தேன். இந்த நெருப்பு விளையாட்டு பயத்தைக் கொடுத்தது. என் பழைய போராட்ட குணங்களை நானே சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு விட்டேன்.

எல்லோரும் நரகத்திலிருந்து சொர்க்கம் போகத்தான் விரும்புவார்கள். சொர்க்கத்திலிருந்து நரகம் போக யாரும் விரும்ப மாட்டார்கள்.

என்னுடைய இன்றைய நிதானமான வாழ்க்கையில் சொர்க்கத்தின் நிழலைப் பார்க்கிறேன். இதை பாழாக்கிக்

கொண்டால் இதில் வீழ்ச்சி அடைவது நான் மட்டுமல்ல என மகனின் வீழ்ச்சியும் சேர்ந்துவிடும். அவனுக்கு அப்படிப் பட்ட தொரு வீழ்ச்சியை நான் தேடித் தரலாமா அது நியாயாமா?

''முயற்சிகளை ஏன் போராட்டமாக மாற்றிக் கொள்ள நினைக்கவேண்டும்'' ராஜசேகர் கேட்டான்.

''வாஸ்தவம் தான் என் முயற்சிகள் என்பது இங்கே ஒரு போராட்டம் தான். நான் மோத வேண்டுமென்றால் அப்படிப்பட்ட ஒருவருடன் தான் மோத வேண்டும் ஏற்கனவே இரண்டு முறை அந்த மூர்க்கமானவரின் தாக்கு தலிலிருந்து உயிர்பிச்சை கேட்டு உயிர் தப்பியிருக்கிறேன்.''

''பயப்பட்டிருக்கக் கூடாது.''

''நான் தனியான பெண்ணாக இருந்திருந்தால் என் போராட்டம் ஒரு கூர்வாளாக அவரைத் தாக்கியிருக்கும். சேலத்தில் என்னை நம்பி என் பெற்றோர் இருக்கிறார்கள். இரண்டாவது என் தாய்மை நிலை, பின்பு இவனைப் பெற்றுக் கொண்ட பின் இவன் மேல் உண்டான பாசம். இவன் மேல் நான் வைத்துள்ள எதிர்காலக் கனவு! என்னை சாத்வீகியாக்கி விட்டது.

''இதை தவிர்த்துக் கொள்ள நீ முயற்சிக்க வில்லையா?'

''எதை என் தாய்மையையா?''

''ஆமாம்''

''ஒரு பாவத்திற்கு மேல் மற்றொரு பாவம் செய்ய நான் தயாராக இல்லை. இந்த ஒரு துயரமான நிகழ்ச்சி யுடன் எனது வாழ்வின் வசந்தகால அத்தியாயங்களை நானாக முடித்துக் கொண்டு விட்டேன்.''

அவர்கள் இருவரும் எழுந்தார்கள். பிருந்தாவனுக்கு வெளியே நிறுத்தியிருந்த காரில் ஏறிக் கொண்டார்கள்.

கார் புறப்பட்டது.

ரொம்ப நேரம் வரை அவன் பேசவேயில்லை.

அவன் முகம் சோர்ந்து போயிருந்தது.

அவளுடைய சோகமான வாழ்க்கைக்கு மனம் வருந் தினான். அருகில் காரின் கதவோரமாக உடம்பை ஒடுக்கிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் கிருஷ்ணகுமாரியைப் பார்த் தான்.

"உன்னைப் பற்றி நான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன்' அது என்ன என்று உன்னால் ஊகிக்க முடியுமா?"

"நீர் வீழ்ச்சியின் அருகில் வரும் முன்பே அதன் நீர்த்தி வலைகள் பனிப் போர்வை போல நம் உடம்பின் மேல் வந்து தானாகவே போர்த்திக் கொள்ளுமே அது போல, உங்களுடைய அபூர்வமான நேயத்திலிருந்து அது எப்படிப் பட்டது என்பதை ஊகிக்க முடிகிறது நீங்கள் அதை நேரிடை யாகச் சொல்லித்தான் புரிந்து கொள்ள வேண்டுமென்ப தில்லை. உங்கள் பிரியமான பார்வை, உங்களுடைய உதவி, உங்களுடைய சிநேகமான செய்கைகள்—இவை எல்லாம் ஒரு பனிப் போர்வை போல என் மேல் எப்பொழு தும் இருக்கிறது..."

"உன் முடிவுக்காகக் காத்திருக்கிறேன்"—என்றான் ராஜசேகர் முகத்தில் எவ்வித சலனமும் இல்லாமல்.

"ராஜசேகர்"—என்று பதட்டத்துடன் அவனைப் பார்த் தாள். அவன் அவளைத் திரும்பிப் பார்க்கவேயில்லை.

"நான் ஒரு குழந்தைக்குத் தாய்"—என்றாள் கண்களில் கண்ணீர் மல்க.

"இருக்கட்டுமே. தாய்மை அப்படி ஒன்றும் பாவ மில்லை."

"நான் தாய்மை எய்த சூழ்நிலை பாவமில்லையா."

“தாய்மை என்பதே பாவமில்லை. அதுதான் என் கொள்கை.”

“வேண்டாம். அதை நினைத்துப் பார்க்கக்கூட எனக்குத் திராணியில்லை. நான் ஆரம்பத்தில் இங்கே வந்த நோக்கத் திற்கும், இன்றுள்ளதற்கும் அதிக வித்தியாசமுண்டு.”

“இல்லை, கிருஷ்ணகுமாரி. உன் பாவங்களுக்கு நான் பிராயச்சித்தம் செய்யப் போகிறேன். இதில் எவ்வித மாற்ற மும் கிடையாது. உனக்கு நிறைய அவகாசம் தருகிறேன். நம்மிடையே இருக்கின்ற இந்த இடைவெளியை நான் எந்த காரணம் கொண்டும் சுருக்கிக் கொள்ள மாட்டேன். உன் அனுமதியின்றி அந்தத் திரைச் சீலையை நான் ஒதுக்கிவிட்டு உள்ளே வரமாட்டேன். நம்மிருவருக்குமிடையே பெரிய கற் சுவர்கள் தேவையில்லை. ஒருவரையொருவர் புரிந்து கொண்டு பழகுகிற இந்த மெல்லிய உணர்வுகளையே ஒரு காகிதச் சுவராக எண்ணிக் கொள்வோம்.”

“ராஜசேகர்”

அவன் சிரித்துக் கொண்டான்.

“என்னால் உனக்கு எவ்விதத் தீங்கும் நேராது. தவறான முடிவில் வேலையை விட்டுவிட்டுப் போய்விடாதே. நிர்பந் தமே செய்ய மாட்டேன். ஆனால் என் தீர்மானத்தினின்று பின் வாங்கவும் மாட்டேன்.”

“இதுகூட மறைமுகமான நிர்பந்தம்தான்.”

அவன் சிரித்தான்.

அவளும் சிரித்தாள்.

“என்னை மீண்டும் மற்றொரு பாவம் செய்யத் தூண்டா தீர்கள்.”

“இந்தக் காலத்தில் எதுவுமே பாவமில்லை. நடக்கக் கூடாததும் இல்லை. நாமும்தான் பார்க்கிறேமே, ஒரு சமயத்தில் ரொம்பவும் அதீதமானது, அநாசாரமானது,

பாவமானது என்கிற விஷயங்கள் எல்லாம் இன்றைய வாழ்க்கையோட்டத்தில் மிகச் சாதாரணமாக அன்றாடம் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன. கைம்பெண்களை மணப்பது, கணவன், மனைவி விவாகரத்து செய்து கொண்டு பிரிவது, கணவனால் கைவிடப்பட்ட பெண் தன் வாழ்க்கையை நம்பிக்கையான வேறு ஒருவனுடன் பகிர்ந்து கொள்வது, நெறி தவறிய பெண்களின் மறுவாழ்வு, குழந்தையுடன் இருப்பவளை மணப்பது, வயது வித்தியாசமின்றி மணப்பது.. இன்று எதுதான் நடக்கவில்லை.''

''சாஸ்திரங்களின் அனுமதிப்பு என்பது ஒருபுறமிருக்கட்டும். அதை நாம் வீணில் சாடிக் கொண்டு நமது செய்கைகளுக்கு ஒரு நியாயம் தேடிக் கொள்ள வேண்டாம்.',

''சாஸ்திரங்கள் சாஸ்திரங்களாகவே இருக்கட்டும். அதை மதிக்கிறவர்களை நாம் குறை கூறவும் அவசியமில்லை.

சமூக அங்கீகாரம், சாஸ்திர அங்கீகாரம் இரண்டுக்கும் நடுவே ஒரு பனிப் போர்வையைப் போல சிறு காகிதச் சுவர் ஒன்று எப்பொழுதும் இருந்துகொண்டேதானிருக்கும் அவைகளைக் கிழித்தெறிய நாம் மூர்க்கமாகப் போராட வேண்டிய அவசியமேயில்லை. ஏனென்றால் சாஸ்திரம் சில ஆழமான அடிப்படை தர்மங்களைக் கொண்டது. சமூகம் சில நடைமுறை சௌகரியங்களை அடிப்படையாகக் கொண்டது' எனவே நடைமுறை சௌகரியங்களை சமூகம் என்றுமே அசட்டை செய்ததில்லை. சமூகம் அங்கீகரித்த எதையும் சாஸ்திரம் உதாசீனப்படுத்தியதுமில்லை. இவை இரண்டும் ஒன்றுக்கொன்று மோதிக் கொள்ளாமல் போகும் இரண்டு இணைக்கோடுகள். இதை, நமது சமூக'சீர்திருத்தவாதிகள் என்று கூறிக் கொள்கிற மூடங்கள் புரிந்து கொள்வதேயில்லை''—என்றான்.

எல்லாவற்றையும் எவ்வித குறுக்கீடும் செய்யாமல் கேட்டுக் கொண்டு வந்த கிருஷ்ணகுமாரி அவனுடைய தர்க்க நியாயங்களை கேட்டு விட்டு வியப்படைந்தாள்.

இவன் ரொம்பவும் தெளிவான சிந்தனைப் போக்குடையவன். ஒரு நியாயமான தர்மத்தின் கோட்டில் நின்று எதையும் சிந்திக்கிற அறிவு ஜீவி. இவன் எந்த நேரத்திலும் நடுநிலை இழக்கவே மாட்டான்.

கார் அவளுடைய சிறிய விடுதி பங்களாவின் முன் வந்து நின்றது,

அவள் காரை விட்டுக் கீழேயிறங்கி நின்று காரின் கதவைச் சாத்தி விட்டு டிரைவர் ஆசனத்தில் அமர்ந்திருக்கும் ராஜசேகரைத் திரும்பிப் பார்த்து—

"சாஸ்திரம், சமுதாய நடைமுறை இவையிரண்டும் தனி மனித வெறுப்பு விருப்பில் தலையிட முடியாது. உங்கள் தர்க்க நியாயங்களை அப்படியே ஒப்புக் கொள்கிறேன். ஆனால் என் மனம் இதற்கெல்லாம் அப்பாற்பட்ட ஸ்திதியில் அப்படியே தேங்கிப் போய்விட்டது. இனி அந்த தேக்கம் உடைய வழியில்லை" என்றாள்.

அவன் புன்னகையுடன் அவளைப் பார்த்து விட்டு காரைக் கிளப்பும்போது—

"நான் என் முடிவில் கொஞ்சம் பிடிவாதமானவன் என்றான்"—

அவள் இப்பொழுது அதிர்ச்சிக்கு ஆளானாள்.

ஃ ஃ ஃ

அன்று பரபரப்புடன் உள்ளே நுழைந்த ராஜசேகர் கிருஷ்ணகுமாரியை அழைத்தான்.

"நாளைக்கு அண்ணா வருகிறார், முதலில் நேராக பெங்களூர் வருவதாகத்தான் திட்டம். ஆனால் இப்பொழுது ஒரு மாறுதல். சென்னை வந்து அங்கே இண்டஸ்ட்ரீஸ் மினிஸ்ட்டரைப் பார்த்து விட்டு அடுத்த நாள்தான் இங்கே வருகிறான். நாம் அவனை சென்னை விமான நிலையத்தில் வரவேற்கப் போகிறோம்."

அவள் பதிலேதும் கூறவில்லை.

“ஏன் தயக்கம்?”

“நான் அவரை பெங்களூர் விமான நிலையத்தில் வரவேற்க வேண்டிய ஏற்பாடுகளை கவனித்துக் கொள் கிறேன். சென்னைக்கு வர இயலாமைக்கு தயவு செய்து மன்னித்து விடுங்கள்.”

“காரணம்...”

“வேறு காரணம் ஒன்றுமில்லை. யாரேனும் தெரிந்த வர்கள் கண்ணில்பட நேரலாம். என்னைப் பொறுத்த வரையில் சென்னையில் சிலரால்தான் என் வாழ்க்கையே பாழானது. நான் இங்கே இருப்பது அவர்களுக்குத் தெரியாது. தெரியக்கூடாது என்று இருக்கிறேன். குறிப் பாக மலர்கொடி என்ற பெண் ஒருத்தியிருக்கிறாள். அவள் கண்களில் படுவதுபோன்ற ஆபத்து வேறு எதுவும் இல்லை”

“நாம் பெங்களூரிலிருந்து ஃபிளைட்டில் சென்னை சென்று அங்கே ஹோட்டலில் ஒரேயொருநாள் தங்கிவிட்டு அவனை வரவேற்க விமான நிலையம் போகிறோம். அடுத்த ஃபிளைட்டில் பெங்களூர் திரும்புகிறோம்,”

அவள் மறுத்து விட்டாள்.

அவன் அதற்குமேல் தொந்தரவு செய்யவில்லை.

அவன் தன்சிறு குழுவுடன் சென்னை சென்றான்.

திட்டமிட்டபடி அண்ணன் ஸ்ரீகாந்த் வந்துவிட்டான்.

அவன் வெளிநாடு சென்று வந்த விவரத்தைக் கூறி விட்டு அவன் ஏற்கனவே தயாரித்து வைத்திருந்த ஒரு ப்ராஜ்க்ட் ரிபோர்ட்டையும் ஏற்கனவே ஒப்புக் கொண் டிருந்தபடி தொழில் துறை அமைச்சரை சந்தித்துக் கொடுத்துவிட்டு மைசூர் புறப்பட்டு விட்டான்.

# 14

புதிய ஆராய்ச்சி, புதிய கண்டு பிடிப்பு போன்ற விரிவான பயிற்சிக்குப்பின் அவன் தனி ஆளாக திரும்பி யிருப்பதில் பெற்றோருக்கு அளவற்ற மகிழ்ச்சி, நிம்மதி, வந்தவுடனேயே அவன் விவாக விஷயத்தை ஆரம்பித்து விட்டார்கள்.

அதற்கு அவன் எதிர்ப்பு ஏதும் தெரிவிக்காதது அவர் களுடைய மகிழ்ச்சியை மேலும் அதிகமாக்கியது.

அவன் வந்தவுடனேயே தொழிற்கூடங்களை மாற்றி அமைப்பதற்கான புதிய திட்டங்களை ராஜசேகருடன் விவாதித்தான். புதிய நிர்வாக சீர்திருத்தங்களைக் கூறி அவைகளை உடனே அமுல்படுத்தும்படி அவனிடம் கூறினான்.

ஒன்றன்பின் ஒன்றாக அவனுடைய புதிய திட்டங்கள் செயல் வடிவம் பெறத் தொடங்கின:

அவன் நிர்வாக சீர்திருத்தம் என்ற திட்டத்தின் கீழ் முற்றிலும் தற்காலிகமானவர்கள் என்ற பட்டியலில் இருந்த சுமார் முப்பதுபேருக்கு உடனடியாக வேலை நீக்க நோட்டீஸ் கொடுக்கும்படி கூறினான். அந்தப் பட்டியலில் கிருஷ்ண குமாரியின் பெயரும் இருந்தது.

இதில் மட்டும் ராஜசேகர் அண்ணன் திட்டத்திலிருந்து மாறுபட்டு நின்றான்.

“உற்பத்தி, விநியோகம் ஆகிய இரண்டு நிலைகளில் இப்பொழுது இருக்கிற ஊழியர்களுக்கான வேலை சரியாக வும் சமமாகவும் இருப்பதால் யாரையும் வீட்டுக்கு அனுப்ப வேண்டாம்” என்றான்.

ராஜசேகரின் அபிப்ராயங்களை அவன் ஏற்றுக் கொண் டான். எனினும் வேலை நீக்கப் பட்டியலில் முப்பதிலிருந்து

பதினைந்தாக குறைந்தது. சமீபத்தில் வந்தவள் என்பதால் அந்த திருத்தப்பட்ட இரண்டாவது புதிய பட்டியலிலும் கிருஷ்ணகுமாரியின் பெயர் இருந்தது.

யாரையும் வீட்டுக்கு அனுப்பக்கூடாது என்கிற நன் அபிப்ராயத்தின் பேரில் அவன் பிடிவாதமாக இருந்தான்.

பதினைந்து பேர்கள் அடங்கிய பட்டியல் ஐந்து பேருடன் சுருங்கியது.

இந்தப் பட்டியலில் யாருடைய பெயர் இடம் பெறக் கூடாது என்று நினைக்கிறேனோ அவள் பெயர் திரும்பத் திரும்ப இந்தப் பட்டியலில் இடம் பெற்று விடுகிறது— என்றான்.

"நான் இவளுக்காகத்தான் இந்தப் பட்டியலையே தயாரித்தேன்."

"அவள் ஒரு திறமைசாலி. எந்த வேலை கொடுத்தாலும் நன்றாகச் செய்வாள்."

"நமக்குத் தேவையான திறமைசாலிகளை எப்பொழுது வேண்டுமானாலும் அமர்த்திக் கொள்ளலாம். ஆமாம்! குறிப்பாக அவள்மேல் அக்கறை கொள்ளக் காரணம்...?"

"அதையேதான் நானும் கேட்கிறேன். கிருஷ்ண குமாரியை வெளியே அனுப்புவதில் நீ இவ்வளவு தீவிரமாக இருக்கக் காரணம்?"

"அது உனக்கே தெரியும். அவள் நல்ல திறமைசாலி என்று கூறிக்கொண்டு ஒரு குழந்தைக்குத் தாயான அவள் தனிப்பட்ட வாழ்க்கையின் பேரில் அதிக அக்கறையுடன் இருக்கிறாய் என்று அப்பாவும் அம்மாவும் சொல்கிறார்கள். அவள் இங்கே வந்த பின்பு உன் போக்கே மாறிவிட்டதாக வேறு சிலரும் கூறுகிறார்கள். தமது கெஸ்ட் ஹவுஸில் அவளை குடிவைத்திருக்கிறாய். அவளுக்காக நீ எடுத்துக்

கொள்கிற அக்கறை ரொம்ப அதிகமாகத் தெரிகிறது. திருமண ஏற்பாடுகளைக்கூட இப்பொழுது வேண்டாம் என்று தடுக்கக்கூடிய அளவுக்கு அவள்மேல் உள்ள அக்கரை வளர்ந்திருக்கிறது என்றால் அதன் அர்த்தம் என்னவாக இருக்கும். இதற்கெல்லாம் முடிவுகட்ட வேண்டுமானால் அவள் வெளியேறியே ஆகவேண்டும். அதைத்தவிர வேறு வழியே இல்லை.''

''அவளை வெளியே அனுப்புவது அவ்வளவு சாத்தியமல்ல. உன் திருமணம் நடக்கட்டும். பிறகு நாம் இதுபற்றி விவாதிப்போம்.''

சம்பாஷணை அவர்கள் பங்களாவில் நடந்து கொண்டிருந்தது.

சுதர்சனமும் தாய் மகேஸ்வரியும் இரட்டை சோபாவில் அமர்ந்து இதை கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

''என் திருமணத்திற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? இதற்காக தனியாக விவாதிக்க என்ன இருக்கிறது?''

''நீ நேரிடையாக கேட்பதால் நானும் நேரிடையாகவே சொல்கிறேன். கிருஷ்ணகுமாரியை இனி வெளியே அனுப்புவதை என்னால் நினைத்துக்கூட பார்க்க முடியாது'' என்றான்.

''அவள் வெளியேறியே ஆக வேண்டும். அப்படி அவள் போகவில்லை என்றால் நான் அவளை வெளியேற்றுவேன். நமது அடிப்படை அதிகார வரம்புகள் பிரிவில் நிர்வாகம் நிதி ஆகியவை யிரண்டும் என் பொறுப்பில் இருக்கிறது. இதை நாம் ஆரம்பத்திலேயே ஒருவருக்கொருவர் ஒப்புக்கொண்டு நம் பெற்றோர் முன்னால் கையெழுத்துப் போட்டுக் கொண்டிருக்கிறோம்.''

ராஜசேகர் மௌனமாக இருந்தான்.

"அவளை நமது கம்பெனியிலிருந்து வெளியேற்ற வேண்டும். அதற்கு உனக்கு அதிகாரமிருக்கிறது. அதை நான் ஒப்புக் கொள்கிறேன். உன் இஷ்டப்படி உன் அதிகாரத்தை பயன்படுத்துவதற்கு குறுக்கே நான் வரமாட்டேன். ஆனால் அவள் இந்த வீட்டிற்கு மருமகளாக வருவதை நீ தடை செய்ய முடியாதே!"

"ராஜசேகர்" என்று பதட்டத்துடன் அழைத்தார் சுதர்சனம்.

"உனக்கென்ன பைத்தியமா பிடித்து விட்டது"— என்று கேட்டான் ஸ்ரீகாந்த்.

"அவள் ஒரு குழந்தைக்குத் தாய். புருஷன் பேர் தெரியாதவள் அப்படின்னா அர்த்தம் தெரியுமா?"

ஸ்ரீகாந்த் முகத்தையே பார்த்தான் ராஜசேகர்.

"நடத்தை கெட்டவள் என்று அர்த்தம். ஏதோ திட்டத்துடன் இங்கே வந்திருக்கிறாள். அவள் திட்டம் நிறைவேறின மாதிரி இருக்கிறது உன்பேச்சு."

"அவள் எந்தவித திட்டத்துடனும் வரவில்லை. அவளுடைய திட்டமெல்லாம் அவளுடைய எதிர்காலம், குழந்தையின் எதிர்காலம் இவைதான். இதற்காக அவள் திட்டமிடுவதில் என்ன தவறு."

"இது ஒருநாளும் நடக்காது. நடக்க விடவும் மாட்டேன். நீ ரொம்பவும் நியாயமானவன். தவறான பாதையில் போக மாட்டாய். தர்மத்தின் கோட்டில் நின்று செயல்படுவாய் என்று எண்ணினேன். ஆனால் நீயோ ஓர் அநாகரீகத்தை வீட்டிற்குள் கொண்டுவரப் பார்க்கிறாய்"—சுதர்சன் கத்தினார்.

"குமார கிருஷ்ணனின் பெண்ணை ஸ்ரீகாந்துக்கு முறைப்படி நிச்சயம் செய்ய வேண்டும். அதே கையோடு அம்புஜவல்லியை உனக்கு முடிவு செய்ய வேண்டும் என்று நான்

திட்டம் போட்டுக் கொண்டிருக்கிறேன். இந்நேரத்தில் இப்படியொரு கல்லைத் தூக்கிப் போடுவாய் என்று நாங்கள் எதிர்பார்க்கவில்லை'' என்றார் சுதர்சன்,

''இப்பொழுதும் உங்கள் நம்பிக்கையை நான் சிதைக்க வில்லை. ஒரு தர்ம நியாயத்தின் அடிப்படையில் நின்று கொண்டுதான் பேசுகிறேன்.''

''எதுடா தர்ம நியாயம்? புருஷன் இல்லாமல் ஒரு குழந்தையுடன் இருப்பவளை மணக்கப் போகிறேன் என்று கூறுவதா தர்ம நியாயம்!''

# 15

ஒருகையில் பெட்டியும் தூங்கும் குழந்தையை மற்றொரு தோளிலும் சாய்த்துக்கொண்டு யாரும் எதிர்பார்க்காத நேரத்தில் உள்ளே நுழைந்தாள் கிருஷ்ணகுமாரி.

''வா கிருஷ்ணகுமாரி, ரொம்பவும் சரியான நேரத்தில் தான் நீ வந்திருக்கிறாய். உன் வரவு நல்வரவாகட்டும்'' என்று சிரித்தான் ராஜசேகர்.

''உனக்கு இங்கே என்ன வேலை'' சுதர்சனம் அவளைப் பார்த்து சினத்துடன் கேட்டார்.

''அப்பா அவளைப் பார்த்து அப்படிக் கேட்காதீர்கள்.''

''எத்தனை நாளாய் இக்குடும்பத்தில் இப்படியொரு குழப்பத்தை உண்டாக்க வேண்டுமென்று திட்டம் போட்டிருந்தாய்''—

அவளை அடிக்க ஓங்கிய அவன், கையைத் தடுத்து நிறுத்தினான் ராஜசேகர்.

"பரவாயில்லை. ரொம்பப் பசுமையாகவே நினைவு வைத்துக் கொண்டிருக்கிறாய். அதை மட்டும் மறந்து விடாதே. நீ எங்களுடைய வாழ்க்கையில் குறுக்கிடாத வரையில் நாங்களும் உன் வாழ்க்கையில் குறுக்கிட மாட்டோம். போய்வா! நான் காலையில் நர்ஸிங்ஹோம் வந்திருந்தேன். டாக்டருக்குக் கொடுக்க வேண்டிய தொகையைக் கொடுத்துவிட்டு. உனக்கும் குழந்தையின் தொட்டிலில் வைத்து விட்டு வந்தேனே!"

"நன்றி மலர்க்கொடி."

"வேறு வேலை தேடிக்கொள்ளும்வரை அது உனக்கு உதவும்."

"ஆண்டவன் ஒருவன் இருந்தால் உங்களுடைய இந்த அக்கிரமங்களுக்கு நிச்சயம் தண்டனை தருவான்"— என்றாள் கண்களில் கண்ணீர் வழிய.

இந்தக் காலத்தில் சாபங்களுக்கு சக்தியே கிடையாது கிருஷ்ணகுமாரி. ஏன் தெரியுமா? தூய்மையானவர்கள் சாபம் பலித்ததாக மட்டுமே கதையுண்டு. தூய்மையற்ற வர்கள் சாபம் பலித்ததாக நான் படித்ததுமில்லை கேள்விப் பட்டதுமில்லை"— மலர்க்கொடி உள்ளே போக திரும்பினாள்.

கிருஷ்ணகுமாரி அழுது கொண்டே குழந்தையுடன் வெளியே வந்தாள்.

ஃ ஃ ஃ

குழந்தையுடன் சில நாட்கள் வசதிக் குறைவான பெண்கள் விடுதியொன்றில் இருந்தாள். பின்பு வயோதிக பெண்மணி யொருத்தியின் வீட்டில் இருந்தாள். பின்புதான் ஆவடியில் உள்ள அந்த தொழிற்சாலையில் வேலைக்குச் சேர்ந்தாள். அங்கு வேலை பார்த்து வந்த தயா என்கிற பெண்ணின் உதவியுடன் அப்பெண் குடியிருந்த வீட்டி

உனக்கு அவளை அடிக்கும் உரிமை கிடையாது. எல்லார் முன்பும் கிருஷ்ணகுமாரியை நீ அவமானப்படுத்துவதை நான் பொறுத்துக் கொள்ள மாட்டேன்.''

ஒரு கையில் குழந்தையை அணைத்துக் கொண்டு, மறு கையில் பெட்டியுடன் நின்ற கிருஷ்ணகுமாரியின் கண்கள் கண்ணீரை வழிய விட்டுக் கொண்டிருந்தன.

பெட்டியைக் கீழே வைத்துவிட்டு கொண்டு வந்திருந்த ராஜினாமா கடிதத்தை நீட்டினாள்.

''என்ன இது''—என்று கேட்டான் ராஜசேகர்.

''ராஜினாமா''

அதை வாங்கி சுக்கல் சுக்கலாக கிழிக்கும்போதுகூட அவன் முகம் புன்னகையுடன்தான் இருந்தது.

அங்கே எதுவுமே நடக்காதது போல.

''நீ இத்தனை நாள் இங்கே இருக்கிறாயே, என் பெற்றோர்களை நேரிடையாகச் சந்தித்ததில்லைதானே''—என்று தன் பெற்றோரை அவளுக்குக் காட்டிவிட்டு.

இது...இது...

அவள் மேலும் அழுதாள்.

அவளிடமிருந்து ரவியைத் தான் வாங்கிக் கொண்டான்.

''இவர்கள் இத்தனைபேரும் உனக்கு எதிரிகள். உன்னை அப்படியே ஒழித்துக்கட்டப் பார்க்கிறார்கள்.''

''உன் கணவர் பெயர் தெரியாது, குழந்தையொன்று பெற்றுக்கொண்டு விட்டாய். ஆகவே நீ நடத்தை கெட்டவளாம்.''

அவனைச் சினத்துடன் பார்த்தாள் அவள்.

''நான் சொல்லவில்லை. இவர்கள் கூறுகிறார்கள்—அண்ணா உட்பட,

நான் உன்னை கல்யாணம் செய்து கொள்ளப் போகி றேன் என்று இவர்களிடம் கூறினேன். இவர்களெல்லோரும் எதிர்க்கிறார்கள்.''

''ராஜசேகர்... அதை உங்கள் பெற்றோர் போலவே நானும் விரும்பவில்லை. அன்றிலிருந்து இன்று இதோ இந்த நிமிஷம் வரை இதையே நான் பலமுறை உங்களிடம் கூறி விட்டேன். ஆனால் நீங்கள்தான் பிடிவாதமாக இருக் கிறீர்கள்.''

''உனக்குத் தெரியாது கிருஷ்ணகுமாரி. வாழ்க்கையில் போராட வேண்டும். போராடவில்லையென்றால் நியாயம் கிடைக்காது— நியாயம் கிடைக்கும் வரையில் நாம் போராடு வோமே, நான் போராடப் போகிறேன்.''

''எனக்குப் போராட மனோவலிமையில்லை.''

''நான் உனக்கு உறுதுணையாக இருக்கிறேன்.''

''அம்மா. என்னை மன்னித்துவிடுங்கள். உங்கள் மகனின் மனதை நான் கெடுக்கவில்லை. எங்கள் இருவருக்கும் இடையே எவ்வித தவறான தொடர்புகளும் இல்லை. வேறு தவறான நோக்கத்துடனும் நான் அவருடன் பழகவும் இல்லை. ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொண்டு நேயத் துடன் பழகுகிறோம். அந்த நேயத்தில் எந்தச் சூழ்நிலை யிலும், அசம்பாவிதம் நேர்ந்து விடவில்லை. எங்களைச் சுற்றிக் கொண்டிருப்பது மிக மெல்லிய புகை மூட்டம்தான் என்றாலும் அந்த புகை மூட்டத்திலிருந்து வெளியே வந்து நாங்கள் ஒருவரையொருவர் நெருங்கியதே இல்லை. என்னை நம்புங்கள். இப்பவும் கூறுகிறேன் இவருடைய எண்ணத் திற்கு நான் உடன்படவும் மாட்டேன்.''

ராஜசேகரிடம் உள்ள குழந்தையை வாங்கிக் கொள்ள கையை நீட்டினாள்.

''நில் கிருஷ்ணகுமாரி. அதற்குள் போய்விடாதே.''

"அவளை எதற்கு நிறுத்துகிறாய்"—ஆத்திரத்துடன் கத்தினான் ஸ்ரீகாந்த்.

"அம்மா, கிருஷ்ணகுமாரி ஒன்று எனக்கு மனைவியாக வேண்டும் அல்லது..."

கிருஷ்ணகுமாரி அவனையே பீதியுடன் பார்த்தாள்.

"இல்லையென்றால்..." சுதர்சன் பதட்டத்துடன் கேட்டார்.

"இல்லையென்றால் என் அண்ணியாக அவளை நீங்கள் இப்பொழுதே உடனே ஏற்றுக் கொள்ள வேண்டும்."

அவன் எவ்வித படபடப்பும் இன்றி தன்னிடமுள்ள குழந்தையை முகத்திற்கு மேலே தூக்கி விளையாடிக் கொண்டிருந்தான்.

கிருஷ்ணகுமாரிகூட இதை எதிர்பார்க்கவில்லை.

'ராஜசேகர்..." என்று ஆத்திரத்துடன் கத்தினார் சுதர்சன்.

"நான் தெளிவாகத்தானே சொன்னேன். உங்களுக்குப் புரியவில்லை. நீங்கள் எல்லாம் நினைப்பது போல கிருஷ்ண குமாரியை அவ்வளவு சுலபமாக வெளியே அனுப்பிவிட முடியாது. உங்களுடைய மூத்தமகன் மற்ற பெண்களிடம் கொண்டிருந்த தொடர்பு போல இல்லை இது. அதனால் தான் கூறுகிறேன். கிருஷ்ணகுமாரி உடனடியாக என் அண்ணியாக இங்கே வரவேண்டும். அதற்கு நீங்கள் ஒப்புக்கொள்ளவில்லையென்றால் குழந்தையுடன் அண்ணன் கைவிட்ட பெண்ணுக்கு தம்பி வாழ்க்கைக் கொடுத்தான் என்று நாளைக்கு ஊரார் பேசும்போது அவமானப்படப் போவது நான் அல்ல. நம் குடும்ப கவுரவம்தான். இன்னும் புரியவில்லை...

அம்மா, இதோ என்னிடம் இருக்கிறதே இந்தக் குழந்தை. யாருடையது தெரியுமா? கிருஷ்ணகுமாரி மூலமாக உங்களுக்குக் கிடைத்த அட்வான்ஸ் பேரன்.

ஸ்ரீகாந்த்துடன் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வாருங்கள் உங்களுக்கு அவகாசம் தருகிறேன்.''

''வாங்க அண்ணி நாம போகலாம்.''

குழந்தையைத் தான் சுமந்தபடி கிருஷ்ணகுமாரி பின் தொடர பங்களாவை விட்டு வெளியேறினான்.

கார் சாமுண்டி இண்டஸ்ட்ரீஸ் விடுதியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது.

# 16

அந்தத் தனியார் மருத்துவமனையில் அவள் படுத்துக் கொண்டிருந்தாள். அவள் அருகில் தொட்டிலில் குழந்தைப் படுத்துக் கிடந்தது.

குழந்தைப் பிறந்து பத்து நாட்களாக அவளைப் பார்க்க யாருமே வரவில்லை. என்ன, ஏது என்று யாரும் வந்து விசாரிக்கக்கூட இல்லை. கிட்டத்தட்ட ஓர் அனாதை போல அவள் இருந்தாள்.

இடையறாது குறிப்பிட்ட ஒரு நர்ஸ் மட்டும் அவளுக்குத் தேவையான உதவிகளை மட்டும் செய்துவிட்டுப் போனாள். அவளைப் பாத்ரூம் அழைத்துப் போவது, குளிப்பாட்டி விடுவது, தேவையான ஆகாரங்களைக் கொடுப்பது,குழந்தையைக் குளிப்பாட்டி பவுடர்போட்டு படுக்க வைப்பது...இவைகளில் எவ்வித தடங்கலும் இல்லை. அந்நேரங்களில் கிருஷ்ணகுமாரி அந்த நர்ஸிடம் கேட்பாள். ''யாரேனும் வந்தார்களா? கல்யாணராமன் வந்தாரா? மலர்க்கொடி வந்தாளா!...''

அவள் வாய் திறந்து பதிலேதும் கூறமாட்டாள் எனினும் தன் கடமைகளை மௌனமாகச் செய்துவிட்டு அறைக் கதவைச் சாத்திக் கொண்டு வெளியேறி விடுவாள்.

நர்ஸிடமிருந்து தனது கேள்விகள் எதற்கும் பதில் வராது போகவே அந்த மௌனத்திற்குப் பின்னால் இருக்கும் உள் அர்த்தங்கள் புரிகிற மாதிரி இருக்கும்.

ஃ ஃ ஃ

பிரசவத்திற்குப் பின் அவள் உடம்பு பூரணமாக குணம் அடைந்து விட்டது. உடம்பில் ஒரு வலுவும், தெம்பும் வந்து நடமாடத் தொடங்கி விட்டாள்.

அன்றுடன் மருத்துவமனை வாசத்திற்கு முடிவு கட்ட எண்ணினாள்.

அயர்ந்து தூங்கிவிட்டு லேசாக கண் விழிக்கும்போது அவள் படுத்திருக்கும் அறைக் கதவைத் திறந்து கொண்டு யாரோ வெளியேறுவது போல இருந்தது,

யாராக இருக்கும்.

நர்ஸா!...டாக்டரா...

குழந்தைத் தொட்டிலில் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தது.

துணி போர்த்தப் பட்டிருந்த அதன் உடம்பின் மேல் அதென்ன கவர்?

படுத்தபடியே கை நீட்டி அதை எடுத்தாள்.

கவர் தடிமனாக இருந்தது!

உறையில் ஒன்றும் எழுதப்படவில்லை.

ஒட்டப்பட்டிருந்த அந்த உறையைப் படுத்தவண்ணம் கவனமாகப் பிரித்தாள்.

உள்ளே!

நூறு ரூபாய் நோட்டுகள்...!

ஃ ஃ ஃ

குழந்தையைத் துணியில் போர்த்தி சுருட்டி எடுத்துக் கொண்டாள். ஒரு கையில் பிளாஸ்டிக் கூடையில் அவளு டைய மிக சொற்பமான சில உடமைகள். தோளில் பிளாஸ்க்.

டாக்டர் மேஜை முன் வந்து நின்றார்.

“நீ போகலாம் கிருஷ்ணகுமாரி. உன்னுடைய நர்ஸிங் ஹோம் செலவுகளையெல்லாம் மலர்க்கொடி இப்பத்தான் கொடுத்து கிளியர் பண்ணிட்டுப் போறா. உனக்கோ, குழந்தைக்கோ, உடம்பில் ஏதாவது காம்ளிகேஷன் என்றால் எப்பொழுது வேண்டுமானாலும் வரலாம் என்று கூறிவிட்டு, அவசர கேஸ் ஒன்றை கவனிக்க எழுந்து உள்ளே போய்விட்டார்.

அந்த நர்ஸ் கண்ணில் படவேயில்லை.

ஃ ஃ ஃ

குழந்தையுடன் கிருஷ்ணகுமாரி நர்ஸிங்ஹோமை விட்டு வெளியே வந்தாள்.

அந்த நர்ஸிங் ஹோமிற்கு வந்த போது எப்படிப்பட்ட சூழ்நிலையில் எப்படிப்பட்ட நிர்பந்தம் காரணமாக வந்தோம் என்பது அவளுக்குத் தெரியும்.

அவளாக விரும்பித்தான் வந்தாள்.

மலர்க்கொடி அவளைத் தன்னுடைய நிர்பந்தம் காரணமாகத்தான் கொண்டு வந்து விட்டாள்.

# 17

இப்பொழுது மலர்க்கொடியைத் தேடிக்கொண்டு போகலாமா? போகத்தான் வேண்டும். அங்கே போய் அவளிடம் சில கேள்விகளைக் கேட்டுவிட்டு வர வேண்டும்.

அவளுடைய அருவெறுப்பான குணத்தை இரண்டு வார்த்தைகளில் சாடி விட்டு வரவேண்டும். எப்படியும் இனி அவளுடைய தயவு கிடைக்கப் போவதில்லை.

ஆட்டோவை அழைத்தாள்.

''டிரைவர். அவசரமில்லே, கொஞ்சம் மெதுவாகவே போ. நான் கைக்குழந்தையுடன் இருக்கிறேன்.''

ஆட்டோ டிரைவர் ஏறி உட்கார்ந்து அதைக் கிளப்பும் வேகத்தைப் பார்த்து விட்டு கூறினாள் கிருஷ்ணகுமாரி,

ஆட்டோவை அனுப்பிவிட்டு குழந்தையுடன் கீழே இறங்கினாள்.

மலர்க்கொடியின் வீட்டு முன்வந்து நின்று அழைப்பு மணியை அழுத்தினாள்.

மலர்க்கொடியே கதவைத் திறந்தாள்.

குழந்தையும் கையுமாக கிருஷ்ணகுமாரி வந்து நிற்பதை பார்த்துவிட்டு சில கணங்கள் தயங்கியவள்,

''உள்ளே வா... என்ன வேண்டும்'' என்று கூறிக் கொண்டே உள்ளே திரும்பினாள்.

அந்த இரண்டு வார்த்தைகளிலேயே அவளுடைய அந்த நேரத்து மனோபாவத்தை மட்டுமின்றி இனி அவள் எப்படியிருக்கப் போகிறாள் என்பதையும் தெரிந்து கொண்டவள்—

''உன் உதவிக்கு நன்றி சொல்லிவிட்டுப் போக வந்தேன்.''



''எனக்கு நன்றி சொல்வது இருக்கட்டும். இக்குழந்தையைப் பெற்றுக் கொண்டதன்முலம் உனக்கொரு நிரந்தரமான பழியையும் நிம்மதியில்லாத வாழ்க்கையையும் தேடிக் கொண்டிருக்கிறாய். நீ மனது வைத்திருந்தால்...''

''வேண்டாம். திரும்ப திரும்ப அதையே ஏன் கூறுகிறாய் நீ சொல்கிற அந்த காரியத்திற்கெல்லாம் தான் நான் அப்பொழுதே உடன்படவில்லையே.''

"நீ உடன்படவில்லையே தவிர. உன்னை வேறுவகையில் தானே வழிக்கு கொண்டு வர முடிந்திருக்கிறது."

"நீயும் ஒரு பெண்தான் மலர்கொடி."

"அதனால் தான் சொன்னேன், இதைப் பெற்றுக் கொள்ளாதே என்று. இரண்டு மூன்று மாதங்களாகும் போதே கலைத்துக் கொண்டு விடு என்று—நீ கேட்கவில்லை."

"உன்னிடம் நான் ரொம்ப அதிகம் எதிர்பாத்து ஏமாந்து விட்டேன். எனக்கும், ஸ்ரீகாநதுக்கும் நடுவில் ஒரு நல்ல தோழி போல செயல்பட்டு எங்களை இணைத்து வைக்க முயற்சிப்பாய் என்று எதிர்பார்த்தேன். கடைசியில் மோசம் செய்து விட்டாய்."

மலர்க்கொடி சிரித்தாள்.

"மோசம் செய்து விட்டேனா! உன்னுடைய சின்ன மனசிலேதான் எவ்வளவு பெரிய இமாலய ஆசை. அத்தனை பெரிய ஆசையை சுமந்து கொண்டு தான் ஸ்ரீகாந்துடன் பழகினாயா? அடிபைத்தியமே! அது கொம்புத்தேன் கிருஷ்ண குமாரி. நாமெல்லாம் அதை எட்ட முடியாத முடவர்கள். உனக்குத்தான் அவரை அடைய வேண்டுமென்று ஆசையா! எனக்கு இல்லையா? அப்படி அடைய முடிந்தால் அவனை உன்னுடன் பழகவும் படுக்கவும் அனுமதித்திருப்பேனா...?

அவன் ஒரு பெண் லோலன். பணக்காரன், ஒரு பெண்ணை அனுபவிக்க வேண்டுமென்பதற்காக அவன் எவ்வளவு வேண்டுமானாலும் செலவு செய்வான். இதைப் பொறுத்தவரையில் அவன் ஒரு இரவு வழிப்போக்கன்போல.

எப்படியோ படித்தாய், ஒரு வேலையில் இருத்தாய் நாம் இருவரும் சிநேகிதிகள் ஆனோம். என்னுடைய தனி வீட்டிற்கு குடி வந்து வாடகையைப் பகிர்ந்து கொண்டாய். நீ என்னுடன் தங்க வரும்போதே ஸ்ரீகாந்த் எனக்கு நண்பர். நண்பர் என்றால் எல்லா வகையிலும்தான். என்னுடைய

தோழி நீ. பிளாஸ்டிக் கம்பெனியில் வேலைபார்த்து பின் அதில் உண்டான தொழிலாளர் போராட்டம் காரணமாக வெளியேறி வேலைக்காக அலைந்து கொண்டிருந்த உனக்கு இருக்க இடம் கொடுத்தேன். உனக்கு வேலை போய்விட்டது. அடுத்த வேலை தேடிக் கொள்ளும்வரை உனக்கொரு ஆதரவு தேவை!

ஸ்ரீகாந்தின் பார்வையில் அந்த ஆதரவு இருந்தது, உனக்கும் அது தேவைபட்டது.

ஸ்ரீகாந்த் என் நண்பன் என்று தெரிந்ததும் நீஅவனுடன் நெருங்கிப் பழகினாய். நான் தடுக்கவில்லை. ஏன் தெரியுமா? அதில் எனக்கு பொருளாதார ரீதியில் லாபம் இருந்தது. என்னைப் பொறுத்தவரையில் அவன் எனக்கு மட்டுமல்ல. நம் போன்ற சாதாரண ஏழைகளுக்கெல்லாம் சத்தியமாகக் கிடைக்க மாட்டான். எனவே அவனுக்காக நான் ஒருநாளும் கனவு கண்டதில்லை. அவனிடம் இன்னொரு விசேஷம் என்ன தெரியுமா? அவன் எந்தப் பெண்ணையும் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று பொய் வாக்குமூலம் கொடுத்து ஏமாற்றுவதில்லை, அவன் குடும்பத்தில் அவனுக்கு கட்டுப் பாடுகள் அதிகம். அவன் பெரிய பணக்காரன். உன்னுடன் பழக அனுமதித்தேன். அதற்கு தேவையான சூழ்நிலைகளை யும் நான் உண்டாக்கிக் கொடுத்தேன். எல்லாம் வாஸ்தவம் தான், இதனால் என் மேல் இருந்த அவன் காதல் கொஞ்சம் கூடக் குறையவில்லை. உன்னுடன் சற்று அதுகமாகவே நெருங்கிப் பழகினான் என்றாலும் என்மேல் இருந்த அவன் காதல் போலித்தனமாகி விடவில்லை. உன்னால் தான் எனக்கு இவள் கிடைத்தாள் என்று என்னிடம் கூறி தன் உற்சாகத்தைக் கொட்டியிருக்கிறான். அந்த நேரங்களில்கூட உன்னை அவன் கல்யாணம் செய்து கொள்ளப் போவதாக என்னிடம் கூறினதேயில்லை, அவன் அப்படியெல்லாம் அவன் இஷ்டப்படி இவ்விஷயங்களில் வாக்குறுதிகள் தரமுடியாது”—என்றாள்.

"பொய். அவர் என்னிடம் அந்த வாக்குறுதி தந்தார். அதன்பின்தான் நான் அவருடன் மனம் விட்டு பழக ஆரம்பித்தேன். இதை ஒரு முறை உன்னிடம் கூட நான் கூறியிருக்கிறேன். அப்பொழுது அதை நீ லட்சியம் செய்யாமல் போயிருக்கிறாய். ஒரு வேளை அவர் அப்படிச் சொன்னதில் உனக்கு பொறாமை கூட இருந்திருக்கலாம்."

# 18

மலர்க் கொடியின் வீட்டின் ஹாலில் தோளில் சுமந்த குழந்தையுடன் நின்ற வண்ணம் பேசினாள்.

"உட்கார் ஏன் நிற்கிறாய். இனி நாம் அதிகம் சந்தித்துக் கொள்ள முடியாது. நாம் பிரியும்போது நல்ல சிநேகிதிகளாகவே பிரிவோம். நீயும் என் வார்த்தைகளையும், ஸ்ரீகாந்த் வார்த்தைகளையும், மீறி இக் குழந்தையைப் பெற்றுக் கொண்டு விட்டாய். இனி இவனை வைத்துக் கொண்டு நீ எப்படி வாழப் போகிறாய்- கேட்பவர்களுக்கு என்ன பதில் சொல்லப் போகிறாய்— என்று எண்ணிப் பார்த்தேன். உன் மேல் எனக்கு அனுதாபத்தைவிட ஆத்திரம் தான் அதிகமாகியது. எனக்கென்ன அதைப் பற்றி? இனி அதெல்லாம் உன் பொறுப்பு" என்றவள் கிருஷ்ணகுமாரியை நேரிடையாகப் பார்த்து எச்சரிக்கை செய்து போல பேசினாள்.

"இவள் என்ன இவ்வளவு கடுமையாக பேசுகிறாளே, மனிதாபிமான மற்று இருக்கிறாளே என்று நீ நினைத்துக் கொண்டால் அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை, ஸ்ரீ காந்தின் பெயரையோ, அல்லது என் பெயரையோ வெளியில் பிரஸ்தாபித்து ஏதேனும் புதிய சதித் திட்டத்திற்கு நீ தயாராவது தெரிந்தால் அடுத்த நிமிஷம் நீயும் உன் குழந்தையும் பழி வாங்கப் படுவீர்கள். அப்படிப்பட்ட

உன் செய்கைக்கு நீ மிகப்பெரிய அபராதம் அனுபவிக்கும் படியாகி விடும்.' அப்படியொரு இக்கட்டான நிலைமையை நீ உண்டாக்கினால் அதை எப்படி சமாளிப்பது என்று எங்களுக்கும் தெரியும்.''

''மலர்க்கொடி''—என்று உடல் குலுங்க அழுதாள் கிருஷ்ணகுமாரி.

''நான் ஸ்ரீ காந்தின் ஆள்தான். எனக்கு அந்தப் பணக்காரனின் தயவு எப்பொழுதும் வேண்டும். இன்றும் அவனுடைய உதவி எனக்குக் கிடைக்கிறது. நீ நினைக்கலாம் இவள் என்ன ரொம்ப யோக்கியமானவளா என்று. உண்மைதான், இது ஒரு மாதிரியான நெறிதவறிய வாழ்க்கையே. வருத்தமாகத்தானிருக்கிறது. அதைப் பற்றியெல்லாம் நான் இன்று அதிகம் வருத்தப்படுவதில்லை. ஏன் இப்படியானேன் எந்தச் சூழ்நிலை என்னை இப்படி மாற்றியது என்பதெல்லாம் எனக்கே அக்கறையில்லாதவைகள்,''

''உனக்கு உன் வாழ்க்கை முறை பற்றி ஓர் அலட்சியம் இருக்கலாம் மலர்க்கொடி. நான் அப்படி இருக்க முடியாது. உன்னைப் போல என் வாழ்க்கையையும் திசை மாறிப் போன வாழ்க்கையாக மாற்றிக் கொள்ள நான் விரும்பவில்லை. உனக்கு உன் வழி பிடித்திருந்தால் அப்படியே இரு. நான் அவருடன் பழகியிருந்தால் அவருடைய ரகசிய அந்தப்புரத்தில் உன்னைப்போல நானும் ஓர் அபிசினிய அடிமையாக, தேவைக்கேற்ப மதுவை ஊற்றி கிண்ணத்தை அவர் உதட்டில் வைத்து உறிஞ்சிக் குடிக்கும் வரை பிடித்துக் கொண்டிருப்பேன். ஆடு என்கிறபோது ஆடுவேன் படு என்கிறபோது படுப்பேன்...''

கிருஷ்ணகுமாரி பேசுவதைக் கேட்டு மலர்க்கொடி நகைத்தாள்.

''ஒரு கட்டுப்பாடற்ற, சொந்த பந்தங்கள் இல்லாத அந்த அடிமை வாழ்வில் இருக்கிற சுதந்திரத் தன்மையின் சுகம் பற்றி உனக்கென்றும் தெரியாது புரியவும் புரியாது.''

''எனக்குப் புரியவே வேண்டாம். நான் பெண்மையின் அர்த்தத்துடன் வாழ விரும்புகிறேன். வாழ்வின் பிரச்சினைகளை எதிர் கொண்டு வெற்றி கொள்ள முயற்சிக்காத கோழை நீ. அதுதான் இப்படிப் பேசுகிறாய். நான் அதை வென்று காட்டுவேன்'' என்றாள் கிருஷ்ணகுமாரி.

''பேசுவதற்கு இனிமையாகவும் உற்சாகமாகவும் இருப்பவை வாழ்க்கைக்கு பொருந்தி வருவதில்லை''

''நான் வென்று காட்டுகிறேன்.''

என்னால் உனக்கு வாழ்த்துக் கூற முடியாது. என்னுடைய ஆழ்ந்த அனுதாபங்களை இப்பொழுதே கூறி விடுகிறேன். நீ போகலாம். போகுமுன் மீண்டும் நினைவு படுத்துகிறேன். எந்த இடத்திலாவது ஸ்ரீகாந்த் பெயருக்கு இழுக்கு தேட முயற்சித்தால் உன் எதிர்காலம் உன் மகனின் எதிர்காலம் எல்லாம் சூனியமாகிவிடும். அந்நேரங்களில் உனக்கு நான்தான் முதல் எதிரி. ஏற்கனவே இந்த விஷயத்தில் நீ காட்டிய பிடிவாதத்தால் உன் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டது. நினைவிருக்கும் என்ன நினைக்கிறேன்'' என்றான் வன்மத்துடன் சிரித்தபடி.

''நிச்சயமாக நினைவிருக்கும். கர்ப்பிணியான என்னை மோட்டார் படகில் அலை கடலுக்கு நடுவில் கடத்திக் கொண்டு போய் நடுக்கடலில் தள்ள முயற்சித்த அந்த மகத்தான கைங்கர்யத்தை எப்படி மறக்க முடியும். வயிற்றில் வளரும் கருவுக்கும் ஸ்ரீ காந்துக்கும் தொடர்பு படுத்திப் பேசமாட்டேன் என்று சத்தியம் செய்து கொடுத்த பின்பு தானே உன் ஆட்கள் என்னை உயிரோடு விட்டார்கள்.''

லேயே ஓர் அறையை தனக்காக கேட்டு வாங்கிக் கொண்டு வாடகையை பகிர்ந்து கொண்டாள்.

# 19

தயாவின் நட்பும் தயவும் அவளுக்குப் பின்பு பேருதவியாக அமைந்தது.

தயாவிடம் தன் வாழ்க்கையின் வீழ்ச்சி பற்றி எதையும் மறைக்காமல் கூறினாள், இதனால் அவள் நட்பு மேலும் இறுக்கமாகியது.

ஆவடியில் உள்ள அந்த தொழிற்சாலையின் உத்தியோகமும் நிரந்தரமில்லாமல் ஓர் ஊசலாட்டத்திலேயே இருந்தது, திடீர் வேலை நிறுத்தமும், கதவடைப்பும், ஊர் வலமும். அவளை அதிகம் பாதித்தது.

அந்த நேரத்தில் தான் மைசூர் சாமுண்டி இண்டஸ்டரீஸ் தக்கைக் கல் தொழிற்சாலைக்கு அனுபவமுள்ள நபர்கள் தேவையென்ற விளம்பரத்தைப் பார்த்தாள்.

அந்த விளம்பரம் வந்த அதே தினசரியில் அதே விளம்பரத்திற்குக் கீழேயே வெளி நாடு செல்லும் ஸ்ரீகாந்துக்கு வாழ்த்துக் கூறும் தம்பி ராஜசேகரின் விளம்பரமும் வந்திருந்தது.

ஃ ஃ ஃ

வெளி நாடு செல்லும் ஸ்ரீகாந்துக்கு வாழ்த்துக் கூறும் அந்த இரண்டாவது செய்தியைப் பார்த்த பின்புதான் அவள் மனதில் அந்த விபரீத ஆசை துளிர்விட்டது. எப்படியாவது இந்தக் கம்பெனிக்குள் நுழைந்து வேலை வாங்கி விடவேண்டும். அண்ணன் ஸ்ரீ காந்துக்கே இன்னும் திருமணமாகவில்லை என்கிற போது வாழ்த்து செய்தி கொடுத்

திருக்கும் இளைய சகோதரன் ராஜசேகருக்கு நிச்சயமாக திருமணமாகியிருக்காது. அவனை நேசிப்பது போல நேசிக்க வேண்டும். ஓர் எல்லைக்குள் அவன் நட்பை அணையிட்டு நிறுத்திவைத்துக் கொள்ள வேண்டும். முடிவில் அவனையே ஒரு ஆயுதமா பயன்படுத்திக் கொள்ள வேண்டும் அண்ணனைப் பழிவாங்க இதுதான் சரியான வழியாக அவளுக்குப் பட்டது.

அவள் போட்ட திட்டம் ரொம்ப சுலபமாக நிறைவேறிக் கொண்டிருந்தது உண்மைதான். ஆனால் ராஜசேகரின் மனிதாபிமானத்தின் விஸ்வரூபத்தின் நிழலில் அவளுடைய வன்மம் பனியாக உருகிவிட்டபோது அவள் தடுமாறித்தான் போனாள்.

ஒரு தீயவனை பழிவாங்க ஒரு நல்லவனை ஏமாற்றுவதா?

அது சரியான உக்தியாகப் படவில்லை அவளுக்கு.

ஆரம்பத்தில் அவனைக் கவர அவள் மேற்கொண்ட முயற்சிகள் எல்லாம் அப்படிப் பட்டவையே.

மனதிற்குள் ஒரு மூலையில் ஸ்ரீகாந்த் மேல் சினம் எரிமலையாக கனன்று கொண்டிருந்த போதும் ராஜசேகரின் நல்லிதயம்தான் அவளைச் சுட்டது.

அண்ணனுக்கும் தம்பிக்கும்தான் எத்தனை வித்தியாசம்.

இவன் நியாயத்தின் நூலிழையில் ஒரு நீதிபதியைப் போல நிற்பவன்,

தொழிலாளர் பிரச்சினை. நிர்வாகமுறை எல்லாவற்றிலும் நியாயங்களைக் கடைபிடித்து நல்லபெயர் எடுத்திருக்கிறான். தார்மீக நினைவுகளை தன் மேல் ஓர் ஆடையாக போர்த்திக் கொண்டிருப்பவன் என்கிற உண்மைகள் தெரியத் தெரிய தனது அடிப்படை விரோத குணத்

"கணவன்"

"பாவம் ஸார்! அவள் ஒரு கயவனால் ஏமாற்றப்பட்டவள் என்பது மட்டும் தெரியும். அவன் யார் என்று அவள் சொல்லவில்லை. இது சேலத்தில் இருக்கும் அவளுடைய பெற்றோர்களுக்கு தெரியாது. ஆமாம்... நீங்கள் அவளுக்கு உறவா?"

"இல்லை. உங்களைப்போல் ஒரு நட்புதான். என் அக்கறைக்குக் காரணம். அவளை இந்த நிலைக்கு ஆளாக்கியவனைப் பற்றி ஏதேனும் தெரியுமா?"

"தெரியாது. அவள் சொல்லவும் இல்லை. என் சகோதரன் ஒரு தொழிற்சங்கவாதி. அவனுக்குத் தெரிந்தால் இம் மாதிரி விஷயங்களில் ரொம்ப வேகத்துடன் தலையிடுவான். பாதிக்கப்பட்டவர்களுக்காக களத்தில்இறங்கினால் இரண்டிலொன்றைப் பார்த்துவிட்டுத்தான் திரும்புவான். அவனிடம் இதைச் சொல்லி அவன் மூர்க்கத்துடன் தலையிட்டு விவகாரத்தை மேலும் பெரிது படுத்தி விடுவானோ என்கிற பயம் அவளுக்கு. இதில் ஒரு பெரிய இடத்துப் பிள்ளை சம்பந்தப்பட்டிருக்கிறான் என்பதை மட்டும் கூறியிருக்கிறாள். நீங்கள் இதில் இவ்வளவு அக்கறை காட்டக் காரணம்?"

"அவளுக்கு நியாயம் கிடைக்கச் செய்ய வேண்டும் என்கிற அக்கறைதான். நான் கடவுளை நம்புகிறவன். அதர்மங்களை என்னாலும் சகித்துக் கொள்ள முடியாது. அவள் உங்களிடம் வேறு யாரைப் பற்றியேனும் கூறியிருந்தால் தயவு செய்து கூறுங்களேன்.

"மலர்கொடி என்கிற பெண் ஒருத்தியின் சினேகிதத்தால் தான் தனக்கு இப்படிப்பட்ட நிலைகள் உண்டானதாக கூறியிருக்கிறாள். அவள் ஒரு நாகம் மாதிரி அவளுக்கு. சிட்டியில் ஏராளமான ஆட்கள் உண்டாம்."

மலர்கொடி என்ற பெயரைக் கேட்டவுடனேயே ராஜசேகரனின் உடம்பு உஷ்ணமாகி விட்டது.

ஏதோ ஒரு சம்பிரதாயத்திற்குக் கேட்கிற மாதிரி அவள் இருப்பிடத்தைப் பற்றிக் கேட்டுக் கொண்டே எழுந் தான்.

''நீங்கள் இப்பொழுது அவளைப் பார்க்க போகிறீர் களா! தயவு செய்து அவளைப் பார்க்க வேண்டாம். அவளால் கிருஷ்ணகுமாரியின் உயிருக்கு ஏற்கனவே இரண்டு தடவை ஆபத்து உண்டாகிவிட்டது.''

''இனி எந்த சக்தியும் ஒன்றும் செய்ய முடியாத இடத் தில் கிருஷ்ணகுமாரி இருக்கிறாள்.''

''அப்படியானால்... அப்படியானால்...'' தயா பதட்டத் துடன் கேட்டாள்.

''அவளுக்கு ஆபத்து ஒன்றுமில்லை எவ்வித ஆபத்தும் இனி அவளை ஒன்றும் செய்யாது. நீங்கள் நிம்மதியுடன் இருக்கலாம்.''

''ரொம்ப நன்றி சார் அவள் ரொம்ப நல்ல பெண்சார் அவளை யாரோ ஏமாற்றி விட்டார்கள். அவள் அப்படி யெல்லாம் நெறி தவறுகிற பெண்ணே அல்ல. மிகச் சிறந்த புத்திசாலிகளும், ரொம்பவும் சாத்வீகிகளும் கூட ஏமாற்றப் படுகிறார்கள் என்பதற்கு கிருஷ்ணகுமாரி ஓர் உதாரணம்.''

ராஜசேகர் எழுந்தான்.

அவளிடம் சிரித்த முகத்துடன் விடை பெற்றானே யன்றி காரில் வந்து உட்கார்ந்து அதை ஸ்டார்ட் செய்த அடுத்த நிமிடமே அந்த புன்னகை மறைந்து முகத்தில் உக்கிரம் வந்து உட்கார்ந்து கொண்டு விட்டது.

சாந்தோமில் உள்ள மலர்க்கொடியின் வீட்டின் முன் தன் காரை நிறுத்தி விட்டு வீட்டிற்குள் நுழைந்தான். முன் கதவுகள் உட்பக்கம் தாழிடப் பட்டிருந்தது.

கதவைத்தட்ட அவனுக்கு இஷ்டமில்லை. ஆக்ரோஷத்துடன் அதை ஒரு மோது மோதினான்.

அது திறந்து கொண்டது, வேகமாக உள்ளே நுழைந்தான். உள் அறையொன்றின் கதவை அவன் எவ்வித முன் அறிவிப்புமின்றி மோதித் திறந்த போது.

மலர்க்கொடி ஒரு கல்லூரி வாலிபனுடன் இருந்தாள்.

அவன் அடுத்த விநாடியே திரும்பி ஹாலுக்கு வந்து விட்டான்.

நீண்டநேரம் உள் அறையில் பேச்சும், சிரிப்பும்...

பேண்ட் அணிந்து சட்டைப் பித்தான்களைப் போட்ட வண்ணம் வெளியே வந்த அந்த யாரோ,—உள் பக்கம் திரும்பி, மலர் உனக்கொரு புதிய கிராக்கி காத்துக்கிட்டு இருக்கு என்றவன் வேகமாக வெளியேறி விட்டான்.

வெளியேறியவனை வெறுப்புடன் பார்த்துக் கொண்டே உள்ளே நுழைந்தான்.

ராஜசேகரைப் பார்த்து விட்டு அதிர்ச்சி அடைந்தாள். அதை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை.

"அடடே சாமியார் வந்திருக்கு. எங்கே என்னைத் தேடிகிட்டா வந்தே. நீயும் மாறிபோயிட்டியா. எனக்குத் தெரியும்...வா... நீ வந்ததில் எனக்கு ரொம்ப சந்தோஷம்.'

அவள் வெட்கமின்றி படுக்கையைக் காட்டினாள்.

"நான் உன்னுடன் படுக்கையில் இருக்க வரவில்லை மலர்க்கொடி"

"பின்னே எதுக்கு வந்தே. பார்த்துட்டுப் போக மட்டும் வந்தியா! செத்த முன்னாடி பார்த்திருப்பியே ஒரு "நீலப் படம்"—என்றாள் சிரிப்புடன்.

"ச்சி நீயும் ஒரு பெண்ணா"

இதுவரையில் என் படுக்கைக்கு வந்தவன் எவனுக்கும் இந்த சந்தேகம் வரலை, ஏன் அண்ணனே கூட இப்படிக் கேட்டதில்லை,''

''மலர்க்கொடி அனாவசியமா என்னைச் சீண்டாதே'

உன் அண்ணனைப் போல ஒரு முரடு எனக்குத் தெரிஞ்சு யாருமில்லை. அதுக்கே பயப்படலை. உனக்கா பயப்படப் போறேன். நீ ஒரு பசுமாடு.''

அவன் அவள் அருகில் வந்து நின்று அவள் கழுத்தைப் பிடித்தான்.

''நடத்தை கெட்டவளே! என் அண்ணனைக் கெடுத்தவளே நீ தானே!''

''பணக்கார பசங்களை யாரும் கெடுக்க வேண்டாம் ராசா அவங்களேதான் தானா கெடுவாங்க. நீயும்தான் இதோட பல தடவை வந்து சப்தம் போட்டுட்டே என்னையும் மிரட்டியிருக்கே. நான் என்ன செய்யட்டும்—என்னை சப்தம் போட்டுட்டு நீ அப்பால போக வேண்டியது தான். உன் அண்ணன் சிரிச்சுகிட்டே இன்னொரு கதவை திறந்துகிட்டு உள்ளே வருவான் என்னைப் பாடாய் படுத்திட்டு போயிருவான். உன் அண்ணன் ஸ்ரீ காந்த் வர ஆரம்பித்த, பின்னாலதான் என் பணகஷ்டமும் கணிசமா குறைஞ்சுது.'

''நீ எக்கேடு கெட்டுவேனாபோ, அந்த அப்பாவிப் பெண்ணை கிருஷ்ணகுமாரியை நீயேன் ஏமாத்தினே!''

''ஓ...நீ அந்தகதைக்கு வரியா! அது ராஜா...''

தன் கழுத்தில் இருந்த அவன் கரத்தை விடுத்துக் கொண்டு புடவையைக் கட்டிக் கொண்டாள்.

''ரொம்ப கோபமா இருக்கே போலத் தெரியுது. ஆத்திரப்படாதே... உட்கார் அந்த வீணாப் போன நாயபக்தி நீயேன் மனசைக் கெடுத்துக்கறே.''

அவன் அங்கே உட்கார்ந்தான்.

"இதைப்பாரு ராஜா" என்னைப்பத்தி உனக்கு நல்லா தெரியும். உன்னைப் பத்தி எனக்கும் நல்லா தெரியும். உனக்கும் உன் அண்ணனுக்கும் உள்ள வித்தியாசம் வானத்துக்கும் பூமிக்கும் உள்ள வித்தியாசம். உன்னோட அண்ணனை வேறு காரணத்துக்காக எனக்குப் பிடிக்குதுன்னா, உன்னை உன்னோட நேர்மையான அப்பழுக்கு இல்லாத குணத்துக்காக பிடிக்கும்."

"அந்தக் கதையெல்லாம் இருக்கட்டும் கிருஷ்ணகுமாரியை உனக்கெப்படித் தெரியும்?"

"எப்படித் தெரியும்?"

"எப்படியோ தெரியும். அதெல்லாம் விவரமா சொல்ல முடியாது. சேலத்திலேயிருந்து இங்கே அவங்க சொந்தக்காரங்க வீட்டுக்கு வந்தப்ப என் கூட பழக்கம் உண்டாச்சு. காலேஜிலே படிக்கணும். அது இதுன்னு சொல்லிகிட்டு இருந்தா. நான் உதவினேன். அப்ப உன் அண்ணனையும் பழக்கம் பண்ணி விட்டேன். நீயே சொல்லு ஒரு பொண்ணுக்கு எவனாவது வெறுமனே பழகறத்துக்கு மட்டும் பணம் தருவானா?"

"அதுக்காக அவளை ஏமாத்தரதா?"

"நம்ம அகராதியிலே, ஏமாத்தரது ஏமார்ரது, பொய் சொல்றது. மோசடி செய்யறது எல்லாத்துக்கும் அர்த்தமே இல்லே ராஜா. அதெல்லாம் ரொம்ப சகஜம். அதையெல்லாம் பெரிசா எடுத்துக்கிட்டா பொளப்பு நடக்காது."

"நீயும் அண்ணனுமா சேர்ந்து அவளை ஏமாத்தியிருக்கீங்க."

"சரி, அப்படியேதான் வச்சுக்க. அவ பொளைக்கத் தெரியாத மூதேவி. வயித்திலே வந்தப்ப நானும் உன்

அண்ணனும் எவ்வளவோ சொன்னோம். அவ கேட்கலை. குழந்தையைப் பெத்துக்க போறேன்னு பிடிவாதமா சொல்லிட்டுப் போயிட்டா: அடிபோடி கண்ணகியேன்னு வெளியே வெறட்டிட்டோம். குழந்தையைப் பெத்துகிட்டு இங்கே வந்து அழுதா. போடி வெளியேன்னு சொல்லிட்டேன்.''

''நீயும் ஒரு பெண்தானே! எப்போ அந்தமாதிரிப் பெண் இல்லை என்று தெரிந்ததோ அப்பவே அவளுடைய பெண்மைக்கு சேதமில்லாமல் வெளியே அனுப்பியிருக்க வேண்டியதுதானே!''

''உன் அண்ணன் விடுவானா? அவளுக்கு ஆயிரம் ஆசை வார்த்தைகளைச் சொல்லி வளைச்சுப் போட்டுகிட்டான். அவங்க சந்திப்புக்கு என் வீட்டை அப்பப்ப கொடுத்தேன். ஆமா... அவளைப்பத்தி இவ்வளவு வெவரமெல்லாம் கேக்கிறியே. அவளை எப்படி ஒனக்குத் தெரியும்?''

அவன் அவளுக்கு நேரிடையான பதிலைக் கூறவில்லை.

''குழந்தையும் கையுமா ரெண்டு மூணு எடத்திலே வேலைக்கு அலைஞ்சு பிறகு எங்கேயோ சேர்ந்துகிட்டதா கேள்விப் பட்டேன். என்னைப் பொறுத்த வரையிலே அது நல்ல பொண்ணு. பணத்துக்கு பல் இளிக்கற ''கேஸ்'' இல்லை.

அவன் எழுந்தான்.

இரு. எதானும் சாப்பிட்டுப்போ. அண்ணன் வெளி நாட்லேருந்து எப்ப வரது? என்னமோ இப்ப நடந்தமாதிரி இருக்குது. கிருஷ்ணகுமாரி வந்ததும் பின்னால வயிறும் பிள்ளையுமா அழுததும் பிறகு குழந்தையைத் தூக்கிக்கிட்டு வந்ததும்...''

ராஜசேகர் அவள் பேசிக் கொண்டிருக்கும்போதே வெளியே வந்துவிட்டான்.

# 21

"உங்கள் குழந்தை ரவியின் தகப்பன் என் அண்ணன் என்கிற உண்மையை நான் என்று தெரிந்து கொண்டேனோ அன்றிலிருந்தே என் உள்ளத்தில் அண்ணியாக மட்டுமே உங்களை எண்ணிக் கொண்டிருக்கிறேன். உங்களை ஏமாற்றவும் உங்களிடமிருந்து அந்த ரகசியத்தை உங்கள் வாய்மூலமாக வெளியே கொண்டுவரவும் சில காலம் நடித்துக் கொண்டிருந்தேன். ரவிக்கு உடம்பு சரியில்லை. உடனே புறப்பட்டு வரவும் என்கிற அந்த தந்திதான் உங்களைப்பற்றி ஆராய என்னைத் தூண்டியது.

மலர்க்கொடிக்கும் என் அண்ணனுக்கும் உள்ள தொடர்பு எனக்குத் தெரியும். அவள் வாழ்க்கையை அப்படியே அமைத்துக் கொண்டவள் புனிதமான வாழ்க்கைப் பற்றிய கனவுகளோ எதிர்பார்ப்புகளோ இல்லாதவள் அவள். தயாவிடம் போனபோதுதான் நீ மலர்க்கொடியிடம் இருந்த செய்தி கிட்டியது. என் சந்தேகம் ஊர்ஜிதமான இடமும் அதுதான்.

என்று நீங்கள் என் உள்ளத்தில் அண்ணியாக இடம் பெற்றீர்களோ, அன்றிலிருந்து உங்களை எல்லா மட்டத்திலும் தனி அந்தஸ்து கொடுத்து உட்கார வைக்க திட்டமிட்டேன். தனி உத்தியோக உயர்வு... தனி பங்களா... என்றவன் கண்கலங்க சமீபகாலமாக நான் உங்களிடம் ரொம்ப உணர்ச்சிவசப்பட்டுப் பேசியதெல்லாம் உண்மையை வரவழைக்க செய்த நடிப்பு...?' என்றவன் நிதானமாக கெஞ்சுவது போலப் பேசினான்.

"என்னுடன் கொஞ்சம் ஒத்துழையுங்கள். அவனுக்கு ஏதேனும் ஒரு வகையில் பாடம் புகட்டியாக வேண்டும். அவனுடைய நெறி தவறிய வாழ்க்கைப் போக்கை உடனடியாக மாற்றியாக வேண்டும். இப்பொழுது ஏற்பட்டிருக்கிற

சந்தர்ப்பம் போல வேறு ஒரு சந்தர்ப்பம் இனி வரப்போவ தில்லை''—என்றான்.

''நான் என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?''

உங்களை நான் ஒன்றும் செய்யச் சொல்லவில்லை. அண்ணாவின் உத்தி வேறு மாதிரியாக இருக்குமேயானால் நான் அங்கே சொல்லிவிட்டு வந்ததை ஊர்ஜிதம் செய்கிற மாதிரி என்னுடன் கொஞ்சம் நடிக்க வேண்டும். அவ்வளவு தான். உங்களுக்கு நடிக்க இஷ்டமில்லாவிட்டாலும் பரவா யில்லை. நான் சொல்வதற்கு மறுப்புக் கூறாமல் மௌனமாக வேனும் இருந்து விடுங்கள். மற்றதை நான் பார்த்துக் கொள்கிறேன்.

நான் பிரயோகித்துவிட்டு வந்த அஸ்திரம் அவர்கள் அத்தனை பேரையும் இப்பொழுது திணற அடித்துக் கொண் டிருக்கும். அவன் இப்பொழுது ஒரு கிடிக்கித் தாக்குதலுக்குள் வகையாக சிக்கிக் கொண்டிருக்கிறான். அவனுடைய செய்கைகளைக் கண்டும் காணாமலும் இருந்த என் பெற் றோர்களும் இப்பொழுது ஒரு நல்ல முடிவுக்கு வந்தேயாக வேண்டும்... தட்டிக் கழிக்க முடியாது'' —அவன் பேசிக் கொண்டிருக்கும்போதே வாசலில் கார் வந்து நிற்கும் ஒலியும் காரின் கதவு திறந்து மூடும் ஒலியும் கேட்டது.

காரைவிட்டு இறங்கிய ஸ்ரீகாந்த் முன் வராண்டாவில் தயங்கியபடி நின்றான்.

குழந்தை ரவியைச் சுமந்தபடி வெளியே வந்தான் ராஜசேகர். அவனுக்குப் பின்னால் கிருஷ்ணகுமாரி நின்றாள்.

ஸ்ரீகாந்த்தின் முகம் கலங்கிப் போயிருந்தது. வெளியே தூரத்தில் சிமெண்ட் நடைபாதையில் நின்று கொண்டிருந்த ஸ்ரீகாந்த் வந்த காரில் அவனுடைய பெற்றோர் உட்கார்ந் திருந்தார்கள். அவர்கள் காரைவிட்டு இறங்கவில்லை.

தம்பியின் அருகில் வந்து நின்றான் ஸ்ரீகாந்த்.

கையில் வைத்திருந்த குழந்தையை அவனிடம் நீட்டிய போது, ஸ்ரீகாந்த் அதை மௌனமாக வாங்கிக் கொண்டான்.

“ராஜசேகர்” என்று உணர்ச்சி வசப்பட்டு அழைத்த கிருஷ்ணகுமாரி ஓடி வந்து அவன் கரத்தைப் பிடித்துத் தன் கண்களில் ஒத்திக் கொண்டாள்.

உங்கள் போராட்டம் வெற்றி அடைந்துவிட்டது அண்ணி— என்றான் புன்னகையுடன்.

“நான் ஒருத்தியாக இதில் வெற்றியடைந்திருக்கவே முடியாது— உன் உதவி இல்லையென்றால்...”

நம் போராட்டத்தில் நமக்கு வெற்றியைத் தந்தவன் ஸ்ரீகாந்த். நம்முடைய முதல் நன்றி அவனுக்குத்தான்.

ஸ்ரீகாந்த் பேசவேயில்லை. குழந்தையுடன் கிருஷ்ண குமாரியிடம் வந்து நின்றான்.

மனைவி பின் தொடர காரைவிட்டு கீழே இறங்கினார் சுதர்சனம். கெஸ்ட் ஹவுஸை விட்டு வெளியே வந்த ராஜ சேகர் சிமெண்ட் நடைபாதையில் சந்தித்தபோது அவன் கண்கள் கலங்கியிருந்தன.

எதிரே வந்த இளைய மகனின் கரத்தை ஆர்வத்துடன் பற்றி குலுக்கியபோது பெருமிதமானதோர் பூரிப்பு.

அவர்களிடையே பேச்சுகள் ஏதும் நிகழவில்லை.

வெறும் பார்வையின் பரிவர்த்தனையில் எல்லோருக்கும் எல்லாம் புரிந்துவிட்டது.

ராஜசேகர் கண்களைத் துடைத்துக் கொண்டே பெற்றோரை கடந்து வெளியே வந்தான்.

ஒரு நேர்கோட்டில் நின்று அவன் நடத்திய தர்மயுத்தம் அங்கே கிருஷ்ணகுமாரியின் பரவசமானதோர் புன்னகையில் முடிவடைந்து கொண்டிருந்தது.



# நெருப்பின் மற்றொரு முகம்

## 1

கோர்ட் வட்டாரத்தில் எம். என். எஸ் என்று அழைக்கப்படும் பிரபல கிரிமினல் லாயர் எம். என். சீனிவாசன் கோர்ட்டுக்குப் புறப்படத்தயாராக நின்றுகொண்டிருந்தார்.

நெற்றியில் ஒற்றைக்கோடாக சிவப்பில் ஸ்ரீ சூர்ணம். பஞ்சகச்சமாக வேஷ்டி உள்ளே நுழைத்துப் போடப்பட்ட சட்டை மேல் கருப்புக்கோட் தலையில் மெல்லிய டர்பன் நெஞ்சுக்குழியை மூடிக்கொண்ட மாதிரி நெக்டை.

அவர் வெளியே புறப்பட கரியநிற போர்ட் கார் பாதி போர்டிகோவை அடைத்துக்கொண்டு நின்றது.

சைட்டேஷன்கள் சொருகப்பட்ட சட்ட புத்தகங்களை ஜூனியர் கொண்டுவந்த வைத்தான்.

“சங்ககிரி போயிட்டு மத்தியானம் வந்துடறேன். அதுக்குள்ள நம்மோட வழக்கு கூப்டாபாஸோவர் பண்ணிவை. சரியா ரெண்டு மணிக்கெல்லாம் வந்துடறேன்... அந்த மெயின் விட்னஸ் கந்தாயி அலையஸ் காவேரியம்மாவ

கொஞ்சம் சரிபண்ணிவை கோர்ட்ல சாட்சிக்கூண்டிலே வந்து ஏதாவது உளறி வைக்கப்போறா. பிராசிகியூஷன்ல கேக்கற கேள்விக்கு மட்டும் பதில் சொன்னாப் போதும்னும் சொல்லிரு பிராசிகியூட்டர் கேட்டா சரியா மூணு மணிக்கெல்லாம் நம்பகேஸை ஆரம்பிச்சுடலாம் சொல்லு.

"ஓ. கே. ஸார்."

பங்களா கேட்டில் வெள்ளை அம்பாசிடர் ஒன்று மெதுவாக நுழைந்து உள்ளே வந்தது.

"யாரது ராமகிருஷ்ணன் கார் மாதிரி இருக்கு...!"

அவர் நினைத்து முடிப்பதற்குள் கார் மரத்தடியில் வந்து நின்றது.

ராமகிருஷ்ணன் முன்னே இறங்க அவன் பின்னால் அவனுடைய தந்தை மாரிமுத்துக்கவுண்டர் இறங்கினார். முன்பகுதியிலிருந்து மேலும் இருவர் இறங்கினார்கள்.

மெதுவாக நடந்த தந்தை மாரிமுத்துவின் கையைப் பிடித்துக்கொண்டு கம்பீரமான உயரத்துடன் நல்ல ஆகிருதியுடன் ராமகிருஷ்னன் வந்தான்.

மாரிமுத்துக்கவுண்டரைப் பார்த்தவுடன் இவன் என்ன இப்படியாகிவிட்டான்? எவ்வளவு கம்பீரமாக இருப்பான். அடர்த்தியான தலைக்கேசமும் விசிறி வாழைபோல மீசையும், புருவமயிர் கூட அசாதாரண அடர்த்தியுடன் இருக்குமே! அஞ்சுவருஷத்துக்கு முன் பார்த்த மாரிமுத்துவா இவன்? நோய் வந்த கோழி மாதிரி உடம்பு இப்படி சூம்பிப்போய் நடக்க முடியாமல் மகன் கையைப்பிடித்துக் கொண்டு நடக்கறமாதிரி இவனுக்கு என்ன வந்து விட்டது?

ராமகிருஷ்ணன் தந்தையின் கையை விட்டுவிட்டு சீனியருக்கு வணக்கம் கூறினான்.

வாடா...கவுண்டா .. என்னடா இப்படியாயிட்டே என்ன உடம்பு உனக்கு. உன்ன பார்த்து கிட்டதட்ட அஞ்சுவருஷமிருக்குமில்லையா...

மாரிமுத்துவின் கையைப்பிடித்து அழைத்துக் கொண்டு வந்து முன் வராண்டா ஹாலில் இருந்த சோபாக்கள் ஒன்றில் உட்காரவைத்தார் வக்கீல் எம். என். எஸ்.

''அப்பாக்கு அஞ்சு ஆறு வருஷமா உடம்பு சரியில்லே பெராலிக் வந்து பொழச்சதே புனர்ஜென்மம்மாதிரி ஆயிட்டாரு...

மாரிமுத்து ஏதும் பேசவில்லை கைகள் லேசாக நடுங் கிக்கொண்டிருக்க மகனுக்கு ஏதோ ஜாடைகாட்டினார் அதைப்புரிந்துகொண்ட ராமகிருஷ்ணன் கையுடன் கொண்டுவந்திருந்த எவர்சில்வர் பிளேட் ஒன்றில் வெற் றிலைபாக்குடன் ஒரு கல்யாண பத்திரிகையை வைத்து லேசாக நடுங்கிக்கொண்டிருக்கும் தந்தையின் கையில் கொடுத்து தானும் அந்த தட்டைப்பிடித்துக் கொண்டு நின்றான்.

சாமி, உங்கமவன் ராமகிருஷ்ணனுக்கு கல்யாணம் சாமி முன்னால நின்னு நடத்திக் குடுக்கணும் என் மவன ஒரு கவுரவமான வக்கிலா ஆளாக்கினவக நீங்க. இவனோட கல்யாணத்துக்கு நானே நேரில் வந்து வெத்தில வைக்கிர ஒரே ஆளு நீங்கதா... அவசியம் வந்து போவனும்...

லேசாக வார்த்தைகள் சிதைந்து வந்தாலும் ஓரளவு மனதில் உள்ளதை சரியான முறையில் பேச நாக்கு ஒத்து ழைப்பு தந்தது,

மாரிமுத்துவின் மெலிந்துபோன இரண்டு கரங்களையும் சேர்த்துப்பிடித்தார். எம். என், எஸ்...

அப்பாவுக்கு உங்கள மட்டும் நேரில் பார்த்து இன்விடேஷன் தரணும்னு ஆசை மத்த சொந்தக்காரங்க வீட்டுக்கெல்லாம் நான்மட்டும்தான் போறேன்...

அப்பா இப்ப சுலபமா பேசின பேச்சே இப்ப உங்களோட பேசினாரே இது மட்டும் தான். இதைமட்டும் கொஞ்சநாளா மனசுக்குள்ளாரயே பேசிப்பேசி பயிற்சி எடுத்துகிட்டு இருப்பாருன்னு நினைக்கறேன்.

மாரிமுத்துவும் அதற்குமேல் ஒன்றும் பேசவில்லை மற்றவர்கள் முகத்தையே பார்த்தவண்ணமிருந்தார்.

நான் அவசியம் வரேன்டா... உன் மகன் கல்யாணத் துக்கு வரதை விட எனக்கு வேற என்ன வேலை. கண்ணனை மாதிரி இவனும் எனக்கொரு மகன்...''

மாரிமுத்துவின் கரங்களைப்பிடித்துக்கொண்டு பேசிக் கொண்டிருந்தார். எம். என்: எஸ்...

அட்வகேட் காபிக்கு உள்ளே குரல் கொடுத்தார்.

பீங்கான் ஜெக்கில் காபி வந்தது எல்லோரும் குடித் தார்கள்.

கார்வரையில் மாரிமுத்துவை கையைப் பிடித்து அழைத்துவந்தவர் அவரை காரில் உட்கார வைத்து விட்டுத் திரும்பினார்.

ராமகிருஷ்ணன் வந்ததிலிருந்தே உற்சாகமின்றி காணப்பட்டான். அந்தவாலிப வழக்கறிஞன் முகத்தில் கல்யாணத்தின் குதூகலமில்லை. இதை சீனிவாசன் கவனிக்கத்தவறவில்லை.

கூடவந்தவர்கள் அனைவரும் காரில் ஏறிக் கொண்ட பின் ராமகிருஷ்ணன் மட்டும் காரின் கதவைப் பிடித்தபடி நின்று கொண்டிருந்தான்.

''ராமகிருஷ்ணா!''

சீனியர் அவனை அழைத்தார். அவன் தான் பிடித் திருந்த காரின் கதவைக் கவனமாகச் சாத்திவிட்டு மர மல்லிகை மரந்தடியில் நின்று கொண்டிருந்தவர் அருகில் வந்து மௌனமாக நின்றான்.

‘‘என்ன உற்சாகமேயில்லாம இருக்கே... என்ன பிரச்னை.’’

அவன் தயங்கினான். தூரமாக நிற்கும் வெள்ளை அம்பாசிடரை ஒருமுறை பார்த்தான்...

கமான் டெல் மீ மை பாய் ‘‘என்ன பிராபளம் உனக்கு?’’ நீ கல்யாணப் பத்திரிகை கொடுக்க வந்ததிலிருந்தே கவனிச்சுண்டுதான் இருக்கேன். நீ உன்னுடைய வழக்கமான கலகலப்புடன் இருந்திருந்தால் கண்ணனை கூப்பிட்டு இருப்பே. கோவிந்துவோட பேசாம நீ போகவே மாட்டே .. என்னம்மோ வந்தே... எனக்கு மட்டும் பத்திரிகை வச்சே... போயிண்டே இருக்கே... நோ... நோ சம்திங் ராங்... சொல்லப்பா... சொன்னாதானே தெரியும்.

ரொம்ப தயக்கத்திற்குப்பின் அவன் பேசினான்.

உங்ககிட்டே சொல்லலாமா... வேண்டாமா என்றுதான் சார் இருந்தேன். ஏன்னா இப்பயாரோட தலையீடும் இந்தக் கல்யாணத்தை நிறுத்த முடியாதுங்கறதுனாலதான்.

‘‘அப்படின்னா...’’

‘‘இந்தச் சம்மந்தத்திலே ஆரம்பத்திலேருந்தே எனக்கு இஷ்டமில்லே ஸார்.’’

‘‘என்னப்பா இப்படிச் சொல்றே?’’

‘‘ஆமாம் ஸார். என்னோட படிப்பு, என்னோட மனோபாவம், என்னோட அந்தஸ்து இதுக்கெல்லாம் ஏத்த இடமேயில்லை. எனக்கு அந்தஸ்த பத்திகூட அக்கறையில்லே ஸார். பொண்ணு ஓரளவாவது படிச்சிருக்க வேண்டாமா ஸார்.’’

‘‘பொண்ணு கொஞ்சங்கூட படிக்கலயா?’’

‘‘கொஞ்சங்கூட படிக்கல. முறைப்பெண் என்று சொல்லிப் பெரியவங்களா பாத்து அவங்களுக்குள்ளே

முடிவெடுத்துட்டாங்க. உறவுமுறைவிட்டுப் போயிடக் கூடாது. பரம்பரை சொத்து அந்தஸ்து வேற இடத்துக்குப் போயிடக்கூடாதுன்னு, அவங்களுக்குள்ளயே பேசி முடிவு பண்ணிட்டாங்க, அப்பா ஊர்ல பெரியவரு ஊர்ல இருக்கற வங்க யாரும் அவர் பேச்ச தட்டமாட்டாங்க. அவரோட சொந்தமகனே அவர் வார்த்தையை தட்டறமாதிரி நடந்து கிட்டா அவருக்கு கெட்டபேரு. என்ன செய்யறதுன்னே தெரியல. என்னோட அம்மாவுக்கும் அத்தனை இஷ்ட மில்லே."

"சரி படிப்புதான் இல்லே. பொண்ணு லட்சணமா இருப்பாளா?"

"பொண்ணு அழகா இருந்து என்ன ஸார் பிரயோ ஜனம்... அப்பா, அம்மா கெடையாது அண்ணன்காரன் இருக்கான். செங்கோடன்னு பேரு. கொஞ்சம் பூர்வீக நிலமிருக்கு. காட்டுலே நூறு கொய்யா மரம் தேறும். நிலத் திலே வர்ற வருமானம், கொய்யாப்பழ வியாபாரத்திலே கொஞ்சம் வருமானம், பெரிய வசதின்னு சொல்ல முடியாது ஸார். நான் வசதி அந்தஸ்து என்று எதைப்பத்தியும் கவலைப்படல. ஒரு பி.ஏ பி.எல். படிச்சவனுக்கு குறைந்த அளவு கல்வித் தகுதியிருக்கற பொண்ணா இருக்கவேணாமா இதைப்பத்தி பேசினா அப்பனுக்கும், ஆயாளுக்கும் புரியவே மாட்டேங்குது. அவங்க இன்னும் பழைய சம்பிரதாயங் களிலேயே இருக்கறாங்க உறவு முறை, சாதிசனம், கூட்டம், சரிவிடுங்க. இனிமே இத மாத்த முடியாது. நானும் மனச திடம் பண்ணிகிட்டு கம்னு இருக்கேன்.

"நா வேணா கவுண்டர்கிட்ட சொல்லிப்பாக்கட்டுமா?'

"கவுண்டர் கேக்கமாட்டாரு... அவருக்கு நா இது விஷயமா சரியா பதில் சொல்லலேன்னு சொந்தக்காரங்க கிட்டேயெல்லாம் குறைபட்டுப் பேசப்போய் சொந்தக் காரங்க எல்லாம் ஒவ்வொருத்தரா என்கிட்டே வந்து துக்கம் விசாரிக்கிற மாதிரி வெசாரிச்சுட்டுப் போயிட்டாங்க."

“கவுண்டரு ரொம்ப வெசனத்தோட இருக்காரு நீ சந்தோஷமாகவே பதிலு சொல்லலயாமே. ஊருக்கெல்லாம் நாயம் சொல்றவரு. நீ சட்டம்படிச்ச புள்ளே அப்பன் மனசு வெசனப்படற மாதிரி நடந்துக்காதே.”

“இப்படி நெறயபேரு என்ன சமாதானப்படுத்திட்டுப் போயிட்டாங்க. நானும் அய்யா இஷ்டப்படி நடக்கட்டும்னு கம்னு இருக்கேன். இப்ப நீங்க வந்து சொல்லி எதையும் மாத்த முடியாது. அது இது நடக்கறபடி நடக்கட்டும் கடைசியிலே நீங்கல்லாம் சொல்றமாதிரி அந்தச் செல்லியம்மன் மேலே பாரத்தைப் போட்டுட்டு பேசாம இருக்கேன்.

நேரமாவதாக காரிலிருந்தபடியே ஒருவர் ராமகிருஷ்ணனுக்குக் கை அசைத்தார்.

வக்கீலிடம் சொல்லிக் கொண்டு அவன் காரில் ஏறிக் கொண்டான்.

கார் புறப்பட்டுப் போய்விட்டது.

## 2

ஒரு கொலை வழக்கின்போது மாரிமுத்துவுக்கும், அட்வகேட் சீனிவாசனுக்கும் நட்பு மலர்ந்தது.

கட்சிக்காரரர் வக்கீல் என்கிற எல்லைத் தாண்டி அது ஆத்மார்த்தமாக வேரூன்றியது.

அப்பொழுது ராமகிருஷ்ணன் வாழப்பாடியில் எஸ்.எஸ். எல். ஸி., எழுதி பாஸ் செய்துவிட்டு மேற்படிப்புக்குப் போகலாமா வேண்டாமா என்கிற முடிவு செய்யப்படாமல் தடுமாறிக் கொண்டிருந்தான். மாரிமுத்துக்கவுண்டருக்கு மகன் மேற்படிப்பு தொடர இஷ்டமில்லாமல் “போறுண்டா காடு கழனிய பாத்துகினு இங்கேயே இரு. நம்ப

குடும்பத்திலே இந்தப் படிப்பே ஜாஸ்த்தி— என்று பரம்பரை வழக்கத்தை அழுத்தமாகப் பேசிக் கொண்டிருந்தபோது அவன் அறிவு கூர்மை அவனது புத்தி திட்சண்யம் பழகும் விதம். இவைகளைப் பார்த்து அவன் மேல் அன்பு கொண்ட ஸ்ரீனிவாசன் அவனைத் தொடர்ந்து மேற்படிப்பு படிக்க தூண்டியபோது ராமகிருஷ்ணன் மனதில் வக்கீல் படிப்பு படிக்க வேண்டுமென்ற ஆசையிருப்பதைப் புரிந்து கொண்டு அவனை வக்கீல் படிப்புக்கு அனுப்பும்படி மாரிமுத்துவிடம் வாதிட்டார்.

வக்கீலாக அறிமுகமாகி குடும்ப நண்பராகிவிட்ட சீனிவாசனின் பேச்சை அவரால் தட்ட முடியவில்லை.

மேல்நிலைப் பள்ளி படிப்பை முடித்தவுடன் அவனை கல்லூரியில் இண்டர் மீடியட்டில சேர்த்து விட்டார்.

டிகிரியை மிகச் சிறந்த முறையில் முடித்தவுடன் சென்னை சட்டக்கல்லூரியில் சேர்ப்பதற்கும் அவரே எல்லா ஏற்பாட்டையும் செய்தார்.

ஆரம்பத்தில் மேற்படிப்பின் மேல் அத்தனை ஆர்வம் காட்டாத மாரிமுத்து. பையனின் உற்சாகம் கல்லூரி நாட்களில் அவன் மேற்கொண்ட உயர்ந்த பண்பாடு நடவடிக்கைகளில் காணப்பட்ட மாறுதல் அவனால் அவருக்குக் கிடைத்த கூடுதல் கவுரவம்...

மாரிமுத்துவுக்கு பரம சந்தோஷம். ராமகிருஷ்ணனை பட்டமேற்படிப்புக்கு சென்னை அனுப்ப வேணடுமென்று சீனிவாசன் சொன்னபோது அவர் மறுப்பேதும் சொல்ல வில்லை.

"சாமி அவன் உங்கமவன். அவனோட நல்லது கெட்டது எல்லாம் உங்க கையிலே ஒப்படைச்சிட்டேன். நாங்களெல் லாம்அதிகம் படிக்கல. பரம்பரை பரம்பரையா இப்பிடியே வாழ்ந்துட்டோம். இப்ப நெலம வேகமா மாறிகிட்டுவருது.

பணங்காசோட படிப்புமிருந்த்தாதான் இனிமே கவுரதை கெடக்கும். நீங்க அவன எப்படி ஆக்கணும்னு நெனக்கறீங் களோ அப்படியே செஞ்சுப்புடுங்க.

மாரிமுத்து இப்படி ஒருமுறை நெகிழ்ச்சியுடன் பேசி! அவன் சட்டப்படிப்புக்கு ஒப்புதல் தந்து விட்டான்.

ராமகிருஷ்ணனுக்கு படிப்பின் மேல் அத்தனை ஆர்வம்' வக்கீல் சீனிவாசனை நினைத்துப் பார்த்துக் கொள்வான். அவர் இதில் தலையிடவில்லையென்றால் வாழப்பாடி உயர் நிலைப்பள்ளியுடன் தன் படிப்புக்கு முற்றுப்புள்ளி வந்திருக் கும். அச்சுதன் பிள்ளையின் கிரிமினல் லாவையும் பாராஸ் திவானின் இந்துலாவையும், ஜஸ்பால் சிங்கின் இந்திய பீனல் கோடையும் புரட்டிக் கொண்டிருக்கும் வாய்ப்பே இல்லாமல் போயிருக்கும். மென்ஸ்ரியா என்ற ஒரு லத்தின் அமெரிக்க வார்த்தையை வைத்துக் கொண்டு மனிதமனங்கள் பற்றி பக்கம் பக்கமாக படித்திருக்க வாய்ப்பே கிடைத்திருக்காது.

மநு தர்மத்திலிருந்து மாறுபடும் நாரத ஸ்மிருதி எத்தனை முற்போக்கானது என்பதை நாம் அறிய முடியா மலேயே போயிருக்கும்.

As compared to the other Sages Narada is a Progressive Sagh.

என்று நமது இந்துச்சட்ட புத்தகங்கள் ஏன் சொல்லு கின்றன என்பதை தெரிந்து கொண்டிருக்கவே முடியாது.

மநுவிலிருந்து நாரதஸ்மிருதி பெண்கள் விஷயத்தில் எப்படி முற்போக்கான கருத்துக்களை கொண்டிருக்கிறது என்பதை நாம் படித்திருக்கவே முடியாது.

Moot Court—ஒரு மாதிரி வழக்கு மன்றம் இறுதி யாண்டில் நடத்தி—ஒரு கொலை வழக்கை நடத்தி வெற்றி பெற்று பேராசிரியர்களிடம் பாராட்டைப் பெற்ற வாய்ப்பு கிடைத்தே இருக்காது.

ஒவ்வொரு சாதாரண மனிதனிடத்திலும் மற்றொரு திறமைசாலி உறைந்து கிடக்கிறான். அதை உனக்குள் தேடிக் கண்டுபிடித்து வெளியே காட்ட வேண்டும். அந்த முயற்சி உன்னிடமிருந்துதான் ஆரம்பமாக வேண்டும். அல்லது அதை உணர்ந்து அதை வெளியே கொண்டு வர தூண்டுகிறவர்களுக்கு நீ அனுசரணையாக இருக்கவேண்டும். அப்படி அனுசரணையாக இருந்து ஒத்துழைத்தால்தான் ஒரு சாதாரண ராமகிருஷ்ணனுக்குள் இருக்கும் மற்றொரு கிரிமினல் லாயரை வெளிச்சத்திற்கு கொண்டு வந்து விடுலாம்.

ராமகிருஷ்ணன் பி.ஏ.பி.எல். பட்டம் பெற்று உயர்நீதி மன்றத்தில் பெயரை பதிவு செய்து, பிறகு சீனிவாசனிடம் ஜூனியராக வந்துசேர்ந்த அன்றுஅவரைஅவன் பங்களாவின் முன் ஹாலில் நிற்கவைத்து காலில் விழுந்து ஆசிபெற்றானே, அப்பொழுது அவரிடம் சொன்ன ஒரே வார்த்தை அவரை நெகிழ வைத்து விட்டது,

"ஸார் என்னை உங்கள்மகன்களில் ஒருவனாக நினைத்து ஆசீர்வாதம் செய்யுங்கள்'' என்று சாஷ்டாங்கமாக காலில் விழுந்தபோது,

''எழுந்திரு மகனே. உனக்கு எப்பொழுதுமே என் ஆசிகள் உண்டு, சமூக கலாச்சார பழக்க வழக்கங்கள் என்பது ஒரு பிரிக்க முடியாத வாழ்க்கை நடைமுறை. சிலருக்கு இது இந்த மாற்றத்திற்கான அறிவுரையோ உபதேசமோ தேவை படுவதில்லை. ஆனால் சிலருக்கு தேவைப்படுகிறது. அவ்வளவுதான். உன் அப்பா பழைமை பழக்கவழக்கங்களில் ஊறிய ஒரு விவசாயி.

அவருக்கு இப்ப நடந்துண்டு இருக்கற வெளிமாற்றங்கள் பற்றி அதிகம் தெரியவாய்ப்பில்லை. அவர் உண்மையில் மாறுதலை வெறுக்கறவர் இல்லே. அதை பக்குவமாக எடுத்து சொல்ல தெரியாததினால உன் படிப்பை பாதியிலே நிறுத்த

இருந்தார்! கல்வியின் அவசியத்தை நான் எடுத்துச் சொன்னவுடன் எத்தனை ஆர்வத்தோடு ஒப்புக் கொண்டார் பார்த்தியா. அதனால உன்னுடைய இந்த உயர்வுக்கு என்னைவிட அவருக்குத்தான் நீ நன்றி சொல்லனும். முதலில் அவர் காலில் விழுந்து ஆசீவாங்கிக்சோ... போ... என்று அவனை தூக்கி நிறுத்தி ஆசிர்வதித்து அனுப்பி வைத்தார்?

# 3

சீனிவாசனிடம் ஐந்தாண்டு காலம் ஜூனியராக அவர் குழுவில் முக்கிய அட்வகேட்டாக, பின்பு அவருடைய நேரிடை அடுத்த வக்கிலாக பின்பு ராமகிருஷ்ணனை கேட்காமல் அவர் எதையும் செய்வதில்லை என்ற நிலைக்கு உயர்ந்து, பின் அவருடைய, பரிபூரணமான ஆசியுடன் தனியே தொழில் நடத்த ஆரம்பித்தான்.

அயோத்தியா பட்டணத்திற்கும் காரிப்பட்டிக்கும் நடுவே ஆத்தூர் நெடுஞ்சாலையில் அவனது பூர்வீக கிராமமான கருமாபுரத்தில் அந்த நாளைய பெரிய தோட்ட வீடு, சுற்றிலும் கொய்யா, சப்போட்டா மரங்கள், வேலியோரங்களில் தென்னை, சாலையிலிருந்து பார்த்தால் ஒரு இரண்டு ஏக்கர் விஸ்திரணத்தில் தோட்டம். வயல்வெளி—சுற்றிலும் முள்வேலி... தோட்டம் முடிகிற இடத்தில் வீடு.

சேலத்தில் காந்திரோட்டில் சொந்தமான பங்களாவில் அலுவலகம். பெருவாரியான நாட்களில் அவன் கருமாபுரம் திரும்பவே நல்லிரவு ஆகிவிடும், சிலநாள் கிராமம் போவதேகூட கிடையாது,

ஃ ஃ ஃ

ஓடி, ஆடி உற்சாகமாக கல்யாணப் பத்திரிகைகளைக் கொடுக்கக்கூடிய மனநிலையில் அவன் இல்லை. எனவே மிக

நெருக்கமானவர்கள். விட்டுப்போய்விடக்கூடாத உற வினர்கள் ஆகியோருக்கு மட்டும் கல்யாணப் பத்திரிகைகள் கொடுத்துவிட்டு கல்யாண வேளையில் முதல் கட்ட பணி முடிந்த அசதியுடன் தனது காட்டுப் பகுதி வீட்டில் அமர்ந் திருந்தான் ராமகிருஷ்ணன். அவன் முன்னால் கிடந்த டீபாயின்மேல் நிறைய வார மாத சஞ்சிகைகள் கிடந்தன கூட ஆங்கில நாளிதழ்.

தூரமாகத் தெரியும் நுழைவாயிலில் பத்து. பதினைந்து பேர் நுழைவது தெரிந்தது. அதில் நான்கைந்து மட்டுமே. தெரிந்த முகங்கள்.

“வணக்கங்க...”

முதலில் வணக்கம் கூறியவனைத் தொடர்ந்து மற்றவர் களும் வணக்கம் கூறினார்கள்.

எந்தவிதமான தயக்கமும் இல்லாமல் ஒவ்வொருவராக அங்கேயே ராமகிருஷ்ணனுக்கு முன்னால் புல்தரையில் சம்மனமிட்டு உட்கார்ந்து கொண்டார்கள்.

“என்ன வக்கிலையா... நல்லா இருக்கீங்களா!”

வெள்ளாளகுண்டம் சீ ர ங் க ன் கும்பிடொன்றைப் போட்டுவிட்டு அவனும் அவனுக்கு மிக அருகில் உட்கார்ந்த போது நாற்காலியில் உட்கார்ந்திருந்த ராமகிருஷ்ணனும் கீழே உட்கார்ந்துவிட்டான்.

இதைச் சீரங்கன் தடுத்தான்.

“அட பேசாமே இரு சீரங்கா... பெரியவங்க எல்லாம் கீழே குந்திகினு இருக்கயிலே...”

சீரங்கன் ராமகிருஷ்ணனின் தாயாதி உறவுமுறை, ஏதோ ஒரு உறவுச்சுற்றில் ராமகிருஷ்ணனின் தாயார் செல்லத்தாயிக்கு மாமன் முறையாக வேண்டும், அண்மைக் காலம்வரை அந்தத் தாயாதி உறவில் எவ்வித உரசலு மில்லை.

சீரங்கனுக்கு நாற்பது வயதிருக்கும். தலையில் அதிக கேசமில்லை. நடுத்தலை வழுக்கை தெரியுமளவு கேசம் கொட்டி போயிருந்தது. பத்து பதினைந்து நாள் ரோம வளர்ச்சி முகத்தில். அழுக்கடைந்த அரைக்கை சட்டை. மேலே ஏதோ கைக்கு கிடைத்ததை எடுத்துப் போட்டுக் கொண்டமாதிரி கசங்கி நிறமற்றுப்போன துண்டு.

வெள்ளை சட்டைப் பையில் அடைத்து மடித்து வைக்கப் பட்டிருந்த ரூபாய் நோட்டுக்கள் தெரிந்தன.

"தம்பி பழனிச்சாமி கேஸூல ஜெட்ஜ்மெண்ட் கொடுத் துட்டாங்க தெரியுமில்ல."

சீரங்கன் சற்றே கரகரப்பான குரலில் ஆரம்பித்தான்.

இதை ஆரம்பித்தவுடனேயே அங்கே அசாதாரணமான அமைதி நிலவ ஆரம்பித்தது. யார் முகத்திலும் உற்சாக மில்லை.

"பாத்தேன் சீரங்கா...அந்த ஜட்ஜ் ஒரு மாதிரி, கொலக் கேசுன்னு அவருகிட்ட போயிடுச்சின்னா ஆயுளு, தூக்கு இது ரெண்டுதான், அதுவும் கிளியர் கேஸா மாட்டிகிச்சுன்னு வச்சுக்க தூக்குதான், போன வருஷம் மட்டும் அவரோட ஜட்ஜ்மெண்ட்ல நாளு தூக்கு. அஞ்சு ஆயுளு... இதிலே இன்னொரு முக்கிய அம்சம் பாருங்க. இங்கே இவரு செஷன்ஸ்ல என்ன தண்டனை எழுதராரோ அதே ஐகோர்ட்டிலேயும் ஊர்ஜிதமாயிடுது, ஐகோர்ட்ல ஊர்ஜித மானவுடனே சுப்ரீம் கோர்ட் போறாங்க. பத்துல ஒண்ணு ரெண்டுதான் வேறமாதிரி தீர்ப்பு மாறுது, மத்தபடி அங்கே யும் இதே ஊர்ஜிதமாயிடுது. இதுக்கெல்லாம் என்ன காரணம்னு நெனக்கறே. கேஸை வெஜாரிக்கும்போதும் சாட்சிகளை குறுக்கு விஜாரணை செய்யறபோதும் அவரு ரொம்ப கவனமா இருக்காரு. அதிலும் கொலைச் கேசுன்னா மனுஷன் அத்தனை கெடுபிடி வாதியையும் பிரதிவாதி யையும் அவரு மடக்கற மடக்கு இருக்கே.. கிட்டத்தட்ட

அந்த நிலையிலேயே ஒரு தீர்மானத்துக்கு வந்திடராரு. உன் தம்பி பழனிசாமி கேஸயே எடுத்துக்க. ஆரம்பத்திலிருந்தே அவரோட எண்ணத்தை மாத்தவே முடியல...''

''உங்கிட்டே வந்து கெஞ்சினோம். நீங்கதான் பழனி சாமி கேஸ எடுக்கமாட்டேன்னுட்டீங்க... நீங்க அந்த கேஸ நடத்தியிருந்தா இன்னிக்கு இப்படி ஜட்ஜ்மெண்ட் வந்திருக் காது. ஊர்ல சாதிசனங்க எல்லாம் அப்படித்தான் பேசிக் கறாவ...''

''அப்படி இல்லே சீரங்கா. கிருஷ்ணசாமி வக்கீலு கேஸ நல்லாத்தான் நடத்தினாரு...''

''இப்ப கேக்கற தம்பி. நான் உன்னவிட அஞ்சாரு வயசு மூத்தவன். உன்னோட மாமன் முறையாறவன்ங்கிற உரிமல கேக்கறேன். இந்த கேஸ நீயேன் எடுத்துக்க மாட் டேன்னுட்டே...''

''சீரங்கண்ணே சத்தியமா சொல்றேன். உங்க ஊர்க் காரங்க இந்தனைபேர் இங்கே இருக்காங்க. இவங்களுக்கு முன்னால் சொல்றேன், எனக்கு உங்க குடும்பத்து மேலே அன்பு உண்டு. மரியாதையுண்டு, அய்யாவும், ஆத்தாவும் கூட சொன்னாக.''

''இது உனக்கு தோக்கற கேசுன்னு தோணிப்போச்சு அப்படித்தானே.''

''இதுல தோக்கற கேசு, ஜெயிக்கிறகேசுன்னு எதையும் சொல்லமுடியாது சீரங்கா. நல்ல கேசு தோக்கறதும், மோசமான கேசு ஜெயிக்கறதும், இந்தத் தொழில்ல சகஜம் ஒண்ணுமில்லே திருச்செங்கோடு ஆன்றாம்பட்டி கொளந்த கவுண்டன் கேசு என்ன ஆச்சு. சாட்சி சந்தர்ப்பம் பிராசி கியூஷன் வாதம், டாக்டரோட விட்னஸ் எல்லாம் கவுண்ட ருக்கு எத்தனை பாதகமா இருந்திச்சு, அதிலும் அந்த ஜட்ஜ்

கொலைக்கேசுல ருஜீவாயிடுச்சுன்ன தூக்க தவிர வேற எதுவுமே எழுதமாட்டாரு,

கோயில் வாசல்ல ஜனநடமாட்டம் இருக்கற எடத்திலே ஒரு பாறாங்கல்ல தூக்கி அந்த பொம்பள தலையிலே போட்டு சாக அடிச்சிருக்காரு. கேசு பிரமாதமாகத்தான் நடத்தினாங்க. என்ன ஆச்சு. கவுண்டர் நல்ல வக்கிலா புடிச்சிட்டார்... கவுண்டருக்கு தூக்குதான்னு எல்லாரும் முடிவு பண்ணிபுட்ட நேரத்திலே ஒரேயொரு கேள்வியிலே அம்புட்டு உண்மையையும் அப்படியே கவுத்துட்டாரு அந்த வக்கிலு.

கொலை நடந்த அன்னிக்கு அங்கே அந்த பொம்பள பக்கத்திலே ஒரு பாராங்கல்லு கெடந்திச்சு. அதிலே கொலை செய்யப்பட்ட அந்தப் பொம்பள தலையிலே ருந்து கொட்டி சிதறிய ரத்தம் பரவலா இருந்துச்சு. அந்தக்கல்லுலதான் அந்தப் பொம்பளய கொலை செஞ்சிருப்பாருன்னு முடிவு செஞ்சு அந்தப் பாறாங்கல்ல ரெண்டு போலீஸ் காரங்க விட்னஸ் பொருளா எடுத்துப் போட்டுக்கிட்டு போயிட்டாங்க. கொலைய நேரபாத்த வங்களும் ஏதோ ஒரு நெனப்புல அந்தக் கல்லாலதான் கவுண்டர் அந்தப் பொம்பளய தலையிலே அடிச்சாருன்னு சொல்லிப்புட்டாங்க. ஆனா கவுண்டர் பயன்படுத்திய பாறாங்கல்லு அது இல்ல. அது இரண்டு கையிலே சுலபமா தூக்கக் கூடிய கைக்கு அடக்கமான கல்லு. போலீஸ்காரங் களோட கவனப்பிசகு இதை கவுண்டரோட வக்கிலு விஜயராகவாச்சாரியார் எவ்வளவு குயீத்தியா பயன் படுத்திக் கிட்டார்.

தன்னோட கக்சிக்காரர், அந்தப் பொம்பளய கொலை செய்ய இந்தப்பாறாங்கல்ல பயன்படுத்தலேங்கறது வக்கிலுக்கு தெரிஞ்சுபோச்சு. அதான் அவரோட சாமர்த் தியம். ரெண்டு போலீஸ்காரங்க தூக்க முடியாம தூக்கிட்டு வந்த அத்தாம் பெரிய பாறாங்கல்ல வயதான

என் கட்சிக்காரரால் எப்படி தலைக்குமேல் தூக்கி அடித்து அந்தப் பெண்ணை கொன்னிருக்க முடியும். என்றபோது ஜட்ஜ் அப்படியே அசந்துட்டார். அம்புட்டுநேரம் அந்தக் கேசப்பத்தி ஒரு தெளிவோட இருந்த ஜட்ஜிக்கு இந்த இடத்திலே ஏற்பட்ட சந்தேகத்தை மாத்தவே முடியலே... என்ன சொன்னார் தெரியுமா.

அரை மணி நேரம் அவகாசம் தரேன். பிராசிகியூஷன் தரப்பில் முக்கிய தடயப்பொருளாக காட்டப்பட்ட இந்தக் கல்லை எடைபோட்டு அதன் எடை என்ன என்பதைச் சொல்ல வேண்டுமென்று கூற கல்லு எடை போடப் பட்டது. அவ்வளவு பளுவுள்ள அந்தக் கல்லை வயதான கொளந்தக் கவுண்டரால் தலைக்குமேலே தூக்கி யிருக்கவே முடியாது. என்ற முடிவுக்கு வந்த நீதிபதி கவுண்டரை நிரபராதி என்று சொல்லி விடுதலை செஞ்சு புட்டாரே......இதுக்கு என்ன சொல்றீங்க...

"சரி அதெல்லாம் வுடு...இப்ப செஷன்ஸ்ல தீர்ப்பு வந்திருச்சு. ஹைகோர்ட்ல அப்பிலுக்காவது நீங்க வாதாடினா அந்தப்பயல காப்பாத்தலாம். இதுக்காவது நீ சரின்னு சொல்லு பணத்தைப்பத்தி யோசிக்காதே..."

"என்ன மன்னிச்சிடு சீரங்கண்ணே...நான் இந்த கேசுக்கு வழக்காட முடிவு செஞ்சிருந்தா ஆரம் பத்திலேயே சம்மதம் சொல்லியிருப்பேன். எனக் கென்னவோ இந்த கேசு மேலே ஒரு நல்ல அபிப்ராயமே வரமாட்டேங்குது... கிருஷ்ணசாமியும்... நல்ல திறமையான வக்கிலுதா அவரை வச்சே. ஹைகோர்ட்டுக்கு அப்பில் பண்ணுங்க... என்ன விட்டுடுங்க. அதுவுமில்லாம நம்ப உறவு சனங்களுக்குள்ளார நடக்கற தாவாக்கள்லேருந்து கொஞ்சம் ஒதுங்கியிருக்கணும்னு முடிவெடுத்திருக்கிறேன். ஏன்னா நீயும் எனக்கு பங்காளி. உன் தம்பி பழனிச்சாமி கொலை செஞ்ச அவன் பொண்டாட்டி அயித்தாவும்

அட்பாரு வகையிலே கிட்டத்து உறவாயிட்டாங்க. உங்க குடும்பத்துக்காக நான் வாதாடினா அவிய குடும் பத்துக்கு விரோதியாடுவேன். அயித்தாவுக்காக கோர்ட்டுக்கு வந்தா உங்க குடும்பத்தோட மன வருத்தம் வரும்,

இந்த சங்கடமே வேணாம்னுதான் ஆரம்பத்திலேயே இதிலே நான் தலையிடாம ஒதுங்கிட்டேன்... இன்னக்கி இன்னொரு உண்மையையும் உங்க எல்லார் மத்தியிலேயும் சொல்லிப்புடறேன். உன் தம்பியால கொலை செய்யப் பட்ட வீரனோட சொந்தக்காரங்களும் என்னிடம் வந்து கெஞ்சிப்பாத்துட்டுப் போயிட்டாங்க. பொதுவா இந்த விவகாரம் புடிச்ச கேஸ் எதிலேயும் நான் சம்மந்தப்படவே கூடாதுங்கற முடிவோட இருக்கேன்."

சீரங்கன் தன் ஊர்க்காரங்களுடன் எழுந்தான். அவன் முகத்தில் ஏமாற்றமிருந்தது. அதன்பின் யாரும் ஏதும் பேசவில்லை.

மௌனமாக வெளியேறிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் போன பின்பு தனிமையில் விடப்பட்ட ராமகிருஷ்ணன் தன் வீட்டின் முன் இருந்த திறந்த வெளியில் நின்று கொண்டிருந்தான்.

பரபரப்பாக நடந்து செஷன்ஸ் கோர்ட்டில் தூக்கு தண்டனை வழங்கப்பட்ட அந்த வீரன் கொலை வழக்கு அவன் நினைவில் கொடிபோல் படர்ந்தது.

அவனுடைய சக நண்பரும் நகரில் சிறந்த கிரிமினல் வக்கிலுமான கிருஷ்ணசாமி எம். ஏ. பி. எல் தான் அதை நடத்துகிறார்.

வேறு வழியின்றி கிட்டத்தட்ட எல்லா வக்கீல்களும் கைவிட்ட பின் வேண்டா வெறுப்பாக அந்த வழக்கை அவர் நடத்த வேண்டிய நிர்பந்தம் வந்து விட்டதும் ராமகிருஷ்ணனுக்குத் தெரியும்.

# 4

அயித்தா என்று அழைக்கப்படும் அயித்தாம்மாவுக்கும் பழனிசாமிக்கும் திருமணம் நடந்தது. திருமணத்திற்குமுன் பிருந்தே . அயித்தாவுக்கும், வண்டிக்காரன் விரனுக்கும் கள்ளத்தொடர்பு உண்டு என்பது அனேகருக்குத் தெரியாது. பிறந்த வீடு போகிறேன் என்று சொல்லிவிட்டு, சிங்கிபுரம் வரும் அயித்தா திருமணத்திற்குப் பின்பும் அடிக்கடி விரனை சந்தித்து அவனுடன் உடலுறவு வைத்துக் கொண் டிருக்கிறாள்.

பிறந்த வீடு போவதாகக் கூறி விட்டுப் போகும் அயித்தாவைப் பற்றியும், வண்டிக்காரன் பற்றியும் செய்திகள் வர ஆரம்பித்தன. மனைவி மேல் அளவுக்கு அதிகமாக அன்பு வைத்திருந்தான் பழனிச்சாமி. திருமணத் திற்குப் பின், ஒரு இரவு கூட அவளில்லாமல் அவன் இருந்ததில்லை. எனவே காலையில் சிங்கிபுரம் போனால் எப்படியும் மாலையில் திரும்பிவிடுவாள். மெதுவாக ஆரம்பித்த இந்தப் பழக்கம் அவள் ஒரு நாள், இரண்டு நாள் தங்கிவிட்டு வருவது வரை நீண்டது. இதை பழனிச்சாமி கண்டிக்க ஆரம்பித்தான். சச்சரவு ஆரம் பித்தது. ஏற்கனவே குடிப்பழக்கமுள்ள பழனிச்சாமி சொல்லிவிட்டுச் சென்றபடி குறிப்பிட்ட நாளில் அயித்தா வீ டு திரும்பாத நாட்களில் மாலையில் டவுன் பஸ் ஏறி சிங்கிபுரம் சென்று அவள் பிறந்த வீட்டிலேயே சண்டையிட ஆரம்பித்தான். பிறந்த வீட்டு மனிதர்கள் அருகில் இருக்கும் தைரியத்தில் அவளும் அளவுக்கு மீறி அவனை உதாசினமாகப்பேச ஆரம்பித்தாள். இந்தவிவகாரம் வளர்ந்தபோது தான், வண்டிக்காரன் விரனுக்கும், அவளுக்கும் உள்ள கள்ளத்தொடர்பு பற்றி டீக்கடையொன்றில் முகம் தெரியாத இருவர் பேசிக் கொண்டிருந்ததை அவனே அருகிலிருந்து கேட்டுவிட்டான்.

"வெள்ளாள குண்டம் பழனிச்சாமியோட பொண் சாதி அயித்தாவுக்கும், வீரன்பையலுக்கும் பழக்கம் ரொம்ப முத்திப்போச்சண்ணே. வெள்ளாள குண்டத்தான் கண்ணிலே இது பட்டிச்சின்னா அந்தப்பய ரெண்டு பேத் தையும் பீஸ், பீஸா கிளிச்சுப் போட்டுடுவான். நா வீரனான்ட சொல்லிப்பாத்தேன். அந்தப்பய கேக்கற மாதிரி இல்லே. அயித்தா புள்ளயும் பத்து நாளுக்கு ஒரு முறை இங்கே வருது. ஜல்லுத்து மல அடிவாரத்துக்கு பொளுதுசாய பூடராங்க. இதுல ஏதும் விபரீதம் நடக்கற துக் குள்ளார ஏதாவது செய்யணும்னு பாக்கறேன் ரெண்டுபேரும் சரியாவே சிக்கமாட்டேங்கறாங்க...

டீக்கடையின் பெஞ்சியில் மறுபுறம் திரும்பி உட்கார்ந் திருக்கும் பழனிச்சாமியின் உடம்பு அக்கினியாக தகித்தது.

பேசியவர்கள் யார் என்பது அவனுக்குத் தெரியும். அந்த ஊர்க்காரர்கள்தான். செங்கல் சூளையிலிருந்து சுட்ட செங்கல்லை வீடுகளுக்கு ஏற்றிச் செல்பவர்கள்...

தான் பின்புறம் அமர்ந்திருப்பதைப் பார்த்தும் பார்க் காதது போல ஒரு காரணா காரியத்துடன் விஷயத்தை நேரிடையாக தன்னிடம் சொல்லத்தயங்கி இம்மாதிரி உத்தியை அவர்கள் கையாண்டுமிருக்கலாம். எது எப்படி இருந்தாலும் அயித்தா அடிக்கடி பிறந்த வீடு போகிறேன் என்று கூறிவிட்டு இங்கே வருவதற்கான காரணம் புரிந்து விட்டது. அவனுக்கு அதோடு அங்கொன்றும், இங்கொன்று மாக காதில் விழுந்த வதந்திகளும் இப்பொழுது உண்மை யாகி விட்டது,

இந்தத்தடவை அயித்தா பிறந்தவீடு புறப்படுகிறேன் என்று சொன்னபோது.

இனிமேல்டு ஒன் பொறந்தவூடுன்னு பேசினே நாதாரி நாயி களுத்தைவெட்டி கடாசிப்புடுவேன். ஒளுங்கா மறு வாதையா இங்கனேயே கெட—

அவள் ஏதோ பேச முற்பட்டாள்.

''வேணாம் அயித்தா வீணா ரௌசு பண்ணி வம்பு பண்ணாதே.''

"நான் அப்படித்தான் போவேன் போனா என்ன பண்ணுவே தலய சீவிப்புடுவியா.''

''சீவுவேண்டி நெஜமாலுமே சீவுவேன்... நீ... வேணா பாரு... என்னோட பேச்சு மீறிப்போனே...அது கண்டிப்பா நடக்கும்.

அவளிடம் சண்டை போட்டுவிட்டு வெளியே போய் விட்டான் பழனிச்சாமி.

மாலையில் வந்தபோது அயித்தா வீட்டில் இல்லை அக்கம்பக்கத்தில் விசாரித்ததில் அவள் காலையில் அவன் வெளியேபோன கொஞ்சநேரத்திற்க்கெல்லாம் ஒரு பையில் துணிகளை எடுத்து அடைத்துக் கொண்டு போனதையும்.

''இந்த நாசமாப்போற நாயோட இனி குடும்பம் நடத்த யாரால ஆவும் இவனைவுட்டு ஒரேயடியா போயிட றேன். இந்த ஆளோட இனிமே லோலாயப்பட முடியா துடா சாமி...''

என்று நாலுபேருக்குக் கேட்கும் படியாக பேசிக் கொண்டு போனதைப் பார்த்ததாகவும் இரண்டு மூன்றுபேர் கூறினார்கள்.

அவள் இங்கிருந்து வெளியேற ஏதோ ஒரு முகாந்திரத் திற்காக காத்துக்கொண்டிருந்துவிட்டு, இப்பொழுது ஏதோ முடிவுடன்தான் வெளியேறி இருக்கிறாள் என்பதை புரிந்து கொண்டுவிட்டான்.

அயித்தாவின் இந்தமாதிரி காரியங்களுக்கு அவளுடைய பிறந்தவீட்டாரும் ஒத்துழைப்பதாகவே அவன் முடிவுக்கு

வந்தான். எனவே இனி இதுபற்றி அவளுடைய பிறந்த வீட்டாரிடம் நியாயம் கேட்பதிலும் அர்த்தம் இல்லை.

ஏறவானத்தில் சொருகி இருந்த வீச்சருவாளை உருவி எடுத்து அதை வெளியே தெரியாமல் பழுப்பு நிற துண்டொன்றில் சுருட்டி எடுத்துக்கொண்டான்.

அவன் மனதில் அவன் நிகழ்த்தப்போகிற காரியத்தின் நிகழ்ச்சிகள் அப்பொழுதே படிந்துவிட்டது.

மாலை மங்குகிற நேரத்தில் ஜல்லுத்து மலைச்சரிவில் பாறையொன்றில் காத்திருந்தான்.

அவன் யாருக்காக காத்திருந்தானோ அவர்கள் சேர்ந்து ஜோடியாக வராமல் வெவ்வேறு திசையிலிருந்து தனித்தனியே வந்தார்கள். மலைக்குன்றுகள் நிறைந்த அந்தப்பகுதியில் ஒரு மறைவிடத்திற்குப் போனார்கள்—நீண்டநேரம் பேசிக்கொண்டிருந்தார்கள்— மனதையும் உணர்ச்சிகளையும் அக்கினிக்குழம்பாக்கிக் கொண்டு பாறையில் உட்கார்ந்திருந்த பழனிச்சாமி மேல்துண்டை எடுத்து தலையில் வரிந்து கட்டிக்கொண்டான்— பாறை மேல் வைத்திருந்த அருவாளை எடுத்துக்கொண்டு பாறையிலிருந்து கீழே குதித்தான்.

இன்னும் பொழுது முழுமையாக சாயவில்லை.

அவர்கள் மறைவிடம் தேடிப்போன பாறை அருகில் போய் நின்றான். அங்கே அவன் கண்ட காட்சி அவனது ஆவேசத்தை மேலும் அதிகமாக்கியது.

பாறைக்கற்கள் நிறைந்த அந்த இடத்தை இம்மாதிரி காரியங்களுக்காகவே சரி செய்து கொண்ட மாதிரி தரை அதிக கற்கள் இல்லாமல் இருந்தது.

அயித்தா கீழே படுத்திருக்க வீரன் அவள் மேல் பார்த்திருந்தான்.

"நாதேரி நாயே கள்ள புருஷன பாக்கத்தான் அடிக் கொருதபா இங்கே வாரியாடி."

அயித்தாமேல் படர்ந்திருந்த விரனின் மயிரைப்பிடித்து தூக்கியவேகத்தில் அவன் முகத்தில் முதல்வெட்டு விழுந்தது. அவனிடமிருந்து விடுபட்டு ஓட அவன் முயன்ற போது அவனது விலாப்பகுதியில் அடுத்த வெட்டு விழுந்த வேகத்தில் வெளியே சரிந்த குடலை அழுத்திப்பிடித்துக் கொண்டு அவன் ஓடினான்... கொஞ்சம் தூரம் ஓடியவன் பெரிதாக அலறிக்கொண்டே தரையில் புரண்டான்.

பீதியுடன் அயித்தா ஒரு பாறை மறைவுக்கு ஓடினாள்' அடுத்து அவன் ஆவேசம் அவள் பக்கம் திரும்பியது. அருவா ளுடன் அவளை நோக்கிப் பாய்ந்தான். அவள் அலறிக் கொண்டு அங்குமிங்கும் ஓடிப் பார்த்தாள். ஒற்றையடித் தடத்தில் ஓடினாள். கிட்டத்தட்ட ஊர் எல்லையில் உள்ள அந்த டீக்கடையை அவள் தொடும்போது அவளுடைய தலை மயிரைப் பிடித்து விட்டான் அவன்.

ஃ ஃ ஃ

ஒரு கையில் அயித்தாவின் துண்டித்த தலையும், ஒரு கையில் அரிவாளுமாக பழனிச்சாமி காரிப்பட்டி போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகிறான், என்கிற செய்தி காட்டுத்தீ போல பரவ அந்தக் கோரக் காட்சியைப் பார்க்க ஒரு பட்டா ளமே திரண்டு அவன் பின்னால் வர, ரொம்பவும் சாதாரண மாகத்தான் இரு கொலை செய்தோம் என்கிற உணர்வுகூட இல்லாமல் துண்டித்த தலையுடன் போலீஸ் நிலையத்திற்குள் சென்று சரணடைந்து விட்டான்...

# 5

வழக்கும், சாட்சிகளும் மாலை நேரத்தில் நடந்த இரு கொலைகளும் ஒன்றுக்கொன்று பிரிக்க முடியாமல் போன

சம்பவங்களும், வண்டிக்கார வீரனின் மரண வாக்குமூலம், என்ன வுட்டுரு... என்று அலறிக்கொண்டு ஓடிய அயித்தாவை துரத்தி வந்து வெட்டியதை நேரில் பார்த்த சாட்சிகளும்...

வழக்கு செஷன்சுக்கு வந்தபோது செஷன்ஸ் நீதிபதி பழனிச்சாமியின் கொடூரத்தைப் பார்த்து மனதை இறுக்கமாக்கிக் கொண்டு விட்டார்.

திடீரென்று ஏற்பட்ட ஆத்திரம், உணர்ச்சி வேகம், திட்டமிடப்படாத கொலை. உள்நோக்கமே இல்லாத நிகழ்ச்சிகள் என்று பிராசிகியூஷன் தரப்பில் பல உத்திகளில் வாதாடப் பட்டபோதும் அந்த நீதிபதியின் முடிவை மாற்றவே முடியவில்லை—

அந்தப் பெண் சாலையில் அரை நிர்வாணமாக உயிருக்கு பயந்து ஓடியதைப் பலர் பார்த்திருக்கிறார்கள்— இதை இங்கே பல சாட்சிகள் நிரூபித்து இருக்கின்றன. "என்னை விட்டுரு... என்ன கொன்னுப்புடாதே, என்ன கொன்னுப் புடாதே, என்று அந்தப் பெண் உயிருக்கு மன்றாடிக் கொண்டே சாலையில் ஓடியிருக்கிறாள். மனதிற்குப் பிடித்தமில்லாத கணவனுடன் அவள் வாழ்ந்திருக்கிறாள். குற்றவாளியான பழனிச்சாமியை ரொம்ப ஆரம்பத்திலிருந்தே அவள் விரும்பவில்லை. இதுவும் பழனிச்சாமிக்கு ஒரு கட்டத்தில் தெரிந்திருக்கிறது. அப்படித் தெரிந்தபோதே அவர்கள் சமூக வழக்கப்படி துரும்பு கொடுத்து விவேகத்தை முறித்துக் கொண்டிருக்கலாம். அல்லது நீதிமன்றத்தின் உதவியை நாடியிருக்கலாம். இதற்கு எதிரிக்கு நிறைய கால அவகாசம் இருந்திருக்கிறது. ஆனால் இவை இரண்டையும் செய்யாமல் வீரனையும் அயித்தா ஆகிய இருவரை ஒரே நேரத்தில் கொலை செய்ய பல நாட்களாகவே திட்டமிட்டிருந்திருக்கிறார். அதுமட்டுமல்ல. அவர்கள் இருவரையும் ஒரே இடத்தில் வைத்துக் கொலை செய்யவும். அதற்கான சூழ்நிலைக்காகவும் காத்துக் கொண்டிருந்திருக்கிறார். இது ஒரு காட்டுமிராண்டித்தனமான, மனிதாபமில்லாத செய

லாகும். இங்கே இவருடைய ஆத்திரத்திற்கு இரண்டு உயிர்கள் பலியாகியிருக்கின்றன. இந்தக் கொடூரமான கொலையைச் செய்த பழனிச்சாமிக்கு தூக்கு தண்டனை யைத் தவிர அதிகபட்ச தண்டனை ஏதுமிருப்பதாக தோன்ற வில்லை. எனவே குற்றவாளி பழனிச்சாமிக்கு தூக்கு தண்டனை விதித்து தீர்ப்பளிக்கிறேன்.

ராமகிருஷ்ணன் எதிர்பார்த்த தீர்ப்புதான் இது. ஊரறிய செய்த இந்த இரட்டைக் கொலையும் வழக்கு விசாரணையும் அனைவராலும் எப்படி உன்னிப்பாக கவ னிக்கப் பட்டதோ, அதேபோல தீர்ப்பு மிகுந்த பரபரப்புடன் எதிர்பார்க்கப்பட்டது.

பழனிச்சாமிக்கு தூக்குத் தண்டனை என்று முடிவாகி விட்டபோது அவன் அண்ணன் சீரங்கன் ஆடிப்போய் விட்டான்..

ஆரம்பத்திலிருந்தே ராமகிருஷ்ணன் இந்த வழக்கில் தலையிடுவதில்லை, என்று முடிவு செய்துவிட்டதால் செஷன்ஸ் தீர்ப்பை எதிர்த்து ஹைகோர்ட்டில் அப்பீல் செய் வதிலும் ராமகிருஷ்ணன் ஒதுங்கிக்கொண்டு விட்டான்.

இந்த இரட்டைக் கொலையில் சாட்சி, சந்தர்ப்பம் விசாரணை வழக்கின் தீர்ப்பு என்று எல்லா சாதக பாதகங் களையெல்லாம் விட தனிப்பட்ட முறையில் பழனிச்சாமியின் செய்கை சரியில்லை என்று ஆரம்ப முதலே அவன் மனதில் ஒரு அழுத்தமான எண்ணம் விழுந்து விட்டது.

# 6

அடுத்து வந்த நாட்களில் அவன் தன் விவகாரத்திற்கான காரியங்களில் மூழ்கிப் போனான்.

மேட்டுப்பட்டி அருகில் உள்ள முன்னாள் பாராளுமன்ற உறுப்பினரும் அவனுடைய நண்பருமான ராமலிங்கத்தின் பங்களாவிலேயே திருமணத்தை நடத்த முடிவு செய்து விட்டான்.

அவனுக்குத் தன் மனம்போல பெண் அமைந்திருந்தால் அந்தக் கல்யாணம் நடக்கும் இடமே வேறயாக இருந் திருக்கும். சேலத்தில் ரத்தினவேல் கல்யாண மண்டபம், தெய்வீகம், போன்ற இடங்களில் கல்யாணத்தை வைத்து அமர்க்களப்படுத்தி யிருப்பான். ஆனால், இப்பொழுது தான் செய்து கொள்ளப்போகும் கல்யாணம் என்பது ஒரு சடங்கு போல மட்டுமே அவன் மனதில் இடம் பெற்றிருந்தது. அதிக மான குதூகலமோ, அதிசமான ஏமாற்றமோ இல்லை.

"வருகிறவர்கள் வரட்டும்" என்ற முடிவுடன் சேலம் நகரை விட்டு ஒரு பதினைந்து கிலோ மீட்டர் தூரம் தள்ளி ஆத்தூர் நெடுஞ்சாலையோர கிராமமொன்றில் கல்யாண ஏற்பாடுகளை மிக நிதானமாக செய்து கொண்டிருந்தான். இதற்கு மத்தியில் கோர்ட் வழக்கு என்று அதையும் அவ்வப் பொழுது கவனித்துக் கொண்டான்.

பழனிச்சாமியின் வழக்கு ஹைகோர்ட்டில் அனுமதிக்கப் மட்டு நம்பராகிவிட்ட செய்தியையும் யாரோ அவனிடம் சொன்னார்கள்.

ஃ ஃ ஃ

சாம்பவுண்டுக்குள் பெரிய பந்தல் போடப் பட்டிருந்தது கார் வைத்துக் கொண்டிருக்கிற அவனது நண்பர்கள் உட்பட பலர் அவன் திருமணத்திற்கு வந்திருந்தார்கள்.

அவன் புதுமனைவி தாயி என்கிற தாயம்மாள். அழகானவள். அவ்வளவு நிறம் என்று சொல்ல முடியா விட்டாலும் கருப்பு இல்லை. அவள் பிறந்த இடத்தில் அதிகம் படிப்பறிவு இல்லாத காரணத்தால் நடை, உடை,

பாவனை எல்லாவற்றிலுமே ஒருவித கிராமிய அம்சங்களே நிறைய வெளிப்பட்டது.

கழுத்து நிறைய பட்டை பட்டையாக காசு மாலையும், இடுப்பில் நான்கு விரல்கடை அளவு ஒட்டியானமும், காலில் தண்டையும், காஞ்சிபுரம் பட்டை, கிராமிய பாணியில் கட்டிக் கொண்டு அவள் அவனருகில் வந்து நின்றபோது அவனுக்குக் கொஞ்சம் ஏமாற்றமாகத் தானிருந்தது.

அவன் படித்தவன். இளம் வழக்கறிஞன் வாழ்க்கையின் யதார்த்தங்கள் புரியாதவன் அல்ல. அவனிடம் இன்றைய வாழ்வைப் பாதித்துக் கொண்டு நிற்கும் சினிமா பாணி கனவுகள் இல்லை. ஆனால் ஒரு படித்த சராசரி வாலிபன் மனதில் உள்ள சில எதிர்பார்ப்புகள் இருந்தது. தாயம்மாவைப் பார்க்கும் போது அந்த அளவு கோலை மட்டுமே வைத்து அளந்து பார்த்தான்.

மனம் சமாதானமடைய மறுத்தது. மலர்களால் அலங்கரிக்கப்பட்ட சயன அறை. மலர் தூவப்பட்ட கட்டில் பின்னணியில் ஆனந்த பைரவிராகத்தில் நாயனத்தின் இசைப் பொழிவு, தோழிகள் நான்கைந்து பேர் கையைப் பிடித்து அழைத்து வந்து சாந்தி முகூர்த்த அறைக்குள் புதுமணப் பெண்ணை உள்ளே தள்ளிவிட்டு கதவை சாத்தி விட்டு கதவுக்கு வெளியே நின்று சிரிக்கும் ஒலி.

பால் தம்பளருடன் கணவனை நெருங்கி கையில் வைத்துள்ள பால் தம்ளரைக் கொடுத்து, அவன் பாதங்களில் விழுந்து நமஸ்காரம் செய்ய, மிகுந்த எதிர்பார்ப்புடன் அவளை வாரி எடுத்து நிறுத்தி அணைத்து முத்தமிட்டபடி கட்டிலில் சாய்த்து.........

இந்த மாதிரி ஆதிதக் கற்பனைகளையெல்லாம் செய்து கொண்டிருக்காமல் ஒரு சாதாரண — ஆனால் ஒரு பரபரப்பான மனோ நிலையுடன் தான் அந்த அறையில் அவளை எதிர்பார்த்திருந்தான்.

யாரோ இரண்டு பேர் அவளை அழைத்து வந்து அறையில் விட்டுவிட்டுப் போனார்கள்—

ரொம்ப நேரம் வரை அவள் நின்ற இடத்திலிருந்து நகரவேயில்லை.

ஒரு கிராமந்திர கட்டுப்பாட்டில் தாய் தந்தை இல்லாத நிலையில் அண்ணன் செங்கோடனின் ஆதரவில் வளர்ந்தவள். அந்தஸ்தில் அவனைவிட குறைவே — எனவே மனதில் இயல்பாக உள்ள தாழ்வு உணர்வினால் தயங்கி நிற்கிறாள் என்றுதான் ஆரம்பத்தில் நினைத்தான்—

ஆனால் அவளோ அவன் இரண்டுமுறை அழைத்த போதும் அவனிடம் வரவில்லை. அவனை நிமிர்ந்து பார்க்கவும் இல்லை. அவளது இந்த இயல்பினால் கோபம் கொள்ளாத அவன் சிரித்துக் கொண்டே அவள் அருகில் வந்து நின்று அவளுடைய இரண்டு தோள் பட்டையிலும் கை வைக்கப் போனபோது அவள் மிரண்டு போய் அப்பால் நகர்ந்து கொண்டதுதான் அவனுக்குப் பிடிக்கவில்லை.

"வா. தாயம்மா இப்படியே வெக்கப்பட்டுகிட்டு ராவு பூரா நிக்கப் போறியா?"

அவள் திடீரென்று அழ ஆரம்பித்தாள். உடம்பு லேசாக குலுங்கியது.

"ஏன் தாயி அழறே... வா... நான் உன்னை ஒண்ணும் செஞ்சுட மாட்டேன்... வா... ஏதாவது பேசிகிட்டு இருப்போம்... அவன் அன்புடன் அவள் கையின் மணிக்கட்டைப் பிடித்தான். அவன் பிடியிலிருந்து தன் கையை விடுவித்துக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டாள்.

"என்ன வுடுங்க..."

"ஏன் தாயி."

"ஏன் அழுவறே.. நான் இப்ப உன்ன என்ன செஞ்சுப் போட்டேன்... வா... வந்து உக்காரு... இதமாதிரி சந்தர்ப் பங்கள்ள பொம்பளைங்களுக்கு உள்ளூர ஒரு பயம் இருக்கும். வாஸ்தவம் தான். அதுக்காவத்தான் ஒருத்தர்கொருத்தர் மனம் விட்டு கொஞ்ச நேரம் பேசணும்னு சொல்லுவாங்க... உன்னபத்தி எனக்கு அதிகமா தெரியாது... தூரத்து முறை யிலே எனக்கு நீ... சொந்தம்... என்னபத்தியும் உனக்கு அதிகமா தெரியாது... இல்லையா?

அவளுடைய கரம் இன்னும் அவன் பிடியில் இருந்தது. அவன் பேசிக் கொண்டிருக்கும் போதே அவன் முற்றிலும் எதிர்பாராத நேரத்தில் அவன் பிடியிலிருந்து தன் கரத்தை மூர்க்கமானதொரு வேகத்துடன் உருவிக் கொண்டு அப்பால் போய் நின்று அவனை வெறுப்புடன் பார்த்தாள்.

அந்த ஒரே பார்வையில் அவன் முதலிரவு உற்சாகம் அனைத்தும் குன்றிப் போய் விட்டது.

அவன் மீண்டும் அவளை நெருங்கும் போது.

என்கிட்டே வராதீங்க... உங்கள எனக்குப் பிடிக்கல...

இந்த வார்த்தையைக் கேட்டு ஆடிப் போனான் ராமகிருஷ்ணன்...

"என்ன பிடிக்கலயா?"

"ஆமாம் பிடிக்கல..."

இவள் பட்டிக்காடு. அதிகம் படிக்காதவள். யதார்த்த நிலையில் வாழ்வின் ஏற்ற இறக்கங்களை புரியாதவள். கிராமந்திர கட்டுப்பாட்டில் வளர்ந்தவள், என்றெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தவனுக்கு என்னைப் பிடிக்கலயா, என்று அவன் கேட்ட கேள்விக்கு அவள் கொஞ்சம் கூட பிசிரில்லாமல் அழுத்தம் திருத்தமாக ஆமாம். பிடிக்கலை என்று முகத்தில் ஒரு வெறுப்பை வரவழைத்துக் கொண்டு சொன்ன அந்த வேகம் அவனை சாய்த்து விட்டது.

ஒரு வேளை இவள் பேசத் தெரியாமல் பேசுகிறாளா... அல்லது முதலிரவு பயத்தில் அப்படிப் பேசுகிறாளா.

இதை ஊர்ஜிதம் செய்து கொள்ள அவன் துடித்தான்.

"நெஜமாத்தான் என்ன பிடிக்கலயா... தாயி" மீண்டும் கேட்டான்.

"அந்த செல்லியம்மன் மேலே சத்தியமா சொல்றேன்."

"அடிப்பாவி பின்ன ஏன் என்ன கல்யாணம் கட்டிக்க சம்மதம் சொன்னே?"

"நான் எங்கன சொன்னேன். எல்லாம் என்னோட அண்ணன்காரன் செங்கோடன் செஞ்ச வேலை. என்னன்ட ஒரு பேச்சுக்கூட கேக்காம இத ரொம்ப கவுலா முடிச்சுப் புட்டான்.

தான் கேட்ட கேள்விகளுக்கு மிகத்தெளிவாக பதில் சொல்லிக் கொண்டு வந்த தாயம்மாளை சில வினாடிகள் பார்த்தான்.

இவள் அதிகம் படிக்காதவள் நகர, நாகரிகத்தின் காற்றை அதிகம் சுவாசிக்காதவள். மனதில் ஒன்றை வைத்துக்கொண்டு வெளியே ஒன்று பேசத் தெரியாதவள். மனதில் உள்ளதை அப்படியே சொல்கிறாள். இதன் பின் விளைவுகள் பற்றி அவள் சிந்திக்காதவளாக இருக்கலாம் ஆனால் இதன் முடிவு எப்படி இருக்கும் என்பது ஓரளவு தெரிந்தவளாகக்கூட இருக்கலாம்......

"தான் ஒரு சாதாரண படிப்பறிவு இல்லாத பெண்ணின் முன்னால் சிறுமைப்பட்டு நிற்பதாகவே அவன் அவமானத்துடன் குன்றி கட்டிலில் போய் உட்கார்ந்தான்...

உள்ளே வந்தவுடன் எந்த இடத்தில் நின்றாளோ, அதே இடத்தில் சுவற்றில் சரிந்து உட்கார்ந்தவள் விடிய விடிய அப்படியே உட்கார்ந்திருந்தாள்.

அவளிடம் மேலும் சில கேள்விகளைக் கேட்டால் தன்னை பிடிக்காமற் போனதற்கான காரணத்தைச் சொல்லியிருப்பாள்.

ஆனால் இதற்குமேல் அவளிடம் கேள்விகளைக் கேட்பது தனது அந்தஸ்துக்கு அகௌரவமானதாக நினைத்தான். அதே நேரத்தில் இவளிடம் தன்னை பிடிக்காமற் போனதற்கான காரணத்தை இவளிடம் தெரிந்துகொள்வதையும் அவன் விரும்பவில்லை,

அந்த இரவை ஒரு நரகமாக கடந்த அசதி அவனுக்கு.

விடிந்தது தூங்கியெழுந்தான்.

தொடர்ந்து வந்த நாட்களில் அவனது வழக்குகளைப் பற்றி குறிப்பெடுக்கவும், தொடர்ந்துவரும் வழக்குகளுக்கனான முன்னேற்பாடுகளை செய்வதுமாக இருந்தான். சேலத்தில் உள்ள அவனது அலுவலத்தில் முன்பு இருந்ததைவிட அதிக நேரம் உட்கார்ந்திருந்தான். முன்பெல்லாம் இரவு ஒன்பது மணிவரை கட்சிக்காரர்களுடன் அடுத்தநாள் விசாரணக்கு வரும் வழக்குகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பான். ஜுனியர்களிடம் அதற்கான உத்திகள் பற்றி கருத்து பரிமாற்றங்களில் கலந்துகொண்டுவிட்டு காரில் கருமாபுரம் புறப்பட்டுவிடுவான்.

ஆனால் இப்பொழுதெல்லாம்...

இரவு பன்னிரெண்டு. ஒரு மணி வரை தன் காந்தி ரோட் அலுவலகத்தில் இருக்க ஆரம்பித்தான். சில நாள் கருமாபுரம் போவதையே தவிர்த்துக் கொண்டான்.

"என்னடாலே ராமு புது கண்ணாலம் கட்டிக்கிட்டவன் பொழுதோட ஒரு வராமே நடுசாமத்தில் எல்லாம் வாறே...இப்படி வந்தா கட்டிக்கிட்டவ என்னடாலே செய்வா... அதும் வயதுப் பொண்ணுதானே அதுக்கும் ஆசையெல்லாம் இருக்காதாடா...? வெவறங்

கெட்டவனா...இருக்கியேடா...கேசு கேசுன்னு இப்படியா... பொளுதன்னிக்கும் டவுன்லேயா கெடப்பே?...என்று தாயார் செல்லத்தாயி கூறும்போது அவன் மனம் சங்கடப் படும். விவாகம் நடந்த நாளாக தனியறையில் நடக்கும் அந்த நாடகம் பற்றி தாயாரிடம் எப்படிக்கூறுவது. ஒவ்வொருநாள் இரவும் அவன் வருவதும் அவன் வருவதற்கு முன்னால் அவள் அவன் அறையில் தரையில் தனியே பாயில் படுத்திருப்பதும், மனக்கிளர்ச்சியுடன் அவளை அவன் தொட்டு எழுப்பும்போது அவள் சலிப்புடன் உடம்பை நெளித்து அப்பால் நகர்வதும்.

இந்தப்படிக்காத கிராமத்துப் பெண்ணின் மனதிலும் தான் எப்படிப்பட்ட திண்மை...

இவள் யாருக்கா தன் பத்தினித்தன்மையை பாது காக்கிறாள்.

ஊரறிய ஒருவனிடம் கழுத்தில் தாலியை ஏற்றுக் கொண்டவள்—

ஆனால்......

சயன அறையில் நான் உனக்குச் சொந்தமானவள். அல்ல. உடம்புமட்டுமல்ல. என்னை நீ தொடுவதையே விரும்பவில்லை என்பது போல தனித்தன்மையை காப் பாற்றிக்கொண்டு வருகிறாளே!—

இந்த அந்தரங்கநாடகம் இன்னும் எத்தனை நாளைக்கு தொடர முடியும். தொடரும்படி விடமுடியும்... இதை வெளிச்சத்துக்குக்கொண்டு வந்தாக வேண்டும். இனி இதில் சாதகபாதகங்கள் பற்றி யோசித்துப் பிரயோஜனமில்லை. மான அவமானம் பற்றி நினைத்தும் பிரயோஜனமில்லை.

அன்று அவன் ஒரு முடிவுடனேயே இருந்தான்.

எந்தக்கேள்வியை அவளிடம் கேட்க வேண்டாம் என்று நினைத்துக் கொண்டிருந்தானோ.

எந்தக்கேள்வியைக் கேட்டால் தன் அந்தஸ்துக்கு இழுக்கு என்று எண்ணிக்கொண்டிருந்தானோ அந்தக்கேள்வியை இன்று எப்படியாவது கேட்டுவிட வேண்டியதுதான் என்ற முடிவுக்கு வந்தான்.

என்னைப்பிடிக்காமல் போவதற்குக் காரணம்?

இந்தக்கேள்விக்கு இன்று இரவுக்குள் பதில் தெரிந்து கொண்டுவிடவேண்டும். அந்த பதில் தெரிந்தவுடன் அடுத்த நடவடிக்கைக்கான செயலில் இறங்கவேண்டியதுதான்.

இரவில் இருவருமாக சயன அறைக்குள் போவதும், காலையில் இருவரும் ஒருவர் பின் ஒருவராக எழுந்து வெளியே வருவதும். அவனுக்கு வெளியே ஏற்படும் தேவைகளை மௌனமாகச் செய்து கொடுப்பதும். அவனுக்கு சாப்பாடு பறி மாறுவதும் உடை எடுத்துக்கொடுப்பதும்...

இதில் கூட ஒரு கணவன், மனைவி உறவின் அர்த்தத்தை விட, ஒரு பணிப் பெண்ணின் செய்கையே தூக்கலாக இருந்தது.

கட்டுப்பாடான சூழலில் வளர்ந்தவள், பட்டப் படிப்பு படித்து வெற்றிகரமாக வக்கில் தொழில் செய்யும் கணவனுடன் மனம், வாக்கு செயல் இவை ஒன்ற சிறிது காலம் பிடிக்கும். போகப்போக எல்லாம் சரியாகிவிடும். என்று தான் ராமகிருஷ்ணனின் பெற்றோர் நினைத்தனர். இதனால்தான் அவர்களுடைய அந்தரங்க விஷயங்களில் அதிகம் தலையிடாமலே இருந்துவிட்டனர். மேலும் தாயம்மாள் இயல்பிலேயே ரொம்ப கூச்ச சுபாவமுள்ளவளாக இருந்தாள். மாமியாரிடமே கூட அவள் நாளெல்லாம் இரண்டு மூன்று முறை பேசினாலே அதிகம்.

ஒருமுறை ராமகிருஷ்ணனின் தாயார் செல்லத்தாயி தாயம்மாளிடம் கேட்டாள்.

“என்னபுள்ளே ராவுல ரெண்டு பேரும் சந்தோஷமா இருக்கீயளா... ரொம்பவெக்கப்பட்டுகினு செவனேன்னு கட்டில்ல குந்திகினு இருந்து புடாதே. என்மவன இழுத்துப் போட்டுக்க. கொஞ்சம் ஓசாவுட்டே படுவா எங்கனை யானும் மேயப்பூடுவான். இந்த காலத்து பசங்களை நம்பவே கூடாது என்ன நான் சொல்றது வெளங்குதா தாயி...”

என்றாள் குறும்புடன் கண்களை சிமிட்டி. ஆனால் தாயம்மாள் மாமியாரின் முகத்தை நிமிர்ந்து கூடப் பார்க்க வெட்கப்பட்டுக்கொண்டு அப்பால் போனாள்...

“களுதைக்கு வெக்கத்தைப்பாரு...வெக்கத்தை! ராவக்கி ஒம்போது மணியானா உள்ளார பூந்துக்கரா, விடிஞ்சு ஏளுமணியானாலும் வெளியே வர மாட்டேங்கறா. அடே யப்பா சரியான உசித்திப்புள்ள தாண்டி நீயும்...

இம்மாதிரி பேசினால் தாயம்மாள் ஏதும் பேசுவதில்லை. அதிகம் வெட்கப்படுகிறாள் என்பதாலும், அதுபற்றி செல்லத்தாயி ஏதும் கேட்பதையும் நிறுத்திக் கொண்டு விட்டாள்.

கோர்ட் சாம்பரில் அலகாபாத் 1964—ல் மூழ்கியிருந் தான். ஒரு பிரபலமான கிரிமினல் வழக்கின் சைட்டேஷன் அதில் இருந்தது.

படித்து முடித்து குறிப்பெடுத்துக்கொண்டான். கடின மான புத்தகத்தில் ஒரு காகிதத்தைச் சொருகினான்.

சென்னை ஹைகோர்ட்டில் வெள்ளாளகுண்டம் இரட் டைக் கொலை வழக்கு பழனிச்சாமியின் வழக்கு நம்பராகி விட்டதையும். வழக்கு விசாரணைக்கு வரும் தேதியையும். யாரோ யாரிடமோ சொல்லிக்கொண்டிருந்தது காதில் விழுந்தது.

கோர்ட் கூடியது. அன்று நடத்தவேண்டிய இரண்டு வழக்குகள் வெவ்வேறு நீதிமன்றங்களில் இருந்தன. வேறு ஒரு கோர்ட்டில் நடத்தவேண்டிய வழக்கிற்கு பிற்பகல் இரண்டுமணி வரை பாஸ் ஓவர் செய்யச்சொல்லிவிட்டு செஷன்ஸ் வழக்கை எடுத்துக்கொண்டான்.

அந்த வழக்கின் சாட்சிகள் விசாரணை, குறுக்கு விசாரணை எல்லாம் முடியும் போது பிற்பகல் இரண்டு மணியாகி விட்டது.

அதை முடித்துக்கொண்டு வேறு கோர்ட்டுக்கு வந்தான்.

அங்கும் விசாரணை குறுக்கு விசாரணை எல்லாம் ஒவ்வொன்றாக முடிய மாலை மணி ஐந்தாகி விட்டது.

அடுத்த நாளுக்கு உண்டான வழக்கைப் பற்றி இரண்டு ஜூனியர்களிடம் காரில் வரும் போதே விவாதம் முடிந்தது.

ஜூனியர்களை காந்தி ரோடில் உள்ளே தன் அலுவல கத்தில் இறக்கிவிட்டுவிட்டு காரில் கருமாபுரம் வந்து கொண்டிருந்தான்.

அன்று இரவு தாயம்மாளிடம் என்ன பேச வேண்டும் என்பதற்கான ஓர் ஒத்திகை பார்த்துக் கொண்டான். அவளிடம் கேட்கவேண்டிய கேள்விகளின் தன்மைகள் எப்படி அமைய வேண்டும். பெரிய பெரிய வார்த்தைகளைப் போட்டு அவளைக் குழப்பி விடாமல், படிக்காத ஒரு பெண்ணுக்கு புரிகிறமாதிரி பேசி அவள் மனதில் என்ன இருக்கிறது என்பதை தோண்டிப் பார்க்கவேண்டும்... அது தெரிந்த பின்புதான் மற்ற விஷயங்கள்...

ராமகிருஷ்ணனின் கார் சேலம் எல்லையைத் தாண்டி அயோத்தியாபட்டணத்தை தொட்டது.

சமீபத்தில் பெய்த நல்ல மழையால் சேலம் ஆத்தூர் சாலையின் அழகு கூடியிருந்தது. சாலையோர வயல்களில்

குச்சிக்கிழங்கும், கரும்பும், கடலையுமாக மாறி, மாறி பயிரிட்டு இருந்தார்கள். ஆளுயர சோளப்பயிர் சுற்றுச் சூழலை மேலும் பசுமையாக்கிக் கொண்டிருந்தது.

ராமலிங்கபுரம் தாண்டியாகிவிட்டது. 'காரிப்பட்டியை நெருங்கும்போது சாலையோர மலைக்குன்றின் அருகில்... அவன் பார்வை சென்ற போது அவன் உணர்வுகள் அப்படியே தட்டாமாலையாகச் சுற்ற நினைவுகள்கூட, கண்ணிமைக்கும் நேரத்தில் ஒரு சுழற்சிவட்டத்தில் சிக்கி, பின் நிதானப்பட்டது.

மனம் ரொம்பவும் பதட்டப்பட்ட மாதிரி வேகமாக அடித்துக் கொண்டபோது ஓட்டிவந்த காரை சாலையோரத்தில் நிறுத்திவிட்டான்.

இப்பொழுது அவன் பார்வையில் மிகத் தெளிவாகத் தெரியக்கூடிய தூரத்தில்,

தாயம்மா ஒரு வாலிபனுடன் பேசிக் கொண்டிருந்தாள்.

தாயம்மாளின் முகம் மட்டும் நன்றாகத் தெரிந்தது. அந்த வாலிபன் அவளைவிட சற்றே உயரமாக இருந்தான். அவளைவிட நிறமாகவும் இருந்தான். வேஷ்டியும் அரைக்கை சட்டையும் அணிந்திருந்தான்.

அவர்களுக்கு நடுவே இடைவெளி மிகக் குறைவாகவே, காற்றடிக்கும்போது அவள் புடவை அவன் மேலும், அவன் வேஷ்டி அவள் மேலும் படுகிறமாதிரி தூரம் மட்டுமே...

யார் அவன்? அவனுக்கும் இவளுக்கும் என்ன நெருக்கம். உறவினனாக இருந்தால் வீட்டிற்கு வந்து பேசலாமே. அந்தி சாய்ந்து கொண்டிருக்கிற இந்த மாலை வேளையில் இவர்களுக்கு இங்கே என்ன வேலை.

பொதுவான பார்வையிலிருந்து அவர்களை மறைக்க அங்கே மரம் செடி கொடி ஏதுமில்லை. மிகப் பெரிய

பாறைகள் இருந்தன. என்றாலும் அவர்கள் அதன் மறைவில் நிற்கவில்லை. பழக்கமானவர்களுக்கு மட்டுமே. அவர்கள் முகம் தெரியும். யார் என்பது அடையாளம் தெரியாமல் போக அந்த தூரம் மட்டுமே ஒரு திரை.

அவன் ஏதோ சொல்ல அவள் அழுதிருக்க வேண்டும். போட்டிருக்கும் துண்டினால் அவள் முகத்தைத் துடைப்பது தெரிந்தது.

ராமகிருஷ்ணன் காரை கிளப்ப இருந்த நேரத்தில் தாயம்மாள் அவன் பேசிக் கொண்டிருந்த வாலிபனிடமிருந்து பிரியாவிடை பெறுவதுபோல பெற்றுக் குறுக்குத் தடத்தில் போய்க் கொண்டிருந்தாள்.

அவள் போவதை அந்த வாலிபன் ரொம்ப நேரம் வரை பாறையருகில் நின்று பார்த்தான். அவளும் அடிக்கடி அவனைத் திரும்பிப் பார்த்துக் கொண்டே நடந்தாள்— அங்கிருந்து குறுக்குத்தடத்தில் நடந்தால் வீடு பக்கம்தான்.

தாயம்மாளுடன் பேசிக் கொண்டிருந்தவன் இப்பொழுது சாலைக்கு வந்துவிட்டான். ராமகிருஷ்ணனின் கார் அருகில் வந்து நின்றவன் சாலையைப் பார்த்தான்.

தன் காரை உரசினாற்போல வந்து நின்றுவிட்டு காரிப் பட்டி பக்கம் திரும்பிப்போகும் அவனை நன்றாகப் பார்த் தான்— ஒட்டுமொத்தமான அவன் பார்வையும், அதிக நாகரீகமில்லாத உடையும் அவனை ஓர் விவசாயியாகக் காட்டியது கிராப் தலைதான்— பார்க்க அதிக முரட்டுத்தன மில்லாத முகம். உடம்பு அருகில் பார்க்கும்போது செவ்வரி படர்ந்த புழுதி மண் போல ஒரு கருஞ்சிவப்பு, கையும், காலும், இரும்புபோல இருந்தது. கோடுபோட்ட அரைக்கை வெள்ளை சட்டைத் தோளில் ஆட்டையாம்பட்டி கெட்டித் துண்டு...

காரிப்பட்டி சாலையில் அவன் மறையும் வரை பார்த்துக் கொண்டேயிருந்துவிட்டுக் காரை ஸ்டார்ட் செய்தான்.

# 8

பழைய நாளைய வீடாக இருந்தாலும் ஓரளவுக்கு அதையே நவீன வசதிபடுத்தி வைத்திருந்தான் ராம கிருஷ்ணன்.

சாப்பாடு மேஜைமுன் வந்து இரவு எட்டு மணிக்கு மேல் உட்கார்ந்தபோது அவனுக்கு தாயம்மாள்தான் இரவு டிபனான இட்லியை ஒரு தட்டில் போட்டுக் கொண்டு வந்து அவன் முன்வைத்து பூண்டின் மனம் மணக்க மாமியார் அரைத்து வைத்திருந்த தேங்காய்ச் சட்னியை வெண்மை யான இட்லி மேல் ஊற்றினாள்.

அவனுக்கு டிபனை வைத்துவிட்டு தாயம்மாள் தூரமாக போய் நின்றுவிட்டாள். இட்லி சாப்பிட்டுக் கொண்டே அவளைப் பார்த்தான். அவள் முகம் அழுத மாதிரி இருந்தது.

அவள் தன்னிடம் வித்தியாசமான முறையில் பழகி னாலும் அவளைப் பற்றின ஓர் இரக்க உணர்வின் கசிவு அவன் மனதில் எப்பொழுதுமிருந்தது.

முதலிரவு அன்றுகூட அவள் தன்னைப் பிடிக்கவில்லை என்று சொன்னபோது கொஞ்சம் அதிர்ந்து போனானே தவிர தன் ஆண்மையின் ஆவேசத்தை மூர்க்கமாக வெளிப் படுத்தி அவள்மேல் ஆளுமை செலுத்த அவன் விரும்ப வில்லை. மாறாக அந்த நிமிஷமே அவள் மேல் இரக்கமே அதிகமாகச் சுரந்து நின்றது. அந்த இரக்கத்தின் கனிவுதான் அவனை இத்தனை நாள் நிதானப்படவும் வைத்துக் கொண் டிருந்தது.

அதுவேதான் இப்பொழுது.

"நீ சாப்பிட்டாச்சா தாயி?"

"அத்தை துண்ணச் சொல்லிச்சு துண்ணுட்டேன்."

"இந்த டிபன் இட்லியெல்லாம் யார் செஞ்சாக?"

"நாதான்"

"ஒனக்கு நல்லா சமைக்கத் தெரியுமா?"

"நீங்கதான் வூட்லேயே சாப்பிடறதில்லையே நாதான் நெதம் சமைக்கறேன்..."

அவள், கேட்ட கேள்விக்குத் தயக்கமில்லாமல் பதில் சொல்லிக் கொண்டு அவனைப் பார்க்காமல் தூரமாகவே நின்றாள்.

"அய்யா படுத்துட்டாரா?"

"ஆமாம்"

"அவன் டிபன் சாப்பிட்டுவிட்டு எழுந்தான்.

ஒன்பது மணிவரை வெளியே திறந்தவெளியில் உட்கார்ந்திருந்துவிட்டு எழுந்து உள்ளே வந்தான்.

அவன் படுக்கை அறைக்கு வரும்போது தாயம்மாள் தரையில் உட்கார்ந்திருந்தாள்.

இவள் மனதில் ஏதோ மாறுதல் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஒரு முடிவுக்கு வரமுடியாமல் தடுமாறுகிறாள். இவள் ஒரு அப்பாவியாகக்கூட இருக்கலாம். கள்ளங்கபடமற்றவளாகத்தான் தோன்றுகிறாள். எதையோ சொல்லப் பயப்படுகிறாள்— அல்லது தயங்குகிறாள். இல்லையென்றால் திருமணமாகி இத்தனை நாள் ஆகியும் அவள் ஒரு மனைவியாக இருக்கவேயில்லை... இவள் மனதில் இருப்பதை இன்று எப்படியாவது கொக்கிப் போட்டு வெளியே இழுத்துப் பார்த்துவிடவேண்டும். என்னைப் பிடிக்காம ஏன் கல்யாணம் செய்து கொள்ள சம்மதம் சொன்னாய் என்று கேட்டதற்கு, "நான் எங்கன சம்மதம் சொன்னேன். என்னோட அண்ணங்காரன் செங்கோடன் செஞ்சவேல இது. என்னன்ட ஒரு பேச்சுகூடக்கேக்காம இத ரொம்ப கவுலா முடிச்சுட்டான்"—

என்று மனதில் உள்ளதை பளிச்சென சொன்னவள்தான் இவள். எனவே எதையும் மறைத்துப் பேசுகிற சுபாவம் இருப்பவளாகத் தோன்றவில்லை.

"தாயம்மா... இங்கே வா... தைரியமா வா... உன்ன நான் ஏதும் செஞ்சுடமாட்டேன்...

அவள் தலையை கவிழ்த்துக்கொண்டு அவன் எதிரே வந்து நின்றாள்.

"வந்து கட்டில்ல உட்கார்."

மாட்டேன் என்பது போல தலையை அசைத்து விட்டாள். அவள் மனத்தின்மை அவனை உலுக்கியது.

"சரி பரவாயில்ல நான் கேக்கற கேள்விக்கு மனசைத் திறந்து பதில் சொல்லணும். எதையும் மறைச்சிட்டு பொய் சொல்லக்கூடாது."

"கேளுங்க."

"அன்னிக்கு உன்ன தொடவந்தப்ப என்னைத் தொடாதீங்க, எங்கிட்டே வராதீங்க... உங்கள எனக்குப் பிடிக்கலேன்னு சொன்னல்ல" அது ஏன்?

"உங்கள பிடிக்கலேன்ன உங்கள வெறுக்கறதா அர்த்தமில்லே."

"பின்னே என்ன அர்த்தம்."

புருஷன் முதல் இரவிலே தொடவந்தப்ப திருநீலகண்டர் மனைவி மாதிரி என்னத்தொடாதீங்கன்னு சொன்னா என்ன அர்த்தம்? அது எத்தனை பெரியதப்பு தெரியுமா? நம்ப பெரியவங்களுக்குத் தெரிஞ்சா எவ்வளவு பெரிய வெவகாரம் வரும் தெரியுமா!... சரி இப்ப கேக்கறேன்... என்னை ஏன் பிடிக்கலேங்கற...?

என்னமன்னிச்சிடுங்க உங்கள பிடிக்கலேன்னு சொன்னது உங்கள புடிக்காம இல்லே ஆனா...

"சொல்லு தைரியமா சொல்லு."

நா கொமரு மாமன கட்டிக்கிடனும்னு முடிவு செஞ்சு வச்சிருந்தேன்."

அதிர்ச்சியுடன் அவளைப் பார்த்தான் அவன்.

"அவன் யாரு கொமரு "

"அவியபேரு கொமாரசாமி வாழப்பாடி பக்கத்திலே சூளவாவாரம்...

"உறவுக்காரனா?"

அதென்னமோ தூரத்து உறவுண்டு. சொங்கோடு சொல்லிச்சு.

"அவனத்தான் கட்டிகிடனும்னு இருந்தியா?"

ஆமா... நாங்க ரெண்டு பேரும் கண்ணாலம் கட்டிக்கோணும்னு பச்சநாச்சி கோயில்லே வேண்டி கிட்டோம். ஆனா நாசமாப்போற என் அண்ணன்கார செங்கோடுக்கு இமி பிடிக்காம அவசர அவசரமா உங்கள பேசிமுடிச்சு பாக்கு வெத்தல மாத்திபுட்டு வந்திட்டான். அதுக்ககுத் தோதா கொமரு மாமனும் செங்கல்லோடு ஏத்திக்கினு வெளியூர் போனது கொஞ்ச நாளு அங்கனயே தங்கறமாதிரி ஆயிடிச்சு செங்கோடு அவசர அவசரமா காரியத்த முடிச்சுப்போட்டான்.

தாயம்மாளிடம் விசும்பல் ஒலி வந்தது...

"இன்னும் அவனத்தான் நெனச்சுக்கிட்டு இருக்கியா."

"ஆமாம் அவர என்னால மறக்க முடியல. உங்கமேலே எனக்கு வெறுப்பு இல்லீங்க. நீங்க பெரிய படிப்பெல்லாம் படிச்சவக. பிலிசர்கார் வச்சிருக்கிங்க. உங்க அய்யா பெரிய ஊர் கவுண்டரு. நீங்களும் பெரிய பண்ணக்கார குடும்பம்—நாங்க ஒங்களுக்கு கொஞ்சம் கிட்டால ஒறவு முறைங்கறத தவிர ஒங்களுக்கும் எனக்கும் ஏணி வெச்சாக்கூட எட்டாது."

அவளுடைய வெளிப்படையான பேச்சில் ராமகிருஷ்ணன் நெகிழ்ந்துபோனான்.

“செங்கோடு கிட்டால இதையெல்லாம் சொன்னேன் அது கேட்கல ஒரே பிடிவாதமாக இருந்துட்டான்,”

“கல்யாணத்துக்கப்பறமா கொமர பாத்தியா.”

“ஓ...ரெண்டு தபா பார்த்தேன். இன்னக்கிக்கூட பாத்துபேசிட்டுதான் வந்தேன். அவரு கூட நான் ஒதுங்கிக்கறேன் தாயி நீ உன் புருஷன் கூட சந்தோஷமா வாழ்க்கை நடத்துன்னு தான் சொன்னாரு ஆனா என்னோட மனசு இடங்குடுக்கலயே... காட்டுக்கொட்டாயிலே ரெண்டுதபா அவருகூட கல்யாணத்துக்கு முந்தியே படுத்திருக்கேனே. அந்த ஒடம்ப இன்னொருத்தருகிட்டே எப்படிங்க காட்றது.

ராமகிருஷ்ணன் அவளை ஒரு தேவதையைப் பார்ப்பது போல மரியாதையுடன் பார்த்தான்.

சூது வாதற்றவள்—கள்ளம் கபடு தெரியாதவள். கிராமத்துப் பெண் சாஸ்திரங்கள் சட்டங்கள் படிக்காமலே மனிததர்மம் பற்றி பாமரத்தனமாக தெரிந்துவைத்துக் கொண்டுருக்கிறாள். ஒரு பெண்ணின் பூஷணம் எது என்பதை மிக துல்லியமாக தெரிந்து கொண்டிருக்கிறாள்— இரவில் அவள் மேல் அவன் விரல்கூட படாமல் தன்னை பாதுகாத்து வருவதற்கான காரணத்தை கூறிவிட்டாள்— இனி எல்லாமே அவள் முடிவில் தான் இருக்கிறது.

இப்பொழுது இவளை என்ன செய்வது தண்டிப்பதா மன்னிப்பதா.

தவறுகளை தவறுகளாக ஏற்காமல் அதை ஏதோ ஒரு வகையில் நியாயப்படுத்திக்கொண்டு வாழ்க்கைப் போக்கை மிக மலிவாக்கிவிட்ட இந்தக் காலத்தில் மனித இயல்பில் நடந்த ஒரு விஷயத்தை வெளிப்படையாகக்கூறி தனக்கு நிவாரணம் கிடைக்கும் என்று காத்துக்கொண்டிருக்கிறாள்,

ஊரறிய தாலி கட்டிய கவணனின் சபன அறையில் தனியே நின்று தன் அந்தரங்கத்தைக்கூறிநிவாரணம்கிடைக்குமென்று காத்துக் கொண்டிருக்கிறாள்.

இவளை தண்டிப்பதா—மன்னிப்பதா தண்டிப்பது மிக சுலபம்.

ஆனால்...

கள்ளங்கபடமற்ற அவளை மன்னிக்கவே அவன் மனம் துடித்தது. மனித மன உணர்வின் இயல்பில் கொமாரசாமி காட்டுக்கொட்டகையில் இரண்டுமுறை படுத்துக்கொண்டதைக்கூட ஒளிவுமறைவு இன்றி கூறும் இவளைப்போய் தண்டிப்பதா... இப்பக்கூட பார்த்துப் பேசிட்டுத்தான் வந்தேன். என்று உண்மையை மறைக்காமல் கூறும் இந்த வெள்ளை உள்ளத்தைத் தண்டிப்பதா.

இவளை தண்டிப்பது தர்மமேயில்லை.

நீதிமன்றம் வழக்கு, சாட்சி, பொய்சாட்சி என்று நாள் பூராவும் தொழில் ரீதியில் வித்தியாசமான மனிதர்களுடன் பழகிப்பழகி மறந்துப்போன அவனுக்கு, தன் எதிரே நிற்கும் தாயம்மாள் மகத்தான மனுஷி போல தோன்றினாள். பொய்மையின் நிழல்படாத புத்தம் புதுமலர் போல தோன்றினாள்.

இவளைத்தண்டிப்பது தர்மமேயில்லை! இவளை மன்னித்து இவளை விடப் பெரிய மனிதனாகி விட வேண்டும்—

ராமகிருஷ்ணன் மனம் ஒரு முடிவை எட்டிவிட்டது. என்னோட அய்யா பெரிய ஊர்கவுண்டர். எல்லாம் கெடக்கட்டும். நான் உன்னக் கல்யாணம் கட்டிக்கறதுக்கு முன்னால ஒருமாதிரி வெறுப்போடதான் இருந்தேன் உன்னக்கட்டிக்க எனக்கு இஷ்டமே இல்லாமதான் இருந்தேன், ஆனா உன்ன கட்டிக்குட்ட பின்னால் நான் உன்

மேல என் பிரியத்தை காட்ட எனக்கு நீ சந்தர்ப்பமே தரலே கல்யாணத்துக்கு முன்னால உன்னப்பிடிக்காம இருந்தாலும் அதுக்கு பொறனால நான் உன்ன வெறுக்கல நீ என் கூட சௌஜன்யமா இருக்கமாட்டேங்கறயேங் கற கோபம்தான் எனக்கு இப்பக்கூட சொல்றேன். உன்னப்பத்தி நீ இத்தனை உண்மைகள் சொன்ன பொறவு கூட உன் மேலே இருக்கற என் அன்பு குறையல. நீ கல்யாணத்துக்கு முந்தி அப்படி இப்படி இருந்தாக்கூட பரவாயில்லே, ஆனா என்னோட வாழறதா முடிவு செஞ்சா உன்ன நீ மாத்திக்கணும். இப்பக்கூட உன்ன நான் வெறுக்கலே ஆனா இனிமே கொமாரசாமிய நீ பாக்கக்கூடாது. பேசக்கூடாது. என்ன கல்யாணம் கட்டிக்கிட்ட பிறகு நீ வேற ஆம்பளயோட பேசிக்கிட்டு இருக்கறத நம்ம சாதி ஜனங்க பாத்நாங்கன்னா என்னதான் கேவலமா பேசுவாங்க எங்க குடும்பகவுரவம் பளாப்பூடும்''

''என்னால அப்பிடியெல்லாம் கொமருமாமன பாக்காம இருக்கமுடியாதுங்க. கண்ணாலம் முடிஞ்ச அன்னிக்கு ராத்திரிகூட உங்ககூட படுக்கவராம இருந்ததுக்கு இதுதான் காரணம்... இதுக்கு முந்தி ரெண்டுதபா அவருகூட நான் படுத்துட்டேன். என்னோட மனசிலே அவரவச்சிகிட்டு உங்ககூட நான் எப்படிங்க படுக்க முடியும். அது சாமி குத்தமாயிடுங்க அப்படி செஞ்சா அதுபாவம். என்மனசு இடந்தரல.

ராமகிருஷ்ணன் அந்த சாதாரண பெண்ணிடம் உள்ள மகோன்னதமான யதார்த்தங்களை ஒவ்வொன்றாக புரிந்து கொண்டு மேற்கொண்டு என்ன பேசுவது என்று புரியாமல் தடுமாறிப்போய் அமர்ந்திருந்தான்.

அவள் மனதில் உள்ளதை பிசிரின்றி கூறிவிட்டாள், இனி இதன் பேரில் முடிவெடுக்க வேண்டிய பொறுப்பு அந்த சட்ட வல்லுனரின் முடிவுக்கு அவள்விட்டுவிட்டு முதன்

முறையாக அவனை கண்ணீரிடையே நேருக்கு நேரு பார்த்தாள்.

'ஐயா உங்கமனசு நோகறமாதிரி நா எதுனாச்சும் பேசியிருந்தா மன்னிச்சிடுங்க. இதோ இந்த நிமிஷம் வரையிலே உங்களை நான் பெரிய மனுஷன் கணக்கா மதிக்கறேன். உங்க அய்யாவ, ஆயாவ அல்லாரையும் மதிக்கறேன். உங்க குடும்பத்து மேலே ஒரு குறையும் சொல்லமாட்டேன்! அந்த அளவு தகுதி இருக்கறதாகவும் நான் நினைக்கல. இப்பக்கூட உங்களை ஒரு தெய்வமாட்டமா கும்பிடறேன். எல்லா உண்மையும் சொல்லிப்போட்டேன். பெரியமனசு பண்ணி என்ன கொமாருமாமனோட வாழறமாதிரி சேர்த்து வையுங்க. உங்களுக்கு கோடி புண்ணியமுண்டு—

அவன் முற்றிலும் எதிர்பார்க்காத நேரத்தில் அவன் காலில் விழுந்து விட்டாள்.

அவன் நெகிழ்ச்சியில் உருகிப்போனான்.

"எழுந்திருதாயி! கால்ல விழுவாதே எழுந்திரு உன் மனசு போல நீ கொமாரசாமியோட வாழ நான் ஏற்பாடு செய்யறேன். நீ இத்தனை வெளிப்படையா சூது வாதில்லாம உண்மையைச் சொன்ன பொறவு உன்ன கொமாரு கிட்டேருந்து பிரிக்கறது தப்பு எழுந்திரு... அடுத்து ஆகவேண்டியதை இனி நான் பாத்துக்கறேன். நிச்சயமா சாதி சனங்க மத்திலே ரௌசு வரத்தான் செய்யும் அதை யெல்லாம் நான் சமாளிச்சுப்பேன். ஆனா நீ அதை எப்படி சமாளிக்கப்போறேங்கறது எனக்குத்தெரியல... ஆனா ஒன்னு உன் கழுத்திலே தாலி கட்டினதால எனக்கு நீ மனைவியா ஆகாட்டியும், தெரிஞ்சவளாஆயிட்டே. அதனால உன்ன கொமாரசாமியோட சேத்துவச்சுப்பின்னால உனக்கு ஏற்படக்கூடிய கஷ்டங்களை என்னால முடிஞ்சு அளவு நிவர்த்திக்க முயற்சிபண்றேன் எழுந்திரு—"

முதன்முறையாக தான் அவளுக்கு ஓர் அன்னியன் என்கிற மன நிலையுடன் அவளை தூக்கி நிறுத்தி விட்டு அப்பால் போய் விட்டான்—

# 9

தொடர்ந்து வந்த நாட்களில் தாயம்மாளின் விவகாரத்தை எப்படி வெளிப்படுத்த வேண்டும். அதற்கு எப்படி நிவாரம் தேடவேண்டும் என்பதில் மிக கவனமாகவும், தீவிரமாகவும் சிந்திக்கத் தொடங்கியிருந்தான்,

இதற்குமத்தியில் சென்னை ஹைகோர்டில் வண்டிக்கார வீரன் வழக்கில் தூக்கு தண்டனை வழங்கப்பட்ட வழக்கு நடந்து செஷன்ஸ் தீர்ப்பை ஊர்ஜிதம். செய்கிற மாதிரி தீர்ப்பு வந்த செய்தி வந்துவிட்டது.

சுப்ரீம் கோர்ட்டில் தண்டனையை எதிர்த்து அப்பீல் செய்யப் போவதாக பழனிசாமியின் அண்ணன் சீரங்கன் சொல்லிக் கொண்டிருந்தாள்.

செஷன்ஸ் கோர்ட் அளித்த தூக்குத் தண்டனைத் தீர்ப்பைத் ஹைகோர்ட் ஊர்ஜிதம் செய்து தீர்ப்புக் கூறியவுடன்.

வீரன் கொலை வழக்கில் குற்றம்சாட்டப்பட்ட பழனிச்சாமிக்கு தூககுதண்டனை ஊர்ஜிதம். ஜூன் பத்தாம் தேதி தூக்கு உறுதி என்று செய்தித்தாள்கள் பெரிய எழுத்தில் செய்தி போட்டார்கள். கூடவே குற்றவாளி சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்யப் போவதையும் சுப்ரீம் கோர்ட்டில் பழனிசாமி அப்பீல் செய்ததால் அவனுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனை நிறுத்தி வைக்கப்படும். சுப்ரீம் கோர்ட் பழனிசாமியை தூக்கிலிட முடியாது. அது அனுமதியளித்த பிறகு மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கப்படும். சுப்ரீம்

கோர்ட்டும் அந்த தண்டனையை ஊர்ஜிதம் செய்துவிட்டால் ஜனாதிபதிக்கு கருணை மனு கொடுக்கலாம்—

செய்தித்தாள்களில் இந்த தண்டனையின் மேல் விவரங்களை விரிவாக எழுதியிருந்தன.

ஃ ஃ ஃ

மார்கழி மாதம்.

செங்கோடன் தன் நிலத்தில் கரும்பு பயிரிட்டிருந்தான். கரும்புப்பயிர் நன்றாக வளர்ந்து நின்றன. பொங்கல் நெருங்க, நெருங்க கரும்பின் வியாபாரமும் சூடு பிடித்துக் கொண்டிருந்தது.

லாரியில் இரண்டுலோடு கரும்பை ஏற்றி கடலூர் வியாபாரிக்கு அனுப்பிவிட்டு காலியாகிவிட்ட கரும்பு வயலைப் பார்த்தபடி நின்றான்.

காரை தூரமாக சாலையோரத்தில் நிறுத்திவிட்டு இறங்கி செங்கோடன் நிற்கும் இடத்திற்கு வந்தான் ராமகிருஷ்ணன்.

ராமகிருஷ்ணனைப் பார்த்தவுடன் செங்கோடனுக்கு ஒரேவியப்பு. இத்தனை நாளில் இப்படி ஒருமுறைகூட அவன் அங்கே வந்ததில்லை.

"வாங்க, மாப்ளே எங்க தாயிவந்திருக்கா"—அவன் நடக்க ஆரம்பித்தான்,

இல்லீங்க நான் மட்டுந்தான் வந்தேன், உன்கூட ஒரு முக்கியமான விஷயம் பேசவேண்டியிருக்கு...

"வூட்ல பேசலாமே."

"வேண்டாங்க இங்கேயே பேசலாம்"

அங்கே மரநிழலில் கிடந்த கட்டிலில் உட்கார்ந்தான் ராமகிருஷ்ணன்.

"சாப்பிட எதுனாச்சும் கொண்டாரச் சொல்லட்டா!"

"ஒண்ணும் வேண்டாம் நீங்க வந்து உட்காருங்க.'?

செங்கோடன் கையை பிடித்து இழுத்து கட்டிலில் உட்கார வைத்தான்.

' தா பாரு நான் சொல்றதை நெதானமா பதட்டப் படாம கேக்கணும். வீணாக கோபப்படக்கூடாது. நான் எப்படி இதை எடுத்துக்கிட்டிருக்கோனா அதே மாதிரி நீங்களும் யோசிக்கணும் வெசயா ஒரு முடிவு எடுக்கணும்."

',என்ன மாப்ளே புதிருமாதிரி பேசிக்கினே போறே."

"நான் நேரிடையா விஷயத்துக்கு வரேன். உன் தங்கச்சி தாயம்மாவுக்கு கல்யாணம் பேச என்னோட அய்யாகிட்ட வரப்ப அவகிட்டே ஒரு வார்த்தை சம்மதம் கேட்டியா?"

"தம்பி"

"கேட்ட கேள்விக்கு பதில் சொன்னா போதும்."

"இதுக்கு போய் அவகிட்டே யோசனை கேட்கணுமா. அவளுக்கு எது நல்லது எது கெட்டதுன்னு அவ அண்ணங் காரன் நான்தானே முடிவு பண்ணோனும்."

"இதெல்லாம் சினிமா டயலாக்... ஆனா என்ன அவளுக் காக நிச்சயம் செஞ்சு பாக்கு வெத்தல மாத்திக்கறபோது அவளோட விருப்பத்தைக் கேக்காமலே செஞ்சிருக்கீங்க...',

சரி அப்படித்தான் வச்சுக்க... அவகிட்டே நான் கேட்கலே... நானாத்தான் முடிவு செஞ்சேன் இப்ப என்ன அதுக்கு..."

அவளுக்கு என்னோட வாழ பிரியமில்லேன்னு சொல் லிட்டா. கல்யாணம் நடந்த அன்னிலேருந்து இன்னிக்கு வரையிலே நாங்க ஒரு நா கூட புருஷன் பொண்ஜாதியாவே இருக்கல. ராவுல அவ தனியா படுக்கறதும். நான் தனியா படுக்கறதுமாதான் இருக்கோம்."

"நீ என்ன மாப்ளே பெரிய படிப்பு படிச்சு வக்கிலு தொழில் பண்றே. டவுன்ல கொல கேசு வக்கிலு யாருன்னு கேட்டா ஓம்பேரத்தான் மொதல்ல சொல்றாங்க... பொண்டாட்டி வரமாட்டேங்கறேன்னு எங்கிட்ட வந்து சொல்றியே. அந்த நாதாரிக் கழுதையை மயித்த பிடிச்சு நாலு மிதி மிதிக்காம..."

"இத உங்க மாதிரி ஆத்திரப்பட்டு முடிவு எடுக்க விரும்பல... நிதானமா சிக்கல தீர்க்கோணும்.

"என்ன நிதானம்! துண்டை உதறி தரையில் போட்டுக் கொண்டு கீழே உட்கார்ந்த செங்கோடன் தலையில் கையை வைத்துக் கொண்டான்.

"கொமரசாமி உங்க குடும்பத்துக்கு என்ன உறவு ஆவனும்."

"ஓ... அந்த படுவா வேலதானா இதெல்லாம்?" அவனத்தான் அவ கட்டிக்கிடணும்ணு முடிவெடுத்து வெச்சிருந்தாளாம். அவங்க ரெண்டு பேருக்கு நடுவிலே என்னன்னமோ வெல்லாமோ நடந்திருக்கு... அதோடு அவங்க ஒருத்தரை யொருத்தர் ரொம்ப விரும்ப றாங்க... அவளுக்கு சம்மந்தம் தேட ஆரம்பிச்ச போது இதையும் நீங்க மனசிலே வச்சிகிட்டு தேடியிருக்க வேணாமா..."

"அந்த கொமருபயல எனக்குக் கொஞ்சம் கூட பிடிக்கலே மாப்ளே. வசதியே இல்லாத வெறும் பய அவன். சீசனுக்கு ஏத்த மாதிரி வியாபாரத்தையும் தொழிலையும் மாத்திக்கிட்டே இருப்பான். ஒரு தபா கரும்பு வாவரம் செய்வான். அது ஒஞ்சு போச்சுன்னா குச்சி கிழங்குக்கி தாவிடுவான். இப்ப செங்கல் சூளை போட்டு செங்கல் வாவரம் செஞ்சுகிட்டு இருக்கான்"

"அவன் என்ன வியாபாரம் செஞ்சா என்ன... கட்டிக் குடுக்கற பொண்ண நல்லபடியா வச்சு காப்பாத்துவா னான்னுதான் பாக்கோணும்."

"நம்ம குடும்பத்திலே எல்லாம் பொண்ணு எடுக்கனும்னா ஒரு அந்தஸ்து வேணும் மாப்ளே. அவனும். நம்ம தாயம்மாளும் ஒருத்தரையொருத்தர் விரும்பறாங்கறது எனக்குத் தெரியும். ஆனா அந்த ராஸ்கோல எனக்கு கொஞ்சங் கூட பிடிக்கலே.

"அவன உனக்குப் பிடிச்சிருக்கு பிடிக்கலேங்கறதா முக்கியம்? தாயிக்கு பிடிச்சிருக்கு. தெரியுமில்லே. அவள அவனுக்கு கட்டி வச்சிருக்கணும், அதுதான் நாயம்... சரி நான் கேட்கறேன் .. அவன் வசதியில்லாதவன்னு சொல்றியே அதவுடு வேற ஏதாவது காரணம் இருக்கா... ஒழுக்கமில்லாதவனா, குடிகாரனா, பொம்பளலோலனா..."

செங்கோடன் மௌனம் சாதித்தான்."

"சொல்லு வேறு என்ன காரணம்... வேற ஏதாவது பழைய பகை இருக்கா அப்படியே இருந்தா கூட... அதை நீ இதிலே காட்டியிருக்கக் கூடாது. அவ விருப்பத்துக்கு மாறா நீ செஞ்ச காரியம் இப்ப எப்படி உருவெடுத்து நிக்கிது தெரியுமா... அவ என்கூட வாழ முடியாதுன்னு தெளிவா சொல்லிட்டா... இதுக்கு மேலே மிரட்டி அடிச்சு தொந்தரவு பண்ணி அவள வழிக்குக் கொண்டுவரது எனக்குப் பிடிக்கலே. நான் அதைச் செய்யவும் மாட்டேன். உன்னை அப்படிச் செய்யவும் அனுமதிக்கவும் மாட்டேன்."

ராமகிருஷ்ணன் கட்டிலைவிட்டு எழுந்தான். "மாப்ளே அவனுக்கு தன்னுதுன்னு சொல்லிக்க ஒரு சால கூட இல்ல.

"பிரியப்பட்ட மனசுங்களுக்கு இதெல்லாம் பெரிய விஷயமில்லே செங்கோடண்ண."

"இப்ப நான் என்ன பண்ணணும்கற மாப்ளே"

"நம்ம அரசுப்பள்ளி வழக்கப்படி பஞ்சாயத்தை கூட்டுவோம். இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் நம்ப பெரிய

வங்க என்ன செய்தாங்களோ அதையே செய்நுருவோம் அதுதான் எனக்கு சரின்னுபடுது. அப்படி செஞ்சா அது நம்ம கிராமத்தோட முடிஞ்சு போயிடும். கோர்ட், டைவர் சுன்னு வந்தா. நம்ம எல்லார் குடும்ப கவுரமும் பப்ளிக்கா வந்துடும் அதனால...

"துரும்பு கொடுக்கறேங்கறயா"

"அதுதான் வழி...அய்யாகிட்டே பேசிபுட்டு கோலு காரன்கிட்டே சேதி சொல்லி அனுப்பறேன். பட்டக்கார கவுண்டர், இனக்கவுண்டர், ஊர்க்கவுண்டர், அல்லாரையும் கூட்டிக்கினு வந்து சேரு...வெவகாரத்தை நா சுமுகமா தீர்த்துவெக்கறேன்."

"மாப்ளே நீங்க முடிவு செஞ்சுட்டீங்களா."

"வேறவழியில்லை...இந்த முடிவுதான் சரியாப்படுது... இதுனாலே எனக்கு உன்மேலேயோ வேறு யார் மேலேயும் கோபமில்லே...என்னோட நல்ல எண்ணத்தை புரிஞ்சுகிட்டு நீ ஒத்துழைக்கணும்...

"அருக்கருவாள எடுத்துகிட்டு வாரேன். அந்த வீணாப் போன நாயிங்க ரெண்டு பேரையும் ஒரே சீவா சீவிப்புட்டு செயிலுக்குப் போயிடறேன்..."

அருகில் வந்து செங்கோடனின் தோள்பட்டையில் கை வைத்து சமாதானம் செய்தான்...விஷயத்தை சரியாக ஆரம்பித்து, சரியானஇடத்தில் முடித்து, சரியானநிவாரணத் திற்கான ஏற்பாடுகளைப் பற்றியும் தெரிவித்துவிட்ட திருப்தி...

அரையில் பச்சைக் கரையில் மயில் கண்வேஷ்டி, முழுக் கை சட்டை, அதன் மேல் பச்சை நிறத்தில் ஸ்வெட்டர். வேஸ்டியை மடித்துக் கட்டிக்கொண்டு கரும்புகள் வெட்டப் பட்ட வயல் வரப்பில் ராமகிருஷ்ணன் போய்க் கொண் டிருப்பதை பார்த்தான். செங்கோடன்...

செங்கோடனைப் பார்த்துவிட்டு வந்த விஷயத்தை தாயாரிடம் சொன்னபோது தாயார் அதிர்ந்து போய் அப்படியே சுவரோடு சுவராக சாய்ந்து இரண்டு கை களையும் தலையில் வைத்துக்கொண்டு உட்கார்ந்தவள் தான். அதிர்ச்சியில் பல மணி நேரம் எழுந்திருக்கவே யில்லை...

"நான் அப்பவே கவுண்டர்கிட்டே சொன்னேன்- அது எங்கே கேட்டுச்சு. செங்கோடன் வூட்டு பொண்ணத்தான் கட்டணும் அவிய அய்யாவெல்லாம் ரொம்ப நல்ல மனுஷாளுங்க ரொம்ப சுத்தமான பரம்பரை சொத்துபத்து அதிகமில்லாங்காட்டியும்...நல்ல சனங்க...அது இதுன்னு சொல்லி அல்லார் பேச்சையும் அடக்கிப் போட்டாரு... இப்ப பஞ்சாயத்ல வந்து மானம் மறுவாதையெல்லாம் கப்பலேறப்போவுது"—

செல்லத்தாயி புலம்பினாள்...

சிக்கலைத் தந்தையிடம் சிரமப்பட்டு விளக்கிக் கொண் டிருந்தபோது கூடத்தில் தாயார் புலம்புவது ராமகிருஷ்ணன் காதில் கேட்டுக்கொண்டிருந்தது.

மாரிமுத்துக்கவுண்டர் விஷயத்தை புரிந்து கொண்டு ஏதோ பேச முயற்சித்தார். ஆனால் அவரால் பேச முடியவில்லை...சுவாதீன முள்ள இடது கையை மட்டும் கொஞ்சம் தூக்கி... வேண்டாம். வேண்டாம் என்பது போல ஜாடை காட்டினார்...அவர் செய்கையால் அவர் மனவோட்டத்தைப் புரிந்து கொண்ட ராமகிருஷ்ணன் அவர் கையைப் பிடித்து அமர்த்தி.

"இத இனிமே சாதாரணமா எடுத்துக்கிட்டு பேசி பிரயோசனமே இல்லே...ஒரு சரியான முடிவு சரியான நேரத்திலே எடுத்தாகனும்...

அவர் காதருகில் வாயைக்கொண்டு போய் குரலை உயர்த்திப் பேசினான்.

அவர் பதில் ஏதும் சொல்லாமல் கட்டில் கட்டையில் இரண்டு கைகளையும் ஊன்றி முகத்தைக் கவிழ்த்துக் கொண்டார்.

தந்தை மனமுடைந்து போயிருக்கிறார் என்பதைப் புரிந்துகொண்ட ராமகிருஷ்ணன். அவரை கைத்தாங்கலாகப் பிடித்து பழையபடியே படுக்கையில் சாய்த்துப் படுக்க வைத்துவிட்டு கலைந்திருந்த சோமனை இழுத்து சரிசெய்துவிட்டு அறையைவிட்டு வெளியே வந்தான்.

ஃ ஃ ஃ

கிட்டத்தட்ட பன்னிரண்டு ஊர்க்கவுண்டர்களுடன் ஊர்க்கவுண்டர் பட்டக்காரக் கவுண்டர், இனக்கவுண்டர் என்று அந்த சாலைக் கோயிலில் கூடிவிட்டனர்.

பஞ்சாயத்தைக் கூட்டியதே ராமகிருஷ்ணன் ஆனதால் அவன்தான் எல்லோரையும் வினயத்துடன் கும்பிட்டு வரவேற்றுக்கொண்டிருந்தான்.

ஆலய மதிர்சுவர் ஓரமாக ஒரு மூளையில் ஏற்கனவே வந்துவிட்ட தாயம்மாள் தனியே நின்று கொண்டிருந்தாள்— அவளைக் கையைக் காட்டி ஆக்ரோஷமாக திட்டிக் கொண்டு இருந்த அண்ணன் செங்கோடனை வேறுசிலர் பிடித்து நிறுத்தி சமாதானம் செய்துகொண்டிருந்தனர் அவளை இவன் கெட்ட வார்த்தையில் திட்டினான்.

பஞ்சாயத்து சபை நிரம்பி வழிந்தது, வெளியில் வலிய போய் யாரிடமும் சொல்லாவிட்டாலும் செய்தி எப்படியோ பரவி கூட்டத்தை சேர்த்துவிட்டது.

ராமகிருஷ்ணன் தந்தை மாரிமுத்து கவுண்டரை யாரோ இருவர் ஒரு நாற்காலியில் உட்கார வைத்து தூக்கிக்

கொண்டுவந்து வைத்தார்கள். ஒருபக்க கடைவாய் வழியே சொட்டிக் கொண்டிருக்கும் உமிழ்நீரை செல்லத்தாயி நின்ற நிலையில் அடிக்கடி துடைத்து விட்டுக்கொண்டிருந்தாள்.

"வியாஜியம் என்னன்னு நீதான் வெலாவாரியா சொல்லணும். நீதானே பஞ்சாயத்தக் கூட்டியிருக்கே... நீயே சொல்லிடு... அப்பறமேல்டு வெவகாரத்தை வச்சுக்க லாம்...ஊர்கவுண்டரும், அவ்வட்டாரத்தின் அரசியல் பிர முகருமான வாழப்பாடி சந்திரன் கூறினார்.

ராமகிருஷ்ணன் எழுந்து நின்று பேச ஆரம்பித்தபோது "குந்திகினே பேசலாம்...எவ்வளவு நேரம் நின்னுகிட்டே பேசமுடியும்.

ராமகிருஷ்ணன் மண் தரையில் உட்கார்ந்தான்.

ஒருத்தரையொருத்தர் நல்லா புரிஞ்சுகிட்டு வாழ்ந்தாத் தான் நல்லா வாழமுடியும். ஒருத்தர்மேலே ஒருத்தருக்கு அன்பு ஏற்படணும்னா, அது கணவன், மனைவியா இருந் தாக்கூட, அதை பலவந்தமா திணிக்க முடியாது. திணிக்கக் கூடாது. அப்படி செஞ்சா அது ரொம்ப நாள் நெலச்சு நிக்கவும் நிக்காது. செல்லியம்பாளையம் செங்கோடனோட தங்கச்சி தாயம்மாளுக்குசின்னக்கவுண்டாபுரம் கொமரசாமிய கட்டிக்கோணும்னு ஆசை. இதிலே அவிய அண்ணன் அத கேக்காம எனக்கு கட்டி வச்சு ட்டதா தாயி சொல்லுது. கல்யாணம் நடந்த அன்னிலேருந்து இன்னிவரையிலே அது என் கூட ஒருநாகூட பொண்டாட்டி மாதிரி இருந்ததில்லை. இத இந்த பச்சநாச்சியார் அம்மன் மேலே ஆணையா சொல் றேன். மொத நாளே அது என்கூட சேரவிருப்பமில்லாம "என்ன தொடாதீங்கன்னு" நறுக்கினமாதிரி சொல்லிட்டு தனியா படுக்கபோயிடிச்சு...

ராமகிருஷ்ணன் இந்த இடத்தை இலை மறைவு காய் மறைவாகச் சொன்னபோதிலும் அதை புரிந்து கொண்ட

சில பெண்கள் தாயம்மாளை வாய்க்கு வந்தபடி பேச ஆரம் பித்துவிட்டார்கள்...

"ராசா கணக்கா பிரிசன கட்டிக்கிட்டு, அவங்கூட படுக்காம இந்த நாதாரிகளுதை வேற எவங்கூட படுப் பாளாம்...

காரிப்பட்டி பச்சமுத்து ஆத்தா இப்படிக் கூறிவிட்டு முகத்தை தோள்பட்டையில் இடித்துக் கொண்டாள்.

"இப்ப என்னன்றா? இந்த சிறுக்கி... பிலிசாறு வச்சிருக் கிற கொலகேசு வக்கிலு...பெரிய கவுண்டருமவன். எத்தன அந்தஸ்தான வூடு. ஜனம். இதுக்குமேலே இந்த வீணாப் போன நாயிக்கு வேற எவன கட்டிக்கோணுமா... மரத்திலே கட்டிவெச்சு ... ... ... கருமாபுரம் காத்தாயி வேறு ஏதோ சொன்னபோது அருகில் நின்ற நடுவயது பெண்கள் எல்லாம் வெட்கத்துடன் வாயைப் பொத்திக்கொண்டனர். ச்சிய்... இருந்தாலும் கந்தாயிக்கு இத்தனை வாய் ஆவாது. என்று கூறினர். வயதானவர்களோ அப்பிடித்தா கந்தாயி சொன்னமாதிரி செய்யோனும். இவளை சும்மா விடக் கூடாது என்று பேசினர்.

ராமகிருஷ்ணன் பேசிக்கொண்டிருந்தான்.

"என்ன கட்டிகிட்ட பொறனாலேயும் தாயி கொமர சாமியோட சினேகம் வச்சுகிட்டு இருக்குது. அவன அடிக்கடி பாக்கப் போவுது, இத நான் என் கண்ணாலயும் பாத்தேன். கண்ணாலத்துக்கு முந்தி எப்படி யிருந்தாலும் பரவாயில்லை. என்ன கட்டிக்கிட்ட பொறனால இனிமே அப்படியெல்லாம் இருக்கக்கூடாது. அது அம்புட்டு நல்லா இருக்காதுன்னு நானும் தயாவிசியமா சொல்லிப் பாத்தேன். அத மாத்த முடியல. இனிமே அத மாத்தமுடியும்ங்கற நம்பிக்கையும் எனக்கு இல்லே. ஏன்ன, தாயம்மா மனசிலே இன்னும் கொமரசாமிய கட்டிக்கிடணும்ங்கற ஆசைதான் இருக்குது. அதுனால எனக்கும் தாயம்மாளுக்கும் நடந்த கல்யாணத்தை

துரும்பு குடுத்து தீர்த்து கட்டிட்டு தாயம்மா விரும்பறமாதிரி அவள கொமரசாமிக்கு மறுதாலி வாங்கி கட்டி வைக்க ணும்னு கேட்டுக்கறேன்.

ராமகிருஷ்ணன் பேசி முடித்ததும் பஞ்சாயத்தில் சில நிமிஷங்கள் அமைதி நிலவியது.

பழமையிலும், பாரம்பரியத்திலும், ஊரியவர்களாக இருந்தபோதிலும், ராமகிருஷ்ணனின் ஆரம்ப உரைகளில் அத்தனை ஈடுபாடு காட்டாவிட்டாலும், தாயம்மாளின் உள்ளத்தில் உள்ள ஆசையைப் புறக்கணிக்க முடியாமல் நியாயம் வழங்கவும் அவர்கள் பின்வாங்கவில்லை.

பெரியவன், சின்னவன், வசதி படைத்தவன், வசதி யில்லாதவன் என்கிற பாகுபாடெல்லாம் அங்கே குறுக்கிட வில்லை.

தாயம்மாளைக் கூப்பிட்டு ராமகிருஷ்ணன் சொல்வதெல் லாம் உண்மையா என்று வினவினார் பஞ்சாயத்து தலைவர்

அவள் மௌனமாக தலையசைத்து "ஆமாம்" என்றாள்.

ஏன்புள்ளே இப்படி அனாவசியமா வாழ்க்கையை பாழடிச்சுக்கிற. அவருதான் பழசையெல்லாம் மறந்துட்டு சேர்ந்து வாழலாம்னு சொல்றார்ல. அவரு அந்தஸ்து என்ன, படிப்பு என்ன, சாதிசனங்களோட கொணங்கள் என்ன, அல்லாத்தியும் புரிஞ்சுகிட்டுமா துரும்பு வாங்கிக்கறேங்கற. இந்த மாதிரி ஒரு சம்மந்தம் ஒன்னோட அந்தஸ்துக்கு கெடச்சது உன்னோட பாட்டன் முப்பாட்டன் செஞ்ச புண்ணியம்லே. வீணா மனச அலமோத வச்சுக்கிட்டு வாழ்க்கையை கெடுத்துக்காதே புள்ள. துரும்பு கொடுக்கறது ஒண்ணும் கஷ்டமில்லே. வீசநாழிலே இத தீர்த்துக் கட்டி புட்டு போயிடலாம்! ஆணா வீணா ஒரு நல்ல குடும்பத் தோட உறவு முறையை உதறி தள்ளரமாதிரி ஏதும் நடந் துடக்கூடாதுன்னுதான் வெசனமா இருக்கு... என்ன

சொல்றே... யோசிச்சு பதிலு சொல்லு. பஞ்சாயத்தில் உட்கார்ந்திருந்த பட்டக்காரக் கவுண்டர் கேட்டார்.

இனிமே இதிலே யோசிக்க ஒண்ணுமில்லீங்க. நாங்க அப்பவே ஒரு முடிவெடுத்துட்டம்—என்றாள் தாயம்மாள்.

"நீ என்னடா சொல்ற செங்கோடா... உன் தங்கய கட்டிகிட்டவன் இப்பிடி சொல்லிபுட்டான். அவளும் துரும்பு கொடுத்துப்புடுங்கன்னு சொல்லிடுச்சு. பொண்ணுக்கு கூடப் பொறந்தவன் நீ. நீதா கட்டிக் குடுத்தே. அவிய ரெண்டு பேரும் இப்படி ஒரு முடிவ எடுத்தபொறனால இப்ப நீ என்ன சொல்லப்போற."

"துரும்பு கொடுக்கறது நான் ஏத்துக்கலங்க. இந்த கழுதைய கால, கைய வெட்டி கட்டிப்போட்டு சோத்து தண்ணியில்லாம சாவடிக்கணும்ங்க. பெரியவங்க பேர கெடுக்க பொறந்த இத இது இட்டத்துக்கு வுட்டா அப்பால ஊர்ல இருக்கறதுங்க எல்லாம் இதையே ஒரு உதாரணமா எடுத்துக்கினு தத்தாரி நாயிங்களா பூடுங்க... இந்த மரிவாத கெட்டவ பேச்ச கேக்காதீங்க. துரும்பு கொடுக்க முடியாதுடி நாயே, நீ அவரு கூடத்தான் சேர்ந்து வாழணும்னு சொல்லிடுங்க"...

செங்கோடன் ஆத்திரத்துடன் கத்தினான்.

செங்கோடா! இந்தப் பஞ்சாயத்தை தம்பி ராமகிஷ்ணன் கூட்டியிருக்கு; இப்ப அது தாண்டால துரும்பு கேக்குது.

"இல்லேன்னு சொல்லிப்புடுங்க."

"அவளும் சரின்னு சொல்லிபுட்டாளே" வாதியும், பிரதிவாதியும் சரின்னு சொன்ன பொறவு அதமீறி நாம் என்னடா பண்ணமுடியும். வெவரங்கெட்டத்தனமா பேசறியேடா!

பாக்கு வெத்திலக் கவுண்டன் ஒரு ஓரத்திலிருந்து கடிந்து கொண்டார்.

“அப்ப உங்க இஷ்டப்படி முடிவு செய்யுங்க. என் வாயால நா சரின்னு சொல்லமாட்டேன் அம்புட்டுதான்” செங்கோடன் தன் முடிவைக் கூறிவிட்டான்.

“அப்ப துரும்பு கொடுக்கறதிலே ஆட்சேபனை யில்லையே.”

“இல்ல” பெரியவர்கள் ஒரு குரலில் கூறினார்.

கூட்டத்தில் உட்கார்ந்திருந்த அண்ணன் செங்கோடன்’ அரைவேட்டி அவிழ்வதைக்கூட பொருட்படுத்தாமல் அவனுக்கு முன்னே உட்கார்ந்திருந்த இரண்டு மூன்று பேர் தொடையில் காலூன்றித் தாவி, தாவிய வேகத்தில் தாயம்மாளின் தலை மயிரைப்பிடித்து, வீணாப்போன செறுக்கி மூதேவி... துரும்பா கேக்ற துரும்பு...மறைவாக இடுப்பில் சொருகியிருந்த ஒரு அடி நீளமுள்ள கருக்கருவாளை கண் மூடி கண் திறப்பதற்குள் உருவி ஓங்கியும் விட்டான். அவள் அருகில் நின்ற காரிப்பட்டி பச்சமுத்து ஆத்தா அவன் கையைப்பிடித்து, தடுத்து அருவாளையும் வீசநாழியில் பிடுங்கிவிட்டாள்.

பஞ்சாயத்துக்கு உட்கார்ந்திருந்தவர்கள்செங்கோடனின் செயலை கடுமையாக கண்டித்தனர்.

இந்தத் தடவை ராமகிருஷ்ணன் எழுந்து நின்று விட்டான்.

“இந்தப்பஞ்சாயத்தை நான்தான் கூட்டணும்னு பெரியவங்க கிட்டே கேட்டுகிட்டேன். கூடியிருக்காங்க. யாருக்கு யார் குத்தப்பணம் தரணும்னு பஞ்சாயத்து விதி இருக்குது. அதனால எதாக இருந்தாலும் குத்தப்பணம் பூராவையும் நானே ஏத்துக்கறேன். ரெண்டாவது தாயம்மா விரும்பரமாதிரியே, சின்னகவுண்டாபுரம் கொமாரசாமி யையும் தாயம்மாவையும், இங்கேயே மறுதாலி குடுத்து சேர்த்து வைக்கோணும்னு கேட்டுக்கறேன். அதசெய்யாம பஞ்சாயத்து கலஞ்சா இந்த பஞ்சாயத்து கூடினதுக்கு

அர்த்தமே இல்லாம போயிடும். பெரியவங்க மனசுவச்சு உங்கமுன்னாலயே கொமாரசாமி மறுதாலிகொடுத்து தாயி கழுத்துல இங்கேயே கட்ட ஏற்பாடு செய்யணும்'' என்று கேட்டுக்கொண்டான்.

பஞ்சாயத்தில் உட்கார்ந்திருந்தவர் அருகிலிருந்து ஒரு வைக்கோல் பிரியை எடுத்து ராமகிருஷ்ணன் கையில் கொடுக்க அவன் அதை இரண்டு கையில் பிடித்துக்கொண்டு போய் தாயம்மாவிடம் கொடுத்தான்.

தாயம்மாள் அதை வாங்கிக்கொண்டாள்.

பஞ்சாயத்து தலைவர் கொமாரசாமியை அழைத்தார்.

அவன் தன் ஊர் சகாக்கள் பத்து பேருடன் அங்கே வந்து நின்றான்.

ஒரு பெரிய குருஷேத்திரமே நடந்திருக்க வேண்டிய சந்தர்ப்பம் குறைந்தபட்சம் மூன்று பேருடைய ரத்தம் மண்ணில் சிந்தியிருக்கவேண்டிய விவகாரம். ஊர்ப்பகை, உறவுப்பகை என்று முற்றி எவ்விதமுடிவும் எடுக்க முடியாமல் போயிருக்கவேண்டிய சச்சரவு, செங்கோடன் கருக்கருவாளை ஓங்கிக் கொண்டு ஓடியவுடன் உச்சக்கட்ட காட்சி முடிந்து போய் விட்டது. இப்பொழுது செங்கோடன் முகத்தை கவிழ்த்துக்கொண்டு கூட்டத்துடன் கூட்டமாக கலைந்து சோகமாகப் போய்க் கொண்டிருந்தான்.

எல செங்கோடு கூட்டத்திலே போய் ஒண்டிக்கிட்டா எண்டால அர்த்தம். தங்கச்சிக்கு மறுதாலி எடுத்து குடுடா.''

என்று பஞ்சாயத்து தலைவர் கூறியபோது குத்தப் பணத்தை மட்டும், மடியை அவிழ்த்து நடுச்சபையில் கொட்டிவிட்டு

இந்த நாதாரி கஜுதைக்கு இனி என் கையால மறுதாலி மாத்தி குடுக்கமாட்டேன். இவ மூஞ்சியிலகூட நான்

முளிக்கமாட்டேன் என் வீட்டுப் பக்கம் வந்தான்னா கொல விழும்!—

என்று ஆத்திரத்துடன் தன் ஊர்சகாக்கள் பத்து பேருடன் எழுந்து சபையைவிட்டு வெளியேறி விட்டான்.

செங்கோடன் வெளியேறியவுடன் சம்பிர தாயங்களை மீறி அந்தப்பொறுப்பை ராமகிருஷ்ணனே ஏற்றுக் கொண்டான்,

இதையெல்லாம் பார்க்கப் பிடிக்காத மாரிமுத்து தன்னை நாற்காலியில் வைத்துத் தூக்கிக் கொண்டுவந்தவர் களிடம், ஜாடையாக ஏதோ சொல்ல, அவர்கள் அவரை அவர் உட்கார்ந்திருந்த நாற்காலியுடன் தூக்கிக்கொண்டு வெளியேற, ராமகிருஷ்ணனின் தாயாரும் முந்தானையை வாயில் வைத்து அடைத்துக்கொண்டு அவர்களுடன் வெளியேறி விட்டாள்.

## 11

இந்த பஞ்சாயத்து துரும்பு மறுவிவாகமெல்லாம் முடிந்து நாட்கள் வேகமாக நகர்ந்து கொண்டிருந்தன.

பெற்றோரிடம் ஆரம்பத்தில் காணப்பட்ட அந்த கடினத்தன்மை கொஞ்சம் கொஞ்சமாக குறைந்தது.

ஒரு விபத்தின் நிகழ்வு போல சில நாட்கள் ராமகிருஷ்ணனின் மனதை இது பாதித்தாலும் பின்பு அதுவும் சரியான மாதிரி இருந்தது.

ஒரு மரியாதை கருதி ராமகிருஷ்ணனிடம் அவன் நண்பர்கள் இதுபற்றி துக்கம் விசாரிக்கிற மாதிரி கேட்கவில்லை'

ஆனால் அவனுடைய சீனியர்மட்டும் ரொம்ப நாட்களுக்குப்பிறகு அவனுடன் ஒரு வழக்கு விஷயமாக நாமக்கல்லுக்கு காரில் போய்க்கொண்டிருக்கும்போது கேட்டார்,

"ஆரம்பத்திலே படிக்காத பொண்ணா இருக்காளே இவ நமக்கு பொருந்துவாளா என்று யோசனை செஞ்சது வாஸ்தவம் ஸார். அப்பாவால காடு கரைகலை கவனிக்க முடியாம போயிடுச்சு. அந்த வேலையும் இப்ப நானே பாத்துக்க வேண்டியிருக்கும் எனக்கு வரவளாவது. கொஞ்சம் படிச்சவள இருந்தா விவசாயம், பண்ணை, தோப்பு இவைகளை தைரியமா பாத்துக்கறவளா இருக்கணும் என்று யோசித்தேன்— தாயம்மாளை அதற்கு தயார் படுத்திடலாம் என்று மனதை தேற்றிக்கிட்டேன்... கல்யாணத்துக்கு முன்னால மனசு வருத்தமா இருந்தாக்கூட அவள கட்டிக்கிட்ட பின்னால மனப் பூர்வமா அவள அவளோட இயல்பிலேயே ஏத்துக்கிட்டு வாழ முடிவு செஞ்சுட்டேன் ஸார். ஆனா நான் ஒன்னு நெனைக் அது வேறமாதிரியா திரும்பிடிச்சு... அவளுக்கு என்ன பிடிக்கலேங்கறதை விட என்னோட தகுதிகளை அவளுக்கு புரிஞ்சுக் கற மனவிரிவு கூட இல்ல. என்ன பிடிக்கல என் அந்தஸ்த அவளால புரிஞ்சுக்க முடியல. எதிர்காலம் பற்றியதொரு தீர்க்கமான முடிவு எடுக்கத்தெரியல... இது எல்லாத்துக்குமேலே சம்பிரதாயத்துக்காகவேணும் ஒரு பொய்கூட சொல்லத் தெரியாத ஒரு அப்பாவிப் பெண்ண நீங்க பார்த்திருக்கவே முடியாது.

கார் புதன் சந்தையைத் தாண்டி போய்க்கொண் டிருந்தது...

சொல்லிவிட்டு ராமகிருஷ்ணன் விரக்தியுடன் சிரித்தான்.

"அப்பா அம்மாவுக்கு நான் இப்படி செஞ்சத்திலே கொஞ்சங்கூட இஷ்டமில்லே ஸார்... எல்லா உண்மை

களையும் அதன் பின் விளைவுகள் தெரியாம சொல்லிட்டு நான் கொமரு கூடத்தான் வாழ ஆசைப்படறேன்'' என்று சொல்லுகிற அந்த அப்பாவியிடம் நான் என்ன ஸார் நியாயம் பேசறது...

''நீ செஞ்சதுதான் கரக்ட் ராமகிருஷ்ணா. கோர்ட், கேஸ், டைவர்ஸ்னு அவள அலைக்கழிக்காம அவளுடைய சிந்தனைகள், அவளுடைய கிராமிய இயல்புகள், இதை யொட்டி அப்படியொரு ஏற்பாட்டைத்தான் அவள் மனமும் பூரணமா ஏத்துக்கொண்டிருக்கும். நீ கோர்ட் விவாகரத்து என்று சொல்றதா வச்சுக்கோ அதை அவளால புரிந்து கொண்டிருக்கக்கூட முடியாம போயிருக்கலாம்... அது போகட்டும் இப்ப அடுத்தபடியா என்ன பண்ணப்போறே...

கார் போய்க்கொண்டிருந்தது. ராமகிருஷ்ணன் தான் காரை நிதானமாக ஓட்டிக்கொண்டு வந்தான்.

''ஏதோ ஒரு வேகத்திலும் அந்தப் பெண்ணுக்கு நியாயம் வழங்கவேண்டும், என்கிற 'துடிப்பிலும், அதை நானே முன் நின்று செஞ்சுட்டாக்கூட, மனசு அது ஏற் படுத்தின பாதிப்பிலிருந்து வெளியே வரமாட்டேங்குது. தாயம்மாளைப்பத்தி நினைக்கறபோது நானும் அந்தக் குறுகிய காலத்திலேயே அவளை மனப்பூர்வமா நேசித்திருப் பேனோ என்று நினைக்கிறேன்.

இத்தனை வெளிப்படையான பெண்ணை இனிமே சந்திக்க முடியுமான்னு தோணுது. இத்தனைக்கும் அந்த கொமரசாமி ரொம்ப சாதாரண ஆள்தான் ஸார். தாயம் மாளோட அண்ணன் செங்கோடன் சொன்ன மாதிரி குடி யிருக்க ஒரு சொந்த வீடு கூட இல்லாதவன், நிரந்தர வருமானமில்லாதவன், ரெண்டாவது தாயம்மா நெனச் சிருந்தான்னா கல்யாணத்துக்கு முன்னால அவங்கரெண்டு பேருக்கும் நடுவிலே நடந்த ''செக்ஸ்''ஷிவல் ரிலேஷன் ஷிப்பை அவள் என்னிடம் சொல்லாமலே கூட இருந்திருக்

கலாம் இருந்திருக்க முடியும். கொமரசாமிகூட கல்யாணத்துக்குப் பின்னாலே அவள மறக்கறதுக்கு தயாராவும் இருந்திருக்கான், என்றாலும் தாயம்மா அந்த மிகச்சாதாரண மனிதனையே விரும்பி மறுமணம் செய்துக்கறான்ன இது காதலா இல்லே ஒரு பெண்ணோட தூய்மையின் வெளிப்பாடா இல்லே பாவசங்கீர்த்தனமா— என்னன்னு எடுத்துக்கறது?

கார் நாமக்கல் கடைத்தெருவை நெருங்கி விட்டது. ராமகிருஷ்ணன் பெருவாரியான நேரத்தில் ஆங்கிலத்தில் பேசினான். அவ்வப்பொழுது தமிழில் பேசினான்...

அவர்கள் கார் தாலுக்கா கோர்ட் காம்பௌண்டுக்குள் நுழைந்து மரநிழலில் நின்றது. இருவரும் கீழே இறங்கினார்கள்.

மரநிழலில் இறங்கி தூரமாக நின்றார் சீனியர் சீனிவாசன். காரின் கதவுகளை அழுத்திச் சாத்தி 'லாக்' செய்துவிட்டு அவரை நோக்கி வந்து கொண்டிருந்தான் ராமகிருஷ்ணன்.

அவன் வருவதையே தூரமாக நின்று பார்த்த சீனிவாசன், அவன் அருகில் வந்தவுடன் அவன் கைகளைப் பிடித்து,

தாயம்மாளோட விவகாரத்திலே நீ காட்டியிருக்கிற பெருந்தன்மையைப் பார்த்து நான் பெருமைப்படறேன் ராமகிருஷ்ணன் அதே நேரத்திலே அந்தப்பெண்ணோட வெளிப்படையான மனசு இருக்கே, அதுக்குக்கிடைச்ச வெற்றி அது...

அவர்கள் பேசியபடி கோர்ட் கட்டிடத்தை நோக்கி நடந்தார்கள்.

காதல், கற்பு, கண்ணியம் அது இதுன்னு நாம பேசறோம் படிக்கறோம் ப்ரிமேரேஜ் செக்ஸ் பத்தி

வெக்கமில்லாம விவதாம் நடத்தக்கூடிய அளவு நம்ம கலாசாரம் சீரழ்ஞ்சுகிட்டு வரநேரத்திலே, இந்தப்பட்டிக் காட்டுப் பெண் அந்த செக்ஸ் விஷயத்துக்கு எத்தனை அழுத்தமா முக்யத்துவம் தந்திருக்கா பாத்தியா! அவ நெனச்சிருந்தா அந்த கொமரசாமிக்கும் அவளுக்கும் கல்யாணத்துக்கு முன்னால நடந்த அந்த உடல் தொடர்பு களை மறைச்சுட்டு உன்கூட வாழ்ந்திருக்க முடியும்.

காலத்தின் கனிவுக்காக காத்திருந்திருக்கவும் கூடும் இந்த இடைவேளையில் அவனுடன் அவள் கள்ளத் தொடர்பு வைத்துக் கொள்ளவும் முயன்றிருக்கலாம் இல்லையா? உன்னுடன் சிலநாட்கள் வாழ்ந்து விட்டு, கொமரசாமிய மறக்க முடியாத ஒரு சூழ்நிலை ஏற்படும். போது அதுவரை உனக்கும் மனைவியாக இருந்து விட்டு இப்பொழுது அவன் கூடத்தான் வாழுவேன் என்று அவள் முரண்டு பிடித்திருக்கலாம். ஆனாஅவ அப்படிச் செய்யலே இங்கே தான் அவளோட மகோன்னதங்கள் பிரமிக்க வைக்கற மாதிரி இருக்கு...

சீனியார் பேசுவதை வியப்புடன் கேட்ட வண்ணம் நடந்தான்.

பாராட்டப் பட வேண்டியது அவளுடைய வுமன்ஹீட் பெண்மைத் தன்மை. பெண்மைங்கரது எவ்வளவு பவித்ர மானது என்பதை அந்தப் பட்டிக் காட்டுப் பெண் பிரமாதமா நிருபிச்சிருக்கா நீ என்ன நினைக்கறே?

நீங்க சொல்றது நூத்துக்கு நூறு சரிதான் ஸார்.

ராமகிருஷ்ணன் தோள்மேல் கை போட்டு அணைத்த படி கோர்ட்டின் நீண்ட தாழ்வாரத்தில் ஏறினார்கள்.

# 12

நாட்கள் வேகமா ஓடிக்கொண்டிருந்தன. ஹைகோர்ட்.

ஹைகோர்ட் ஊர்ஜிதம் செய்துவிட்ட பழனிச்சாமியின் வழக்கு சுப்ரீம் கோர்டில் விவாதிக்கப்பட்டு கிழ் நிலையில் வழங்கிய தீர்ப்பையே ஊர்ஜிதம் செய்யப்பட்டு விட்ட செய்தி வந்துவிட்டது.

செய்தித்தாளில் அதைப் படித்து விட்டு விரக்தியுடன் சிரித்த ராமகிருஷ்ணன் பேப்பரைகாரின் முன் சீட்டில் மடித்துப் போட்டு விட்டு காரில் ஏறி உட்கார்ந்தான்.

காலை நேரம்...

தந்தை காலமாகி இரண்டு மாதமாகிவிட்டது. சேஷஞ் சாவடி நிலத்தில் அறுவடைக்கு நெல் தயாராக இருந்தது. கடலை வேறு பிடுங்க வேண்டும். நிலபுலன்களைப் பார்க்க சரியான ஆட்கள் கிடைக்காமல் திண்டாடிக் கொண்டி ருந்தான். உறவினர்களைப் போல இருப்பவர்களே ஏமாற்றுகிறார்கள்— எல்லா வேலைகளையும் அவனே கவனிக்க வேண்டியிருந்தது...

ஃ ஃ ஃ

ராமகிருஷ்ணன் காரில் வெளியே போன பத்து நிமிஷத்திற்கெல்லாம், தாயம்மாள், புருஷன் கொமரசாமி பின் தொடர ராமகிருஷ்ணன் தோட்ட வீட்டின் காம் பௌண்டுக்குள் தயங்கி, தயங்கி நுழைந்தான்.

மாடுகளுக்கு சோளத்தட்டையை உதறிப் போட்டு விட்டுத் திரும்பிய ராமகிருஷ்ணனின் தாயார் செல்லத் தாயி தாயம்மாளைப் பார்த்துவிட்டு ஆத்திரத்துடன் அவளிடம் வந்தாள்...

எங்கடி இங்கே வந்தே? செருக்கி நாயே. கவுண்டம் போயி ரெண்டுமாசமாவது எளவு வெசாரிக்க வந்தியாடி மூதி...போடி வெளியே வந்துட்டாளுவ அறுத்துக் கட்டிக் கிட்ட பரிசனோட...ஏண்டி உனக்கு வெக்கமா இல்லே... நீ செஞ்ச காரியத்திலே தாண்டி கவுண்ட மனசு ஒடஞ்சு செத்துப் போனாங்க... இன்னும் யார முளுங்க இங்கே வந்து நிக்கிறே...''

தாயம்மாளின் முகம் அவமானத்தால் சிறுத்துப் போனது.

மௌனமாகவே நின்றாள்.

''நாய குளிப்பாட்டி வூட்டுஉள்ளாற வுட்டா அது தெரு மேயத்தாண்டி போவும்... பொண்ணு எடுக்கற போதே கவுண்டகிட்டே சொன்னேன். அந்தாளு அத எங்கே கேட்டுச்சு. அது நல்ல குடும்பம் பெரிய குடும்பம் நல்ல சாதி சனங்கன்னு சொல்லி, என்னயும் அடக்கி என் மவனையும் அடக்கிட்டாரு. என்ன ஆச்சு கடைசிலே ஊரிலே இஸ்தாரு (தண்டோரா) போடர மாதிரி குடும்ப மானத்தையே கோயில் பஞ்சாயத்துக்குக் கொண்டாந் துட்டு இங்கே எவனடி தேடி கீணு வந்தே...போ...போ...

ராமகிருஷ்ணனின் தாயார் பேசிக் கொண்டே வீட்டிற் குள் நுழைந்து மறைந்து விட்டாள்...

வேகமாக கதவு சத்தப்படும் ஓசையும் கேட்டுவிட்டது.

இந்த வீட்டின் கதவு மட்டும் தானா சாத்தப்படுகிறது? பல நாட்களாக தாயம்மாளுக்கும் கொமரசாமிக்கும் அவர் கள் சமூகத்தினரின் வீட்டுக்கதவுகள் எல்லாமே தான் சாத் தப்படுகின்றன.

அருத்துக்கட்டினவள் என்கிற காரணத்தினால் அவர் கள் ஊரில் நடக்கும் எந்த நல்லது கெட்டதிற்கும் போக முடிவதில்லை. ஓரளவு மறைமுக பகிஷ்காரமும். உதாசீனங்

களும் நிகழ்வதால் அவர்கள் பிற்பட்டு அம்மாதிரி நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதில்லை. இந்த பகிஷ்காரம் அவர்கள் அன்றாட வாழ்க்கையை பாதிக்கக்கூடிய அளவு போய் விடவே அந்த வட்டாரத்தில் வாழ்க்கை நடத்துவது கஷ்டமாக இருந்தது...

ராமகிருஷ்ணன் காரை சாலையோரத்தில் நிறுத்தி விட்டு சேஷஞ்சாவடியில் உள்ள தனது பாக்குத்தோப்பில் நின்று கொண்டிருந்தான். பாக்குத்தோப்பு முடிவடையும் இடத்தில் கரும்புத் தோட்டமிருந்தது. கரும்பின் வெண் பட்டு போன்ற நீளமான பூக்கள் காற்றில் அழகாக ஆடிக் கொண்டிருந்தன.

எல்லாம் அறுவடைக்குத்தயார் ஆகி விட்டன.

அதை ஆள்வைத்து வெட்டுவதா அல்லது அப்படியே விலை பேசி அறுத்துக்கொண்டு போய்விடச் சொல்வதா என்ற எவ்வித முடிவும் எடுக்க முடியாத நாட்கள்.

பாக்குத் தோப்பைக் கடந்து கரும்புக் காட்டருகில் வந்து நின்றான் ராமகிருஷ்ணன்,

''கும்புர்ரேனுங்க''

பெண் குரல் கேட்டு திரும்பிப்பார்த்தான். தாயம்மாள் நின்று கொண்டிருந்தாள்.

அவளைப் பார்த்தவுடன் அவன் உடம்பெல்லாம் ஒரு மூறை அவனை அறியாமல் சிலிர்த்து அடங்கியது.

அவனிடமிருந்து துரும்பு வாங்கிப்பிரித்து போனதிலிருந்து அவளை அவன் பார்க்கவேயில்லை. ஆனாலும் அவளைப்பற்றின சிற்சில செய்திகள் மட்டும் காதில் வந்து விழும்...

வியாபாரத்தில் நஷ்டமேற்பட்டு கொமரசாமி தொழில் ஏதும் இல்லாமல் கஷ்டப்படுகிறான், என்றும் ஊரில் அவர்

களை யாரும் எதற்கும் அழைப்பதில்லை. என்றும் தாயம்மாள்தான் அவ்வப்போது ஏதேனும் வேலைக்குப் போவதாகவும் செய்திகள் வரும்...

"என்ன தாயி சௌக்கியமா இருக்கியா"

"அய்யாவ பாக்க வூட்டுக்குப் போனேன். ஆத்தா கோவமா ஏசிச்சு...பதிலு பேசாம வந்திட்டேன்.

"என்ன பாக்க வந்தியா! கொமரு சுகமா இருக்கா"

"அதுவும் வந்திருக்கு உங்கள பாக்க வெக்கப்பட்டுக் இட்டு அதோ அங்கேயே நிக்கிது...

"கொமரு வந்திருக்கா......கூப்பிடு அதை என்ன பாக்க என்ன வெக்கம்?"

தூரமாக ஒரு மரநிழலில் அவன் நின்றான். கையசைத்து அவனை அழைத்தாள். அவன் வந்தான்.

"வணக்கமுங்க"

"வணக்கம் சுகமா இருக்கியா...இப்ப எங்கே இருக்கே என்ன பண்றே...!"

கொமாரசாமி தயங்கியபடி தாயம்மாளைப் பார்த்தான்

அது வெசயமாத்தான் அய்யாவ கண்டு கிட்டு போவலாம்னு வந்தோம்...

அருகில் ஒரு பெரிய காட்டுக்கொட்டகை இருந்தது. அதற்கு வெளியே கயிற்றுக் கட்டிலொன்றும் கிடந்தது.

"இந்தக் கொட்டாயில ஆரும் இல்லீங்களா?"

"இல்லதாயி. இதிலே விவசாய பண்ணய பாத்துகினு அத்தனூர்காரன் இருந்தான். அவன் கொஞ்சம் விவகாரம் பண்ணிகிட்டு காலி பண்ணிட்டுப் போயிட்டான்... இப்ப ஆறுமாசமா— காலியாத்தான் இருக்குது...

ராமகிருஷ்ணனுக்கு கட்டிலைத்தட்டி நிமிர்த்துப் போட்டுவிட்டு அவனுக்கெதிரே தரையில் உட்கார்ந்த தாயம் மாள், தன் கணவன் கையைப் பிடித்து இழுத்து அவனையும் உட்காரவைத்தாள்.

"அய்யாகிட்டால ஒரு விண்ணப்பம்—

தாயம்மாள் தயங்கிக்கொண்டே ஆரம்பித்தாள்...

"சொல்லுதாயி... என்ன வெசயம்"

"அய்யா பாத்து எங்களுக்கு ஒரு வழி காட்டினா... உபகாரமா இருக்கும். ஊர்ல எந்தக் காட்டுக்காரன்களும் வேலதரமாட்டேங்கறாங்க. சாதிசனங்களும், அறுத்து கட்ன வளுக்கு இங்க என்ன வேலன்னு வூட்டாண்ட போனா கதவ சாத்திக்கிறாங்க... அல்லா சனங்களும் எங்கள கை கழுவி விட்டாங்க இதுக்கும் இப்ப வாவாரம் ஒண்ணும் தோதா அமைல. சோத்தாண்ணிக்கே கஷ்டப்பட்டு கினு ஊர் ஊரா அலஞ்சுகிட்டு இருக்கோம். கடேசியா உங்க நாபகம் வந்திச்சு. எந்த நாயி எதுவேனா சொலிட்டுபோ வட்டும். வா நாம கவுண்டர பாத்துட்டு வரலாம்னு நாதா இத இட்டு கினு வந்தேன். அய்யா பெரிய மனசு வெச்சு எங்களுக்கு ஒரு வழி பண்ணனும். எங்களுக்கு உங்களவிட்டா வேற நாதியே கிடையாது.

தாயம்மாள் அழுது கொண்டே பேசினாள்.

தாயம்மாளின் அப்பாவித்தனமான இயல்பை பார்த்து நெகிழ்ந்து போனான் ராமகிருஷ்ணன்.

ராணி மாதிரி வாழ வேண்டியவள். பல லட்சரூபாய் பொறுமானமுள்ள காடுகரைகளை நிர்வகிக்க வேண்டியவள். மாரி முத்துக் கவுண்டர் மருமகள் என்றவுடனேயே ஒதுங்கி நின்று வழிவிட்டு நிற்கும் அந்தஸ்தைப் பெற்றிருக்க வேண்டியவள்.

பட்டுப்புடவையும், கழுத்து நிறைய நகைகளும், காதில் மலர்ந்த மல்லிகைப்பூ அளவில் வைரத்தோடும், முழங்கை வரை தங்க வளையலுமா இருக்க வேண்டியவள்; இவள் அளக்கும் நெல்லுக்காக காத்துக்கொண்டிருக்க, களத்து மேட்டில் நாற்காலியில் உட்கார்ந்து ஆட்களிடம் வேலை வாங்க வேண்டியவள்... இப்படியொரு உன்னதமான வாழ்வை காதலுக்காக உதறிவிட்டுப் போனவள்.

இவள் அதை அறியாமையில் செய்தாளா, அறிந்தே செய்தாளா. எப்படிச் செய்திருந்தாலும் அது அவளாகத் தேடிக் கொண்டதுதான். இதற்கு யாரும் பொறுப்பாக முடியாது.

இப்பொழுது பிழைப்புக்கே அலைமோதுகிறாள் என்றால், அதற்கும் அவள்தான் காரணம். ஆனால் அதன் பாதிப்பு அவளிடத்தில் கொஞ்சம்கூட இல்லை. மனத்தளவில் அதற்கான துக்கம் இருப்பதாகத் தெரியவில்லை.

இவைகளில் ஒன்றுகூட உணராமல் இப்படியொரு நாடோடிபோல அலைகிறாளே. இப்படி அலைவதற்கான காரணத்தை புரிந்து கொண்டிருப்பாளோ.

ராமகிருஷ்ணன் நீண்டநேரம் மௌனமாக இருந்தான்.

"அண்ணன்காரன் செங்கோடங்கூட வூட்டாண்ட வராதேடின்னு கறாறா சொல்லிட்டான். அய்யா பெரிய மனசு பண்ணி எங்களுக்கு உதவணும்.

ராமகிருஷ்ணன் அவள் கெஞ்சுவதைப் பார்த்து மனம் கலங்கிப்போனான்.

"நீங்க இனிமே எங்கேயும் போகவேண்டாம். இங்கேயே இருந்து எங்க காட்ட பாத்துக்க கொமரு. பொய்புரட்டெல்லாம் ஆவாது. யோக்கியமா நடந்துக்க...நீயும் எடுத்துக்க... எனக்கும் குடு... அல்லா பொறுப்பையும் உங்க ரெண்டு

பேத்துகிட்டேயே ஒப்படைக்கிறேன். இதோ இந்த சால கொட்டாயிலேயே இருந்துக்குங்க... பண்ண வேலையெல்லாம் செய்வீல்ல...

"ஒ... தாராளமா செய்யுமுங்க... நானும் செய்வேணுங்க..."

"நம்பகமா ஒரு ஆளத்தான் நானும் தேடிக்கினு இருந்தேன்...நீ எங்கேயும் போக வேணா...இனிமே ஆயுசுக்கும் நம்ம காட்டோட இருந்துக்க. ஆனா ஒண்ணுமட்டும் சொல்றேன், ஏற்கனவே நடந்த விவகாரம்தான் ஊரறிஞ்ச தாச்சே. இப்ப உங்கள என்னோட காட்ல குடி வெச்சா... சனங்க அப்படி இப்படித்தான் பேசுவாங்க.. அதையெல்லாம் கண்டுக்கப்படாது. நாம உண்டு நம்ப வேல உண்டுன்னு போயிடணும்..."

"அதையெல்லாம் சரிபண்ணிக்கிறோமுங்க,"

"நல்ல நாள் பாத்து சாலக்கு வெள்ள அடிச்சுக்க... சட்டு புட்டுன்னு தாயிய கூட்டிக்கினு வந்து சேரு .."

பையிலிருந்து சில நூறு ரூபாய் நோட்டுகளை எடுத்து கொமரசாமியிடம் நீட்டினான் ராமகிருஷ்ணன்—

அவன் தயங்கினான்.

"வாங்கிக்க. இனி அய்யாதான் நமக்கு எல்லாம், தெய்வம் மாதிரி, அது குடுக்கறத தட்டாம வாங்கிக்க"

அவனை இழுத்துக் கொண்டு ராமகிருஷ்ணன் காலில் விழுந்தாள் தாயி.

அவர்களை தூக்கி நிறுத்திவிட்டு அவனும் எழுந்து நின்றான்.

தாயம்மாள் உடல் குலுங்க அழுது கொண்டே பேசினாள்...

"உங்களை கட்டிகிட்டேன். பொறனால இது மேலே நா உசிரையே வச்சிருக்கேன்னு சொன்னவுடனே நீங்களே துரும்புக்கு ஏற்பாடு பண்ணி, என்ன இவருகூட சேத்து வச்சீங்க... இதுனால உங்க மனசு நோகறமாதிரி நடந்து கிட்டேன். எதையும் மனசிலே போட்டுகிடாதீங்க... எங்க கண்ணு முன்னால நீங்களும், ஒங்களுக்கு ஏத்த படிச்ச பொண்ணா, பெரிய இடமா பாத்து கண்ணாலம் கட்டிக் கணும். உங்களுக்கும் நீங்க கட்டிக்க போற அந்த ராசாத் திக்கும் ஆயுசுபூரா சேவகம் செய்யோணும் — அதுதான் என்னோட ஆசை... இந்த ஏலைக்கு அந்த பாக்யம் கெடச் சாலே போதுமுங்க...

"தாப்பாரு கொமரசாமி. இனிமே என்னோட காடு, தோப்பு, வெள்ளாம, எல்லாத்தியும் நீ தான் பாத்துக்கப் போறே... அப்பப்ப அறுவடைக்கும் வெள்ளாம வேலைக்கும் ஆளுகள கூட்டிக்க. எந்தக் காரணத்தினாலேயும் வேலையில சொனக்கம் வரக் கூடாது. எனக்கு உன்ன அதிகமா தெரி யாது. ஆனா செங்கோட தங்கச்சி இத தெரியும். இவ நல்லா இருக்கணும். இவளோட வாழ்க்கையிலே கஷ்டம் வந்திரக் கூடாதுங்கிற ஒரே காரணத்தினால, தாயி சொன்ன துனால, நா ஏதும் யோசிக்காம இந்தப் பொறுப்பை உன்னிடம் மட்டுமல்ல தாயிடமும் சேர்த்தே ஒப்படைக் கிறேன். ரெண்டு பேரும் நல்லபடியா இருந்தீங்கன்னா.. ஆயுல்முச்சூடும் இங்கனயே காலந்தள்ளலாம்..."

"நீங்க என் தெய்வமாச்சே. உங்களுக்கு துரோகம் பண்ண நெனச்சா அப்பிடியே அளுவி, புளுவாப் போயிடு வோம்... இதுவும் அப்பேர் கொத்த ஆளு இல்லை... நீ என்ன நம்பரேன்னு சொல்லிட்டீல்ல... ஒங்க உடம்புக்கு நான் துரோகம் செய்ய மாட்டேன். ராசா...!

தாயம்மாள் துக்கம் தொண்டையை அடக்கக் கூறினாள்...

அவளிடம் அந்த மண் குடிசை வீட்டுச் சாவியை கொடுத்துக் கொண்டே.

இந்தா இந்த வீட்டோட தொரக்குச்சி. வீட்ட நல்லா சுத்தம்பண்ணி சுண்ணாம்பு அடிச்சு சீக்கிரமா குடிவாரப் பாருங்க...

சாவியை இரண்டு கைகளில் பெற்றுக் கொண்ட தாயம்மாள் அதை கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

இருபுரமும் வளர்ந்து நிற்கும் கரும்புச் சோலைகள் தோளில் உரச வரப்பில் நடந்து காருக்கு வந்தான்.

ஃ ஃ ஃ

தாயம்மாளையும், கொமரசாமியையும் காட்டுக் கொட்டையில் குடிவைத்ததை அவன் தாயார் கடுமையாக எதிர்த்தாள்.

ராசா கணக்கா இருக்கற ஒன்ன வேணாம்னு சொல்லிட்டு யாரோ ஒரு பொறம் போக்கு நாய் பின்னால ஓடினவ அவள வெளக்கமாத்துல அடிச்சு வெரட்டாம, நம்ம காட்டு கொட்டாயிலே கொண்டாந்து குடிவச்சிருக்கியே, அந்த சிறுக்கிய...

“விடம்மா பாவம்... அவ என்னிடம் துரும்பு வாங்கி பிரிஞ்சு போனாங்கறத தவிர உனக்கோ, எனக்கோ பெரிசா எந்தவித தீங்கும் செஞ்சுடல... ராணி கணக்கா வாழ வேண்டிய. அவ தலையெழுத்து அனாத மாதிரி அண்டி வாழற வாழ்க்கையை அவளே தேர்ந்தெடுத்துக்கிட்டா... வுடு... போவட்டும்... மத்தபடி தாயி ரொம்ப வெகுளி அம்மா... கபடு, சூது இல்லாத பொண்ணு. பொய், பொரட்டு இல்லே... நமக்கும் காட்டு பண்ணயத்துக்கும் நம்பிக்கையான ஆள் வோணும்ல...

"சரி போ. உன் மனசுக்கு புடிச்சிருந்தா சரிதா... கவுண்டனே பூட்டாரு. நான் இன்னும் எத்தன நாளு இருக்கப் போறேனோ.

தாயாரையும் ஒரு மாதிரியாக சமாதானம் செய்து விட்டான்...

தாயம்மாளையும், கொமரசாமியையும் நம்பி காடு கரைகளை விட்டபின், களத்துமேட்டில் அறுவடைகள் வேகமாக நடந்தன. ஒரு விளைச்சலின் உண்மையான அளவு என்ன என்பதை புரிந்து கொள்ள முடிந்தது அவனுக்கு..

அறுவடையின்போது தூரமாக நின்று அறுவடையைக் கவனிப்பதுபோல தாயம்மாளையும், கொமரசாமியையும் கவனிப்பான் அவன்.

அவர்கள் முகங்களில் படிந்திருக்கும் அந்தச் சந்தோஷப் படிவங்கள், அவனுக்கும் சந்தோஷத்தைத் தந்தது.

ஃ ஃ ஃ

வீரன் கொலை வழக்கில் தூக்கு தண்டணை விதிக்கப் பட்ட பழனிச்சாமிக்கு இன்று தூக்கு...

உள்ளூர் செய்தித்தாள்களில் எட்டுபத்தி அளவில் போட்டு அதைப் பிரபலப்படுத்திக் கொண்டிருந்தன.

சுப்ரீம் கோர்ட் அவன் மரண தண்டனைத் தேதியை ஊர்ஜிதம் செய்துவிட்டது. கருணை மனுவும் நிராகரிக்கப் பட்டுவிட்டது.

ஃ ஃ ஃ

சேஷஞ்சாவடி காட்டில் கடலை, நெல், கரும்பு எல்லா அறுவடையும் முடிந்து நிலங்கள் அடுத்த வெள்ளாமைக் கு

தயாராகிக் கொண்டிருந்த நாட்களில் ஒருநாள் மாலை நேரம்,

துன்பத்தில்தான் துயரம் ஏற்படும் என்பதில்லை. அது இன்பத்திலும் பிறக்கலாம். தாயம்மாளுக்கு அவள் விரும்பிய இன்பமயமான வாழ்க்கையை அமைத்துக் கொடுத்துக் விட்டு அது ஏற்படுத்திய பாதிப்பில் சோர்ந்து போயிருந்தான் ராமகிருஷ்ணன்.

ஆழமான மனோதத்துவங்கள் பற்றி தாயம்மாளுக்கு ஏதும் தெரியாது. அவள் எல்லாவற்றையும் மிகச் சாதாரண மாகவே எடுத்துக் கொண்டு சாதாரணமாகவே இருக்கிறாள். ஆனால் ராமகிருஷ்ணனுக்கு அந்த நிகழ்ச்சியின் வெப்பம் தணிய கொஞ்ச நாள் பிடித்தது.

புதிய வெள்ளாமைக்காக நிலங்கள் தயாராக இருப் பதைப் பார்த்துக் கொண்டிருந்தபோது, தூரத்தில் மயானம் நோக்கி ஒரு பிணம் போய்க் கொண்டிருப்பது தெரிந்தது. ஆர்ப்பாட்டமில்லாமல், ஆடம்பரம் அதிகமில்லாமல் இருந் தாலும் கூட்டம் அதிகமாகவே இருந்தது.

தாயம்மாளும், கொமரசாமியும், ராமகிருஷ்ணனுக்குப் பின்னால் வந்து நின்றார்கள்.

"ஆர தூக்கியாறாங்க."

தாயம்மாளின் குரல் பின்னால் கேட்டது. அதற்கு கொமரசாமி பதில் சொன்னான்.

"பழனிச்சாமியத்தான் தூக்கியாராங்க."

"வீரன கொலை செஞ்சுபுட்டு செயிலுக்குப் போச்சே அதா. தூக்கப்போறாங்கன்னு ஊரேகமா பேசிட்டாக."

"இன்னிக்கி கருக்கல சேலம் சென்ரல் ஜெயில்ல தண்டனைய நிறைவேத்திட்டாங்க."

"தூக்கா!"

"ஆமா"

காற்றுவேகமா அடித்தது. மரத்திலிருந்து முகத்தி லடிக்கிறமாதிரி பூவரசம் இலையொன்று ராமகிஷ்ணன் முகத்தில் பட்டு கீழே விழுந்தது. பார்வையை தூரத்தில் போகும் சவ ஊர்வலத்தில் பக்கமும், காதுகளை தாயம் மாள் கொமாருபக்கமுமாக திருப்பிக் கொண்டு நின்றான்.

"இன்னிக்கி காலமேதான் தண்டனை நிறைவேத் தினாங்க. காலமேயே அவிய ஊர் சனங்க சொந்தக் காரங்க அல்லாரும் செயிலுக்கு போனாங்களே பாக்கலியா? ஆடம்பரமில்லாமே ஊரைக் கூட்டாம ஈமக்காரியங்கள செய்யறதா எழுதிக் கொடுத்துட்டு... பாடிய வாங்கி யாந்திருக்காங்க. அதா தேர் ஜோடானயெல்லாம் இல்லே, மதியத்திலதான் பாடிய தந்தாங்களாம், சென்ட்ரல் செயில்லேருந்தே பாடிய தூக்கியாந்து பேருக்கு பத்து நிமிஷம் வூட்ல வச்சுப்புட்டு நேரே மயானத்துக்குக் தூக்கியாறாங்க."

"அது என்ன கருமமோ... புத்தியில்லாத பயலுவ எம்புட்டுதா நடக்கட்டுமே. எதாங்காட்டியும் அவியளுக்குள் ளார பேசி ஒரு சமரசமா போவ மாட்டாங்க?பொண்டாட்டி வண்டிக்காரனோட இருக்கறத வச்சிகிட்டு கடேசிலே அருவாள்லே போட்டு தள்ளினா மட்டும் எல்லா சரியா பூடுமா... இன்னக்கி என்ன ஆச்சு... இப்ப ஆருமே இல்லே அவள விரும்பினவனும் இல்லே, இந்த ராஸ்கோல் கொஞ்சம் புத்தியோட நடந்திருந்தாஎன்ன? அவிய மூணுபேருமே உயிரோட வாழ்ந்து இருக்கலாமில்லே.

கொமரசாமியும், தாயம்மாளும், அவனருகில் பின்புற மாக நின்றவர்கள் பேசிக்கொண்டே மயானம் நோக்கிப் போகும் ஒரு வரப்புத்தடத்தில் நடந்து, ஓரிடத்தில் தூரமாக நின்று ஊர்வலத்தை வேடிக்கை பார்த்தனர்.

"புத்தியில்லாத பயலுவ எம்புட்டுதா நடக்கட்டுமே. எதசங்காட்டியும் அவியளுக்குளார பேசி ஒரு சமரசமாபோக மாட்டாங்க.

இன்னிக்கு என்ன ஆச்சு. இப்ப ஆறுமேயில்லே. ஆசைப் பட்டவளும்இல்லே. கட்டிக்கிட்டவனும் இல்லே. அவளவிரும் பினவனும் இல்லே. இந்த ராஸ்கோல் கொஞ்சம் புத்தியோட நடத்திருந்தா என்ன... அவிய மூணுபேரும் உயிரோட வாழ்ந்திருக்கலாம்.

குமாரசாமியின் இந்த வார்த்தையில் ராமகிருஷ்ண னின் சிந்தனை சுழியிட்டு நின்றது.

As compared to the Oether Sages Narada is a Progre-ssive Sage. Narada Confers right on Women to hold and Inherlty. He is certainly not as harsh as Manu is. He also recognises that in certain circumstances a womet can leave her husband and take anoter Narada condemmed usury.

நன்றாக இருட்டு மூடிவிட்டது. நீண்டநேரம் அதே இடத்தில் நின்று கொண்டிருந்தவன் பார்வையில் தூரத்தில் பழனிச்சாமியின் சிதை புகைவதும், பிறகு எரிவதும் தெரிந்தது.

அவன் படித்த இந்து சட்டத்தில் ஸ்மிருதிகள் பற்றி வரும் பகுதிகள் நினைவுக்கு வந்தன மதுவிலிருந்து நாரதன் எவ்வளவு வேறுபடுகிறான்.

தர்ம சாஸ்திரம் அதிலிருந்து சுத்திகரிக்கப்பட்ட ஸ்மிருதி. அவைகளிலிருந்து விரிவுபடுத்தப்பட்ட மனித தமர்மங்கள், இதையொட்டின சட்டங்கள், எதுவுமே எந்த இடத்திலுமே நியாயங்கள் தண்டிக்கப்பட்டதாக குறிப்புகள் இல்லை. மனிதனுக்கு மனிதன் தண்டனை கொடுத்துக்

கொள்வதை இவை எல்லாமே எதிர்க்கின்றன. அரசனும், அவன் குடும்பத்தாரும் குற்றமிழைத்தால்கூட சட்டத்னால் அவனை தண்டிக்கலாம் என்று யக்ஞவல்லிகஸ்மிரிதி கூறுகிறது. ஒரு பொதுவான மனிதநேயம் மனித உறவு என்பது அந்தந்த சமூக கலாச்சார பழக்க வழக்கங்களை அதன் அடிப்படை தாத்பர்யங்களுடன் அங்கிகரிப்பதே. இதில் யாரையும் யாரும் தண்டிக்க உரிமை கிடையாது. தண்டிப்பதும் ஒரு சமூக கலாசார பழக்கவழக்கங்ளை கேலி செய்வதும் வெறும் கோழைத்தனம்.

தர்மஸாஸ்திரங்களே காலத்திற்கு காலம் மாறுபட்டுக் கொண்டிருக்கிறது.

ஹிந்து தர்மஸாஸ்த்தரங்களிலிருந்து சற்றே மாறுபட்ட கௌதமனே ஹிந்து தர்மத்தின் ஒரு பிரிவான சாமவேதி என்கிறது வரலாறு. அது கூட ஒரு மனிதக்கூட்டம் அதன் பரம்பரை பழக்கவழக்கங்களுடன் இணைந்திருப்பதை வெறுக்கவில்லை.

வேதம் என்பது சட்டமல்ல, அது பலதரப்பட்ட மக்களின் வாழ்க்கையின் கூறுகளை வெவ்வேறு திசைகளிலிருந்து எடுத்துச் சொல்லும் அறிவுத் தொகுப்பு என்கிறார் ஆபஸ்தம்பர் என்கிற ரிஷி.

தர்ம சாஸ்திரம் என்பது வெறும் வேதநூல் அல்ல. அது மனிதனின் கடமைகளை நேர்படுத்தும் வழிகாட்டி மட்டுமே.

குடி உரிமைச் சட்டங்களை அதிகம் ஆராய்ந்து வகுத்த நாரதர் பதினெட்டு அதிகாரங்களில் நூற்று முப்பத்திரண்டு பிரிவுகளைப் பிரித்தான். இவை எல்லாக் காலத்திற்கும் பொறுத்தமுடையதாகவே இன்றுமிருக்கிறது.

மநு தர்மத்தின் அவன் காலத்திலேயே மாறுபட்ட கருத்தை சொன்னவர்கள் உண்டு. மநுவை ஒரு மூல மருந் தாகக் கொண்டு சமூக நோய்களுக்கு அவ்வப்பொழுது ஏற்படும் தேவைகளுக்கேற்ப மாற்று மருந்து கண்டு நிலை நாட்டியவர்களும் உண்டு.

Whatever manu says is medicine manu's pre—eminent position is accepted not only by hindu law givers but also the buddist writers of java, siam, and burma.

அவன் அரசனாகவே இருந்தாலும்கூட, எக்காரணத்தைக் கொண்டும் அவனுக்கோர் வானலாவிய புனிதப் போர்வை யைப் போர்த்தி, அவன் செய்யும் தவறுகளிலிருந்து அவனை காப்பாற்ற நினைப்பதை யக்ஞவல்லீகர் ஏற்கவில்லை.

Yet he does not want to cloth him with any divine authority to rule.

சமூக விதிமுறைகளுக்கு முக்கியத்துவம் தரும் யக்ஞவல்லீகர், பழைமையை மக்கள் மேலே திணிப்பதை ஏற்கவில்லை.

One should not practise that which though ordained by the smirity is condemend by the people.

ராமகிருஷ்ணன் அந்திசாய்ந்து இருட்டிவிட்ட அந்த [illegible]த்தில், தான் படித்த ஹிந்து தர்ம சட்டங்களையெல் [illegible]நினைவுபடுத்திக்கொண்டு கரும்புகள் வெட்டப்பட்ட [illegible]ப்பொன்றில் நின்று கொண்டிருந்தான். காற்றில் [illegible]ட்டிப்பறந்தது,

[illegible]விட்டேனோ. செங்கோடன் [illegible]ளை மிரட்டி பணியவைத் [illegible]ம்மதிக்க முடியாது என்று

சொல்லியிருந்தால் ஒருவேளை அவள் அடங்கிப் போயிருப்பாளோ.

அவனுக்குள் சிரித்துக்கொண்டான்.

அவனுக்கு தான் செய்த செய்கைகளின் பேரில் தவறு இரும்பதாகத் தோன்றவில்லை,

தான் செய்த காரியத்துக்கு சாஸ்த்ர மற்றும் சட்ட ஒப்புதல் அவன் உணர்ந்தேதான் செய்தான்...

நான் பழனிச்சாமிமாதிரி செயல்பட முடியாது, கூடாது. பிறகு அவனுக்கும் எனக்குப் என்ன வித்தியாசம்?

அவன் செய்கைக்கு அவன் மனம் நியாயங்களைத் தேடிக் கொண்டிருந்தது.

தாயம்மாளின் வீட்டில் பிரகாசமாக எரியும் விளக்கைப் பார்த்தவுடன், அவன் தேடிய நியாயம் கிடைத்துவிட்ட திருப்தி வந்துவிட்டது. அவள் மனதில் தான் இல்லை. இல்லவேயில்லை. மனதையும், உடம்பையும் வேறு ஒருவனுக்கு சொந்தமாக்கிவிட்டு, வெறுங்கூடுபோல என் அருகில் வந்து நின்று, நான் கட்டிய தாலியை ஒரு பெண்மை யின் சம்பிரதாயங்களுக்காக மட்டுமே ஏற்றுக் கொண்டவள். அவள் எதையுமே மூடி மறைத்து சாகஸம் செய்யவில்லை,
நாடகமாட விரும்பவில்லை. திருட்டுத்தனங்கள்
வில்லை. தாலியை ஏற்றுக்கொண்டபின்பும், கா
சந்தித்தை மறைத்துவிட்டு பொய்மையில் உ... அல்ல.
துரோகம் செய்யவில்லை. காதலனை ... வழிகாட்டி
கொண்டு புருஷனுடன் படுக்கை
வில்லை. தூரத்தில், மயானத்
எரிவதும் மரங்களுக்கு நடுவே ...ள அதிகம் ஆராய்ந்து வகுத்த
...ரங்களில் நூற்று முப்பத்திரண்டு
இரண்டும் ஒருவகையர். இவை எல்லாக் காலத்திற்கும்
...கவே இன்றுமிருக்கிறது.

ஆனால்...

இரண்டிற்கும் நடுவேதான் எவ்வளவு பெரிய வித்தியாசம்...

மயானத்தில் எரிவது இருவரைக்கொன்று, தானும் அழிந்ததை கூறிக்கொண்டிருக்கும் நெருப்பு'

இங்கே குடிசையில் எரிவது...தானும் வாழ்ந்து, மற்ற இருவரையும் வாழவைத்துக் கொண்டிருக்கும் நெருப்பின் மற்றொரு முகம் தீபம்.



